மலர் - 1 இதழ் - 9



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்
மார்ச் 2023
தனிச்சுற்றுக்கு மட்டும்

ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி



## பிப்ரவரி 21

## அனைத்துலக தாய் மொழி தினம்


மயிலாடுதுறை சாரங்கபாணி
1947-1965


மாணவர் இராஜேந்திரன்
1947-1965


கீழப்பழுவூர் சின்னசாமி
1915-1939


தாளமுத்து
1915-1939


சத்தியமங்கலம் முத்து
1942-1965


பீளமேடு தண்டபாணி
1944-1965


கோடம்பாக்கம் சிவலிங்கம்
19141-1965


அய்யம்பாளையம் வீரப்பன்
1938-1965


அரங்கநாதன்
1931-1965


நடராசன்
1919-1939


விராலிமலை சண்முகம்
1945-1965


கீரனூர் முத்து
1943-1965

நாளும் வணங்குவோம்,
தமிழ் மண்ணிற்காக உயிர்த் தியாகம் செய்த
உன்னத உள்ளங்களை!

அன்பளிப்பு உரூபாய்: 120/-

தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-1* *மார்ச் – 2023* *இதழ்-9*

***சிறப்பாசிரியர்***
*பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி*

***நிறுவனர் & தலைமைப் பதிப்பாசிரியர்***
*முனைவர். திருமதி செ. இராஜேஸ்வரி*

***பொறுப்பாசிரியர்***
*முனைவர். சந்திரிகா சுப்பிரமணியன்*

***ஆசிரியர் குழு***
*கிங்ஸ்டன் ஜெகநாதன் (இந்தியா)*
*தேமொழி (அமெரிக்கா)*
*அன்பு ஜெயா (ஆஸ்திரேலியா)*
*மின்னச்சன் இங்கர்சால் (நோர்வே)*
*Dr. புதேரி தானப்பன் (டில்லி)*

***வடிவமைப்பு***
*C. சந்திர விமல் M.A., B.Ed*

*தனி இதழ் ............................................. ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................. ரூ 600*
*ஆண்டு சந்தா......................................... ரூ 1200*

Google Pay / Phone Pay *மூலம் செலுத்த*
*+91 7010997639*

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

*கட்டுரைகள் அனுப்புவோர்*

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com *க்கு அனுப்பவும்*


*இவ்விதழில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் அனைத்தும் கட்டுரையாளர்களின் கருத்துகளே ஆகும். அந்த கருத்துக்களுக்கும் இதழாசிரியருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.*

*- இதழ் ஆசிரியர்*

# தமிழின் சிறப்பு

யாமறிந்த மொழிகளிலே
தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணோம்
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும.

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வாள்ளுவர்போல், இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை
ஊமையராய்ச் செவிடர்களாய்க்
குருடர்களாய்
வாழ்கின்§ம், ஒருசொற் கேளீர்
சேமமுற வேண்டுமெனில்
தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்.

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல்வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்லுவதிலோர் மகிமை யில்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்.

- மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

## உள்ளடக்கம்

# புலம்பெயர் மண்ணில் தாய் மொழிப் பராமரிப்பு

***(உலக தாய்மொழி தினத்துக்கான சிறப்பு கட்டுரை)***

***முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்***
*வழக்குரைஞர், எழுத்தாளர்,*
*சிட்னி தமிழ் வளர்ச்சி மன்றம், ஆஸ்திரேலியா.*



*ஒரு குடும்பம் புலம் பெயர்ந்து செல்லும் போது அக்குடும்பத்தின் அடுத்து வரும் தலைமுறைகள் பல மாற்றங்களுக்கு உள்ளாகும். அவற்றில் முக்கியமானது தாய்மொழி அடுத்தடுத்து வரும் தலைமுறைகளில் காணாமல் போய்விடும் என்பது. இதன் காரணமாகப் புலம் பெயர்ந்து வாழ்பவர்கள் தங்கள் மொழியைப் பேணுவதும் பராமரிப்பதும் மிக முக்கியமான ஒன்றாகும்.*

*தாய்மொழிப் பராமரிப்பு என்பது ஒரு குழந்தைக்கு அதன் பெற்றோர் புலம் பெயர்ந்து செல்லும்போது அவர்கள் அந்நாட்டில் புழங்கும் புதிய மொழியுடன் அவர்களின் தாய்மொழியையும் பராமரிக்க வேண்டும். இதன்மூலம் தாய்மொழி அறிவை இழக்காமல் இருப்பதை உறுதி செய்ய முடியும்.*

*பல்வேறு காரணங்களுக்காகத் தாய்மொழிப் பராமரிப்பு முக்கியம் என்பது உலகளவில் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மையாகும்,*

***யுனெஸ்கோ உரிமை:***

*ஒரு குழந்தையின் யுனெஸ்கோ உரிமைகளில் ஒன்று தாய்மொழி உரிமையாகும். ஒரு குழந்தையின் தாய்மொழியுடனான தொடர்பு அக் குழந்தையின் சுயமரியாதை, உணர்வு வளர்ச்சி மற்றும் மன ஆரோக்கியத்திற்கு மிகவும் முக்கியமானது. தாய்மொழிப் பராமரிப்பு குழந்தைகள் தங்கள் புதிய நாட்டில் வாழும் போது அவர்களின் அடையாள உணர்வை நிலைநிறுத்த உதவுகிறது. அந்த அடையாளத்தின் அடித்தளத்தில் கட்டமைக்கப்படும் புதிய நாட்டின் வாழ்வுக்கான சவால்களையும், சிக்கல்களையும் சமாளிக்கவும், புதிய நண்பர்களை உருவாக்கவும், பள்ளியில் தங்களுக்குப் பிடித்த பாடங்களில் கவனம் செலுத்தவும் அவர்களுக்கு நம்பிக்கையை ஊட்டும்.*

***குடும்பத்துடன் ஒருங்கிணைப்பு:***

*குழந்தைகள் பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்பிய பிறகு பிறமொழிச் சூழ்நிலையிலிருந்து விடுபட்டு சுமுகமாகக் குடும்ப உறுப்பினர்களுடன் ஒருங்கிணைக்கத் தாய்மொழி உதவுகின்றது.*

**உளவியல் நன்மைகள்:**

பாரம்பரிய மொழிப் பாதுகாப்புக்கும் மாணவர்களின் உளவியல் நலனுக்கும் உள்ள தொடர்பைக் கணிசமான எண்ணிக்கையிலான ஆய்வுகள் நிரூபித்துள்ளன.

**சுயமரியாதை:**

தாய்மொழிப் பராமரிப்பு குழந்தைகளின் சமூக-உணர்ச்சி மற்றும் அடையாள வளர்ச்சியை ஆதரிக்கிறது. தவிர, அவர்களின் சுயமரியாதையை அதிகரிக்கிறது. ஒரு புலம்பெயர் நாட்டிற்குப் புதிதாக வரும் மாணவர்களுக்கு இது மிகவும் பொருத்தமானது.

**கலாசார அதிர்ச்சி தவிர்க்க:**

அவர்களின் வீட்டு மொழிகள் பள்ளியிலோ அல்லது வகுப்பறைகளிலோ பயன்படுத்தப்படும் போது, அவர்கள் எதிர்கொள்ளும் மொழி மற்றும் கலாசார அதிர்ச்சியின் அளவு குறைகிறது, இதன் விளைவாக, அவர்கள் புதிய மொழியையும் மொழி சார்ந்த சமூகத்தையும் உள்வாங்கக் கூடிய நம்பிக்கையை உணர்கிறார்கள்.



**பண்பாட்டு அடையாளம்:**

குழந்தைகள் புதிய சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்ற அடையாளத்துடன் அதேசமயம் தங்கள் அடையாளத்தை இழக்காமல் தாம் வாழும் சமூகத்துடன் ஒன்றிணையக் கற்றுக் கொள்கின்றார்கள் .

**சிந்தனை பகுத்தறிவு:**

சொந்த மொழியில் சிந்திக்கவும் அந்தச் சிந்தனை மற்றும் பகுத்தறிவு தொடர்பான திறன்களை விரிவுபடுத்துவதன் மூலமும் வளப்படுத்துவதன்

*மூலமும் இரு மொழிப் புலமை மாணவர்களின் அறிவாற்றல் திறன்களுக்குப் பயனளிக்கிறது.*

***தீர்வுகளுக்கு உதவும்:***

*குழந்தைகள் தங்கள் சிந்தனைகள், உணர்வுகள் மற்றும் உண்மையான சூழ்நிலைகளின் தீர்வுகளை எட்ட வெவ்வேறு மொழிகளைப் பயன்படுத்தும் முறைகளால் பன்மொழிப் புலமை உதவுகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளில் சிந்தனைகள் வெளிப்படும் போதும் மொழிப் புலமை சரளமாக இருக்கும் போதும், குழந்தைகள் சிந்திப்பதிலும் பிரச்சினைகளைத் தீர்ப்பதிலும் மிகவும் வளைந்து கொடுக்கும் தன்மை உடையவர்களாக இருக்கப் பயிற்றுவிக்கப் படுகிறார்கள்.*

*இவை யாவும் , குழந்தைகளின் கல்வியியல் சாதனைகளுக்குப் பங்களிக்கின்றது, ஏனெனில் இத்தகைய திறன்கள் பள்ளியில் அனைத்துப் பாடங்களிலும் முக்கியமான அறிவைப் பெறுவதற்கு குழந்தைகள் வாழ்வில் பங்கு வகிக்கின்றன.*

***தாய்மொழியைப் பராமரிப்பது எப்படி?***

*1. உங்கள் பிள்ளைக்குத் தாய்மொழியில் புத்தகங்களைப் படிக்கக் கற்றுக்கொடுங்கள்.*

*2. அவர்கள் உறவினருடன் தாய்மொழியில் உறவாடவும், கடிதம் எழுதவும், தொலைபேசியில் பேசவும், வாழ்த்து அட்டைகள் அனுப்பவும் வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுங்கள்.*

*3. உள்ளூர் பண்பாட்டுக் கலாசார நிகழ்வுகளில் கலந்துகொள்ளத் தவறாதீர்கள்.*

*4. தாய்மொழியில் பேசக் கூடிய நண்பர்களை அழைத்து அல்லது அவர்கள் வீட்டுக்கு உங்கள் குழந்தைகளை அழைத்துச் சென்று விளையாட விடுவதன் மூலம் தாய் மொழியை மேன்மேலும் கற்றுக்கொள்வார்கள்.*

*5. தாய் மொழி சார்ந்த விளையாட்டுக்களை அறிமுகப்படுத்துங்கள்.*

*6. தாய் மொழி சார்ந்த தொலைக்காட்சி நிகழ்வுகளைப் பார்க்க அனுமதியுங்கள்.*

*7. முக்கியமாக நீங்கள் குழந்தைகளுடன் தாய்மொழியில் பேசத் தவறாதீர்கள்.*

*பண்பாட்டுச் செறிவு மிக்க ஓர் இல்லத்தில் மொழியும் பண்பாடும் நின்று நிலைக்கும்.*

# பெண்ணடிமை நிலை குறித்து பெரியாரின் பார்வை

**முனைவர் தேமொழி**
*சான் ஃபிரான்சிஸ்கோ, அமெரிக்கா*



*பெண்களின் பாலின சமத்துவம் மற்றும் பெண்களின் அதிகாரம் ஆகியவற்றை மேம்படுத்தும் நோக்கில் பல நடவடிக்கைகளை ஐக்கிய நாடுகள் நிறுவனம் தொடர்ந்து மேற்கொண்டு வருகிறது. ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின் அறிக்கை ஒன்று பெண்களின் தற்போதைய முன்னேற்ற நிலையைக் கருத்தில் கொண்டால், ஆண்களுக்கு நிகரான சட்ட உரிமைகளும் பாதுகாப்புகளும் பெண்களுக்குக் கிடைக்க இன்னும் 286 ஆண்டுகள் ஆகலாம் என்று குறிப்பிட்டுள்ளது.*

*பெண்மையைப் போற்றுகிறோம் என்று உலக மகளிர் நாளைக் கொண்டாடும் தமிழர் எவரும், ஓர் ஆணுக்கு என்ன உரிமை இருக்கிறதோ அது பெண்ணுக்கும் இருக்கிறது என்று சென்ற நூற்றாண்டிலேயே பெண்ணுரிமை பேசியவரும், பெண்ணுக்கு எதிரான சமூக அடக்குமுறைகளை ஒழிக்கப் போர்க்கொடி உயர்த்தியவருமான தந்தை பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்களை நினைவு கூராமல் இருக்க முடியாது.*

*விற்பனையில் சாதனை படைத்துக் கொண்டிருக்கும் 'பெண் ஏன் அடிமையானாள்?' என்ற பெரியாரின் நூல் 1942-இல் வெளியானது. இந்த 79 பக்கங்கள் கொண்ட சிறு நூலில் 1. கற்பு, 2. வள்ளுவரும் கற்பும், 3. காதல், 4. கல்யாண விடுதலை, 5. மறுமணம் தவறல்ல, 6. விபச்சாரம், 7. விதவைகள் நிலைமை, 8. சொத்துரிமை, 9. கர்ப்பத்தடை, 10. பெண்கள் விடுதலைக்கு "ஆண்மை" அழிய வேண்டும் என்ற 10 தலைப்புகளின் கீழ் பெண் ஏன் அடிமையானாள் என்று ஆராய்கிறார் பெரியார்.*

*கற்பு என்ற சொல்லின் பொருள் ஆராய்ச்சியில் துவங்கும் முதல் அத்தியாயத்தில், "கல்வி, நேர்மை போன்றவற்றைக் குறித்த கற்பு என்ற சொல் எவ்வாறு மகளிர் நிறை என்பதைக் குறிக்கும் பெண்களின் பாலினக் கலவி ஒழுக்கத்திற்கான ஒரு சொல்லாக மாறியது என்று விளங்கவில்லை" என்று அதிரடியாகத் துவக்குகிறார் பெரியார். ஒழுக்கம் என்பது மற்றவர்களிடமிருந்து நாம் எதை எதிர்பார்க்கிறோமோ, மற்றவர் நமக்கு என்ன செய்ய வேண்டும் என்று கருதுகிறோமோ, மற்றவர் நம்மிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று நினைக்கிறோமோ, அப்படியே நாம் மற்றவர்களிடத்தில் நடந்துகொள்ள*

*வேண்டும்; அதுதான் ஒழுக்கம் என்று ஆணித்தரமாகக் கூறியவர் பெரியார் (விடுதலை, 7.2.1961).*

*ஒழுக்கம் என்பதற்கு ஒரு வரையறைதான் இருக்க இயலும். ஆணுக்கு ஒரு ஒழுக்க வரையறை என்றும் பெண்ணுக்கு ஒரு ஒழுக்க வரையறை என்றும் இருக்க வாய்ப்பில்லை. கற்பு, விபச்சாரம், மறுமணம், மணவிலக்கு, சொத்துரிமை போன்றவற்றில் பாலினத்திற்கு ஒரு விதி என்று வகுத்து வைப்பது நீதி அல்ல. ஆணுக்கென்று ஒரு நீதியும் பெண்ணுக்கென்று ஒரு நீதியும் இருந்தால் அது அநீதி என்று சொல்லத் தேவையில்லை. இது போன்ற தன்னல நோக்கம் கொண்ட சூழ்ச்சி, பெண்ணின் வாழ்வுரிமையை, அடிப்படைத் தேவைகளை முடக்கும் நோக்கில் பெண்ணை அடிமைப்படுத்த வடிவமைக்கப்பட்டவை. வாழும் சமுதாயத்தில் சரிபாதியினரான பெண்களின் தனிமனித உரிமைகளை மதிக்காத நிலை மனித சமுதாயத்திற்குத் தேவை இல்லை. அப்படிப்பட்ட ஒரு சமுதாயத்தில் எந்த மேன்மையும் இருக்காது.*



*அடுத்து, குறளில் "வாழ்க்கைத் துணைநலம்", "பெண் வழிச் சேரல்" அதிகாரங்களின் குறள்கள் பெண்ணடிமைக் கருத்துகளைக் கொண்டவையாக இருக்கின்றன என்று வள்ளுவரையும் குற்றவாளிக் கூண்டில் நிறுத்துகிறார். வள்ளுவர் ஒரு பெண்ணாயிருந்து எழுதி இருந்தால் இது போன்ற கருத்துகளில் எழுதி இருக்கமாட்டார். தன்னல நோக்குடன் வலிய நிலையில் ஆதிக்க மனப்பான்மையிலிருந்த ஆண்களால் பெண்களைக் கட்டுப்படுத்தும் விதிகள் சமைக்கப்பட்டு பெண்கள் வாழ்வில் அவை திணிக்கப்பட்டு அவை பெண்களை அடிமைத் தளையில் சிக்க வைத்துள்ளது. எதிர்க்கேள்வி எழுப்பாமல் இதனைப் பெண்களும் ஏற்றுக் கொண்டு வாழத் தொடங்கியதுதான் அவர்களின் அடிமை நிலைக்குக் காரணம். கீழ் சாதி என்பவர்கள் எவ்வாறு தங்களுக்கு விதிக்கப்பட்ட அந்த நிலையை மறுக்காமல் ஏற்றுக் கொண்டு அதன் படி வாழ்கிறார்களோ அது போன்றே பெண்ணடிமை நிலையும் உருவாகிவிட்டது என்கிறார் பெரியார்.*

*ஆண் உரிமைக்கும் பெண் உரிமைக்கும் ஏன் வேறுபாடு இருக்க வேண்டும் என்ற அவருடைய கேள்வி எவரையும் சிந்திக்க வைக்கும். பெண்களுக்கு விடுதலை என்ற நிலை உருவாக, கற்பு என்பதை இரு பாலருக்கும் பொதுவாக்கி, ஆணைப் போலவே பெண்ணுக்கும் அனைத்து உரிமைகளும் கொடுக்கப்படுதல் வேண்டும் என்பது அவரது முடிபு. நாட்டில் இருக்கும் 99.80% பெண்களுக்கு*

*நமக்கு ஏன் இந்த அடிமை நிலை என்ற எண்ணம் கூட வருவதில்லை என்கிறார் பெரியார்.*

*காதலுக்கு என்று எந்த சிறப்புத் தன்மையும் இல்லை. இயல்பாக ஆணுக்கும் பெண்ணுக்கும் இனப்பெருக்கப் பருவத்தில் ஏற்படும் சேர்க்கை ஆசையைவிட, அன்பைவிட, நட்பைவிட, காதல் என்பது தனித்துவம் கொண்ட வேறு சிறப்புப் பெற்றது அல்ல. இந்தியாவைப் பொறுத்தமட்டில் பெண்களை ஆண்கள் அடிமையாகக் கொள்வது என்ற அடிப்படை நோக்கம் கொண்டதாகத் திருமணம் என்ற இல்லற உறவு மாற்றப்பட்டுள்ளது. பெண்களை ஏமாற்றும் நோக்கில் இயற்கைக்கு மாறாக, மணவுறவிற்கு ஒரு தெய்வீகத் தன்மை கற்பிக்கப்பட்டு சடங்குகள் மூலம் பெண்களை அடிமைப் படுத்துவதை மறைத்துப் பெண்கள் வஞ்சிக்கப் படுகிறார்கள் என்கிறார் பெரியார்.*

*விருப்பமில்லாத மணவாழ்க்கையைத் தொடர வேண்டும் என்று ஆணையோ அல்லது பெண்ணையோ கட்டாயப்படுத்துதல் சரியல்ல. மணவுறவில் இருந்து விலக விரும்புவோருக்கு மனித உணர்வுகளுக்கு முதன்மை நிலையும் மதிப்பும் அளித்து மணவிலக்கு கொடுக்கப்படவேண்டும். விருப்பமில்லாத நிலையில் வாழும் பெண்களுக்கும், ஆண்களுக்கும் மணமுறிவு செய்துகொள்ளவும் தங்கள் விருப்பப்படி வாழ்வை அமைத்துக் கொள்ளவும் உரிமையிருக்கவேண்டும் என்பது பெரியாரின் கருத்து. மணம் என்பது மணமக்கள் தங்கள் வாழ்க்கைச் சவுகரியத்திற்காகச் செய்துகொள்ளப்படும் ஒரு ஒப்பந்த ஏற்பாடு. ஆணுக்கு மனைவி இறந்த பிறகு அல்லது கணவன் மனைவிக்குள் இணக்கமான நிலை இல்லாத நிலையில் அல்லது மணவாழ்க்கை சரியாக அமையாத வேறு பல சூழல்களில் ஆண் மற்றொரு பெண்ணை மணம் செய்வது ஏற்கப்படுகிறது. பெண்களுக்கோ வாழாவெட்டி என்ற பட்டம் கிடைக்கிறது.*

*அன்பும், ஆசையும் இல்லாத அல்லது அவை தனக்கு ஏற்படாத ஒரு இடத்தில் ஒருவர் எப்படி வாழ்வது? மணம் செய்து கொண்டாகிவிட்டதே என்று அன்பையும், ஆசையையும், இன்பத்தையும், திருப்தியையும் தியாகம் செய்து மணவாழ்க்கையைத் தொடர்வது சரியான முறையா? என்ற கேள்விகளை எழுப்புகிறார். ஆகவே, மணம் செய்து கொண்ட மணமக்கள் (கணவன் மனைவியையோ, மனைவி கணவனையோ) மணவுறவில் இருந்து விடுவித்துக்கொண்டு மற்றொருவரை மறுமணம் செய்து*



கொள்வதில் தவறில்லை என்ற கருத்தின் அடிப்படையில் செங்கல்பட்டு மாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றி, தொடர்ந்து ஈரோடு மாநாட்டில் அதற்காக ஒரு சட்டம் செய்ய வேண்டுமென்ற தீர்மானத்தையும் நிறைவேற்றச் செய்திருக்கிறார் பெரியார். இது சென்ற நூற்றாண்டில் அவர் காலத்தில் மணவிலக்கு என்ற உரிமை எந்த அளவிலிருந்தது என்பதைக் காண்பிக்கிறது.

பொதுவாகப் பெண்கள் நிலைமை மாறியாக வேண்டும் என்கிறார் பெரியார். எந்தெந்தக் காரணத்தால் கணவனுக்கு மனைவியைப் பிடிக்கவில்லையோ, ஒத்துவரவில்லையோ அந்தந்தக் காரணங்களால் மனைவிக்கும் கணவனைப் பிடிக்காதபோது, மறுமணம் செய்து கொள்ள ஆணுக்கு இருக்கும் அதே உரிமைகள் பெண்களுக்கும் இருக்க வேண்டும். மறுமணம் செய்து கொள்ளும் ஆணுக்கு இருக்கும் அதே உரிமைகள் பெண்களுக்கும் பொருந்தும் என்றும், உலக வாழ்விலும், சமுதாயத்திலும், சட்டத்திலும், மதத்திலும் ஆண்களுக்குள்ள சவுகரியங்களும், உரிமைகளும் பெண்களுக்கும் இருக்கவேண்டுமென்றும் தீர்மானமாகக் கூறுகிறார்.

விபச்சாரம் செய்கிறாள் என்று பெண்ணைத்தான் உலகோர் வசை கூறிக் குற்றம் சொல்லுகின்றார்களே தவிர, அவளின் அப்படிப்பட்ட நிலைக்கு ஆணைக் குற்றம் சொல்லுவதில்லை. இது போன்ற ஒழுக்கக் குறைவு என்ற பழிச் சொற்களும் ஆண்களுக்குக் கிடையாது. "விபச்சாரம்" என்பது பெண்கள் அடிமைகள் என்பதைக் காட்டும் ஒரு குறிப்பு வார்த்தை என்றுதான் சொல்ல வேண்டும். பெண்களை ஆண்களின் அடிமைகள் என்றும், விலைக்கு வாங்கவும் விற்கவும் வாடகைக்கு விடவும் கூடியவர்கள் என்றும் கருதும் நிலையின் வெளிப்பாடுதான் விபச்சாரம். கற்பு என்பது போல விபச்சாரம் என்பதும் பெண்கள் மீது மாத்திரம் சுமத்தப்பட்டு ஆண்களின்மீது சுமத்தப்படாமலும், ஆண்கள் அதற்காகப் பயப்படவோ அவமானப்படவோ கட்டுப்பட்டிருக்கவோ தேவையில்லை என்று இருக்கும் சமுதாயப் போக்கு பெண்ணடிமைத்தனத்தின் வெளிப்பாடு. கற்பு, விபச்சாரம் என்னும் வார்த்தைகள் வெறும் புரட்டு மட்டுமின்றி அவை பெண்களை அடிமையாக்கவும், கட்டுப்படுத்தவும் உண்டாக்கப்பட்ட சுயநலச் சூழ்ச்சி நிறைந்த தன்மை கொண்டது என்கிறார் பெரியார்.

நாட்டுக்கும் சமூகத்திற்கும் உரிமை கேட்டு உரிமைக்குரல் எழுப்பும் எவரும் சமூகத்தின் ஒரு பகுதியாக உள்ள பெண்கள் உரிமையின்றி முடக்கப்பட்டுக் கிடப்பதில் கவலை கொள்வதில்லை என்று சமூக அக்கறை கொண்டவர்கள் பெண்களின் நிலையில் அக்கறை கொள்ளாததைச் சாடுகிறார் பெரியார். இந்து மதத்தில் மனைவியை இழந்தாலும் வயதான ஆண்கள் மறுமணம் செய்து கொள்கிறார்கள், ஆனால் இல்லறத்தை மேற்கொள்ளாத பதின்ம வயது பெண்ணாக இருந்தாலும் கணவனை இழந்தால் காலம் முழுவதும்

வாழ்க்கைத்துணை இன்றி வாழக் கட்டாயப்படுத்தப் படுகிறார்கள், இறந்த கணவனுடன் உடன்கட்டை ஏற்றப்பட்ட கொடிய இரக்கமற்ற நிலையும் உண்டு. உடன்கட்டை ஏறுவது ஒருநாள் துன்பம் என்றால், கைம்பெண்ணாக வாழ்வதோ வாழ்நாள் முழுதும் தாங்க முடியாச் சித்திரவதைக் கொப்பான துன்பம் என்று பெண்கள் நிலையிலிருந்து சிந்தித்துள்ளார் பெரியார்.

திருமணம் என்ற உறவுக்குள் நுழையும் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒவ்வொரு நிலையிலும் வேறுபாடு காட்டப்பட்டு பெண்களின் உரிமைகள் முடக்கப்பட்டே வந்துள்ள நிலையைக் காண முடிகிறது. மனித சமூகத்தில் சரிபாதியான எண்ணிக்கை கொண்ட பெண்களுக்குப் பிறப்பிலேயே உரிமைகள் மறுக்கப்படுவது தொடங்கிவிடுகிறது. இயற்கைக்கு மாறான வாழ்வியலை மேற்கொள்ளக் கட்டாயப்படுத்தப் படுகிறார்கள். விதவைகளுக்கு மறுமணம் செய்துகொள்ள உரிமை ஏற்படுத்துவதும் பெண்ணடிமை நிலை நீக்குவதில் ஒரு பகுதி. பெண்ணடிமை நிலை ஒழிய வேண்டும் என்றால் பெண்களை அடிமையாக நடத்தும் அகம்பாவமும் கொடுமையும் அழியவேண்டும் என்கிறார் பெரியார்.

இந்தியாவில் தனி மனிதர்க்கு எதிரான கொடுமைகள் பல இருந்து வந்தாலும், அவற்றுள் அவசரமாய் ஒழிக்கப்பட வேண்டியவை தீண்டாமையும், பெண்ணடிமை நிலையும் என்கிறார் பெரியார். ஆண்களைப்போன்ற சட்டப்படி சொத்துரிமை பெறுவதற்குப் பெண்கள் களத்தில் இறங்க வேண்டும், கிளர்ச்சி செய்ய வேண்டும். பெண்களுக்குச் சொத்துரிமை இருந்துவிட்டால், அவர்களுக்கு இருக்கும் எல்லாவிதமான அசவுகரியங்களும் ஒழிந்துபோகும். பெண்களுக்குப் படிப்பு, தொழில் ஆகிய இரண்டும் கிடைத்துவிட்டால் தானே பொருளீட்டவும், தங்கள் வாழ்க்கைத்துணையைத் தாங்களே தேர்ந்து எடுத்து அவர்களுடன் மகிழ்ச்சியான இல்லறம் நடத்தும் வாய்ப்பும் ஏற்படும். பெண் அடிமை நிலைக்கான பல காரணங்களில் சொத்துரிமை இல்லாதது என்பதே மிகவும் முக்கியமான காரணம் என்பது பெரியாரின் கருத்து.

கர்ப்பத் தடையின் தேவை குறித்து அனைவரும், அக்காலத்தில் கொண்டிருந்த, இக்காலத்திலும் கொண்டிருக்கும் கருத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது பெரியாரின் கருத்து. பெண்களின் உடல்நலம், நாட்டின் பொருளாதார நிலை, குடும்பச் சொத்து பிரிவடையாமல் இருக்க என்று பற்பல காரணங்களை முன்வைத்து மற்றவர்கள் கர்ப்பத்தடை தேவை என்று கூறுவார்கள். மாறாக, பெண்ணடிமை நிலையிலிருந்து பெண்கள் விடுதலையடையவும், தற்சார்புடன் வாழவும் கர்ப்பத்தடையை பெரியார் வலியுறுத்துகிறார். இதற்காகப் பெண்கள் பிள்ளைகளைப் பெறுவது என்பதை அடியோடு நிறுத்திவிடுவதையும் பெரியார் வரவேற்கிறார். பெண்கள் மட்டுமல்ல, பிள்ளைகள் பலரைப் பெற்ற ஆண்களும் வாழ்வில் இடர்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. அதிலும் சொத்து,

தொழில், வருவாய் போன்றவை இல்லாத பெண்கள் தங்கள் பிள்ளைகளின் நலம் கருதி பிறரைச் சார்ந்து வாழ வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகிறார்கள். இதை முன்னிறுத்தி பெண்கள் பிள்ளை பெறுவதை நிறுத்தி விட வேண்டும் என்று கூறுகிறார். ஆண்களுக்கு வாய்ப்பிருப்பது போல பெண்களுக்கும் பிரம்மச்சாரிய வாழ்க்கை முறை அமைவது அவர்களுக்கு விடுதலை தரும் என்றும் கூறுகிறார்.



உலகில் எந்தச் சமயமும் பெண்களை அறத்துடன் நடத்தியதில்லை. சமய விதிகளை அமைத்து பெண்களைக் கட்டுப்படுத்தின; கட்டுப்படுத்துகின்றன என்பது உலகறிந்த உண்மை. இந்தியப் பெண்களின் அடிமைநிலை பற்றிக் குறிப்பிடுகையில் பெண் என்றும் எந்த வயதிலும் தந்தை, கணவன், பிள்ளைகள் என்று எவருடைய கட்டுப்பாட்டிலாவது இருக்க வேண்டும் என்று இந்துமத சாஸ்திரங்களும், புராணங்களும் சொல்லுகின்றன. மத சாஸ்திரங்களின் விதிகள் ஆண்களுக்குப் பெண்ணை அடிமையாக்க வேண்டுமென்பதல்லாமல் வேறில்லை என்று உறுதிப்படக் கூறுகிறார். இவ்வாறு தங்கள் மீது திணிக்கப்படும் கருத்துகளைப் பெண்களும் ஏற்றுக் கொண்டு வாழ்வதால் பரம்பரை பரம்பரையாக அடிமை வாழ்வு வாழ்கிறார்கள் என்கிறார். அத்துடன், இன்னமும் பெண்களுக்கு, தாங்கள் ஆண்களைப்போல முழு விடுதலைக்கு உரியவர்கள் என்கின்ற எண்ணமே தோன்றவில்லை. ஆண் இல்லாமல் பெண்ணால் வாழ முடியாது என்று ஒவ்வொரு பெண்ணும் கருதுவதற்கு அவர்களுக்குப் பிள்ளைகள் பெறும் நிலையும் அதையொட்டிய கடமைகளும் இருப்பதானால்தான். அதனால் அடுத்தவர் ஆதிக்கத்திற்கு இடமேற்படுகிறது. அதனால் பெண்கள் விடுதலைக்குப் பிள்ளை பெறும் நிலை இடையூறாக அமைகிறது. பெண்கள் பிள்ளை பெறுவதை நிறுத்திவிட்டால், உலகம்

விருத்தியாகாவிட்டால் பெண்களுக்கு அதனால் என்ன இழப்பு ஏற்பட்டுவிடும் என்ற கேள்வியைப் பெரியார் முன் வைக்கிறார்.

பெண்கள் விடுதலைக்கு ஆதிக்க மனப்பான்மை கொண்ட "ஆண்மை" அழியவேண்டும். ஆண்கள் முயற்சியால் பெண்களுக்கு என செய்யப்படும் எவ்வித முயற்சியும் விடுதலை இயக்கமும் எவ்வழியிலும் பெண்களுக்கு உண்மையான விடுதலையை அளிக்க முடியாது. பெண்களுக்கு மதிப்புக் கொடுப்பதாகவும், பெண்கள் விடுதலைக்காகப் பாடுபடுவதாகவும் ஆண்கள் காட்டிக்கொள்வதெல்லாம் பெண்களை ஏமாற்றுவதற்குச் செய்யும் சூழ்ச்சியே ஒழிய வேறல்ல. எங்காவது பூனைகளால் எலிகளுக்கு விடுதலை உண்டாகுமா? ஆண்களால் பெண்களுக்கு விடுதலை கிடைக்கவே கிடைக்காது. பெண்களால் "ஆண்மை" என்ற தத்துவம் அழிக்கப்பட்டால் அல்லாது பெண்களுக்கு விடுதலை இல்லை என்பது உறுதி என்று தீர்மானமாகக் கூறுகிறார் பெரியார்.

பெரியாரால் இந்த நூலில் சுட்டப்படுவனவற்றில் விடுதலை பெற்ற இந்தியாவில் இன்று சட்டப்படி மாற்றங்கள் கொண்டுவரப்பட்டுள்ளன. ஆனால், ஆண் உரிமைக்கும் பெண் உரிமைக்கும் ஏன் வேறுபாடு இருக்க வேண்டும் என்று சென்ற நூற்றாண்டிலேயே கேள்வி எழுப்பிய பெரியார், ஆண்களுக்கு இருக்கும் அனைத்து உரிமைகளும் பெண்களுக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்ற உறுதியான கருத்தை முன்வைத்து பெண்களின் நிலையை மாற்றப் போராடினார். ஆனால் இந்த நூற்றாண்டிலும் பலருக்குப் பெண்களுக்கு சமவுரிமை கொடுக்கப்பட வேண்டும் என்ற கருத்தை ஏற்கும் மனநிலை வரவில்லை என்பது வியக்கவைக்கும் உண்மை.

சமூக நலமா அல்லது தனிமனித நலமா என்று வரும் போது தனிமனித நலத்தை விட சமூக நலனுக்கே முன்னுரிமை வழங்க வேண்டும் என்பவர்கள் அந்தப் பொறுப்பு பெண்களுக்கு மட்டுமே உள்ளதாக எண்ணுகிறார்கள். ஆகவே, பெண்களின் அடிப்படை உரிமைகளைப் பறித்துவிட்டால் பெண்கள் வேறுவழியின்றி காலம் முழுவதும் பிறரைச் சார்ந்து வாழும் வாழ்க்கைக்குத் தள்ளப்படுவார்கள் என்ற தன்னல நோக்கில் ஆண்களுக்கு வாய்ப்பாக உருவாக்கப்பட்ட விதிமுறைகள் பெண்கள் முன்னேற்றத்தை வெகுவாகத் தடுத்துவிட்டது. ஆதிக்க நிலையில் இருப்போர் திட்டமிட்டவாறே பெண்களை அடிமை நிலைக்குத் தள்ளிவிட்டது. சமூகக் கட்டமைப்பைக் கட்டிக் காக்க, தங்கள் ஆதிக்க நிலையைத் தக்க வைத்துக் கொள்வதற்காகப் பெண்களையும் சிலரையும் அடிமைப்படுத்தி வைக்கும் நிலை இக்காலத்திற்குப் பொருந்தாத ஒரு நிலைப்பாடு. இதனை ஏற்காமல் பெண்ணுரிமை பேசுபவர்களையும் கேட்பவர்களையும் ஒழுக்கக் குறைவானவர்கள் என்றும், கட்டற்ற பாலின சுதந்திரத்திற்கு அடிபோடுபவர்கள் என்றும் குடும்ப அமைப்பைச் சீர் குலைப்பவர்கள் என்று கொச்சைப்படுத்தி, கூசாமல் குற்றம் சாட்டிப்

பழிபோடும் பிற்போக்குவாதிகளின் தாக்குதல்கள் தொடர்ந்துதான் வருகின்றன. ஒருவருடைய உரிமையைப் பறித்து அடிமையாக்கி வாழ்வதில் சமூக மேன்மை இருக்க வழியில்லை.

இந்தியாவில் மட்டும் இல்லை, உலகம் முழுவதும் பெண்கள் இருக்கிறார்கள், குடும்பங்களும் இருக்கின்றன. உலகில் மகிழ்ச்சியான நாடுகள் என்ற தரவரிசைப் படுத்துதலையும், பெண்கள் வாழ மிகச் சிறந்த நாடுகள் என்று தரவரிசைப் படுத்துதலையும் ஆண்டுதோறும் சில நிறுவனங்கள் தொடர்ந்து செய்து வருகின்றன. இந்த இரண்டு பட்டியல்களிலும் முதல் பத்து இடங்களுக்குள் தங்கள் இருப்பை தக்க வைத்துக் கொண்டிருப்பவை நார்வே, ஸ்வீடன், பின்லாந்து, டென்மார்க், சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, நெதர்லாந்து ஆகிய நாடுகள். அங்கும் குடும்பங்கள் இருக்கின்றன என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை. பெண்கள் வாழ்வதற்கு ஏற்ற நாடாக வரிசைப்படுத்தப் படும் நாடுகள் உலகின் மகிழ்ச்சியான நாடுகளாகவும் இருப்பது குறிப்பிடத்தக்கது. இந்த தரவரிசைப்படுத்துதலில் இந்தியாவின் நிலை மிகவும் பின்தங்கிய நிலையில் இருக்கும் ஆப்பிரிக்க நாடுகளுடன் போட்டிப் போட்டுக் கொண்டிருக்கும் நிலையில் இருக்கிறது.



விடுதலை பெற்ற இந்தியாவில் சட்டங்களால் சீர்படுத்தப்பட்டு, அடுத்தடுத்த தலைமுறையினரால் விரிவான சமூகப் பார்வையும் விழிப்புணர்வும் ஏற்பட்டுவிட்ட நிலையில், தகவல் பரிமாற்ற புரட்சியால் சுருங்கிவிட்ட உலகில் மணவிலக்கு, கைம்பெண் மறுமணம், கல்வியுரிமை, சொத்துரிமையும், குடும்பக் கட்டுப்பாடு முறைகள் ஆகியவற்றுக்குத் தடையில்லை என்பது மகிழ்ச்சிக்குரியதே. சமயக் கட்டுப்பாடு என்ற விதிகளால் பெண்களுக்குப் பல உரிமைகள் பறிக்கப்பட்டிருந்த ஒரு காலத்தில், பெண்களே தங்களுக்கு இழைக்கப்பட்டிருந்த அநீதியை இப்படி வாழ்வதுதான் நமக்கு விதிக்கப்பட்டது என்று ஏற்றுக் கொண்டு வாழ்ந்த சென்ற நூற்றாண்டில், பெண்களுக்கு ஏன் இந்த நிலை என்று சிந்திக்கவும் அதை எதிர்க்கவும் துணிந்தவர்கள் வெகு சிலரே. பெண்களின் வாழ்வு நிலையை உயர்த்த, போராட்டங்களும் பரப்புரைகளும் செய்த பெரியாரையும், சமத்துவ சட்ட விதிகள் அவற்றின் மூலம் பெண்விடுதலையை உறுதிப்படுத்திய அம்பேத்கரையும் பெண்கள் என்றும் நன்றியுடன் நினைக்க வேண்டும்.

*பெண்ணோடு தோன்றி பெண்ணோடு வாழ்ந்தும் பெண் மனது என்னவென்று புரியவில்லையோ என்றார் கண்ணதாசன். தாய் என்ற பெண்ணின் கருவறையிலிருந்து பிறக்கும் ஆண்கள், தனது தலைமுறையைத் தொடர தனது பிள்ளைகளை ஈன்று வளர்த்தெடுக்கும் துணைவியைக் கொண்ட ஆண்கள் பெண்களின் உரிமைகளையும் உணர்வுகளையும் பொருட்படுத்தாது குடும்ப வன்முறைகளையும், பாலின வன்முறைகளையும் செய்வதையும், பெண்களின் உரிமைகளை மறுத்து அடிமைகளாகக் கருதும் மனப்பான்மையையும் விட்டொழிப்பது நாட்டிற்கு முன்னேற்றம் தரும்.*

*"எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை; வாழிய நிலனே! (புறநானூறு:187)*

*என்ற பாடலில் நிலத்தைப் பொறுத்ததன்று வாழ்வும் தாழ்வும், அந்தந்த நிலத்தில் வாழும் ஆடவரைப் பொறுத்தது அது என உரைக்கிறார் ஔவையார்.*

***பார்வை நூல்:***

*"பெண் ஏன் அடிமையானாள்?"*
*தந்தை பெரியார்*
*பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு*
*பக்கங்கள்:79*

***சான்றாதாரங்கள்:***

Best Countries for Women
Scandinavian countries dominate this 2022 list of the Best Countries for Women.
https://www.usnews.com/news/best-countries/best-countries-for-women

Discover the 10 Happiest Countries in the World
https://www.plumguide.com/journal/happiest-countries-in-the-world

---

## திருக்குறள்

***துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்***

***துப்பாய தூஉம் மழை*** ***(குறள் எண்.12)***

***குறள் விளக்கம்:*** *தானும் உணவாதலாவது, தண்ணீராய் உண்ணப்படுதல். சிறப்பு உடைய உயர்திணைமேல் வைத்துக் கூறினமையின், அஃறிணைக்கும் இஃது ஒக்கும். இவ்வாறு உயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கி வருதலுடையவாயின என்பதாம்.*

# சைவ எழுச்சியும் சமண வீழ்ச்சியும்.

**-- திவ்யகுமாரி கண்ணம்மா**
*ஐயை உலகத் தமிழ் மகளிர் மன்றம்.*



*சங்கக் காலத் தமிழகத்தில் முறையான கல்வியறிவினை மக்களிடையே பரப்புவதில் முன்னணியில் நின்றவர்கள் ஆசீவக சமண பௌத்தரே ஆவர். வேத கல்வி வேதியருக்கே! என்ற காலத்தில் பள்ளி மூலம் அனைவருக்கும் கல்வி வழங்கி சமுதாயப் புரட்சி செய்தவர்கள் நம் சித்தர்கள். பல இடங்களிலும் சமணப்பள்ளிகளை உருவாக்கி சமண மதத்தின் அடிப்படையான பண்புகளாக இருக்கும் அடைக்கல தானம், அன்ன தானம், மருத்துவ தானம், அறிவு தானம் ஆகியவற்றை மக்களுக்கு அளித்துவந்துள்ளனர். இவை அனைத்துக்கும் சான்றாக இருப்பது இந்த சமணப் படுக்கைகளும், அவை குறித்த கல்வெட்டுகளுமே. மதுரையைச் சுற்றி மாங்குளம், அரிட்டாப்பட்டி, ஆனைமலை, திருப்பரங்குன்றம் உள்ளிட்ட பதிமூன்று இடங்களில் சமணர்கள் வாழ்ந்த படுக்கைகளும், குகைகளும், தமிழ் கல்வெட்டுகளும் இருக்கின்றன. இந்தக் கல்வெட்டு எழுத்துகள் சுமார் 2300லிருந்து 2500 ஆண்டுகள் பழைமையானவை. ஆசீவகர் சமணர் தமிழுக்குச் செய்த தொண்டு அளப்பரியது. சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவை சமண நெறிகளைப் பின்பற்றிய காலத்தின், நாகரிக வளர்ச்சிக்கு ஆதாரமாகவும் அடிப்படையாகவும் இருந்த நகர்ப்புற, வணிக முறைகளை நடைமுறைப்படுத்திய நகரத்தார் மக்கள் (வணிகர்) ஆசீவகம் சமண மற்றும் பௌத்த சமயங்களையே பின்பற்றிவந்துள்ளனர். வணிகத்திற்காக மாகாணங்கள் கைப்பற்றப்பட்ட பின் அரசன் எவ்வழியோ மக்கள் அவ்வழியாக மாறினர். நகரத்தார்கள் சைவர்களாக மாறி பல சைவத் தொண்டுகள் செய்து பல கோவில்களுக்கும் மடங்களுக்கும் கொடையாளிகளாகவும் இருந்துள்ளனர். இதற்குத் தக்க சான்றுகளும் உள்ளன.*

*பண்டைய தமிழகத்தில் தொண்டைமண்டலத்தில் சமணர்களின் அதிக படிமங்களைக் கொண்ட இடங்களில் வட ஆற்காடு வந்தவாசி திருவண்ணாமலை ஆகியன முக்கிய இடங்களாகும். இங்குப் பல மலைகளில் சமணப் பள்ளிகள் உண்டு. பல சித்தர்கள் தவம் செய்யும் மலைக்குகைகளும் உண்டு. திருவண்ணாமலை சுற்றுப்பகுதி நெடிய சமணத்தொன்மை கொண்டது. தமிழ்நாட்டில் உள்ள பழம்பெரும் கோவில்களில் திருவண்ணாமலை அருணாச்சலேஸ்வரர் கோவிலும் ஒன்று. 2668 அடி உயரமுள்ள*



*திருவண்ணாமலையில் திருக்கார்த்திகை மகாதீபம் ஏற்றப்படுகிறது. பல நூற்றாண்டுகளாகவே 'பர்வத ராஜ குல சமூகத்தைச் சேர்ந்த மண்ணு நாட்டார்' கொப்பரையைச் சீரமைக்கும் பணியிலிருந்து தீபம் ஏற்றுவது வரை அனைத்துப் பணிகளிலும் இவர்களுக்கே முதன்மை தரப்படுகிறது. இவர்கள் நாட்டார் (வணிகர்) வம்ச வழி கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நாட்டார்கள் பூர்வீகத்தில் ஆசீவகராகவும் சமணர்களாகவும் பௌத்தர்களாகவும் இருந்ததும் சைவ மலர்ச்சிக்குப் பின் மன்னர்களை எதிர்த்துக்கொண்டு வணிகம் நடத்துவது நடவாத காரியம் என்பதால் சைவர்களாக இவர்கள் மாறி இருக்கவும் பல வாய்ப்புகள் உண்டு என்பது குறிப்பிடத்தக்கது. தமிழ்நாட்டின் வேறு சில பகுதிகளில் வாழும் பர்வத ராஜ குலத்தவரைச் செம்படவர் என்றும் அழைக்கின்றனர். இவர்கள் மீனவர்கள் என்பதும் கவனிக்கத்தக்கது. வணிகம், கடல், திரைமீளர் எல்லாம் ஒன்றோடு ஒன்று தொடர்புகொண்டவை. தீபம் ஏற்றும் வழக்கமானது சைவ இலக்கியங்களில் தொடர்புடையவை அல்ல. திருவண்ணாமலையின் உச்சியில் ஏற்றப்படும் கார்த்திகை மகா தீபம் குறித்து வரலாறு ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. இருந்தாலும், திருவண்ணாமலையில் கார்த்திகைத் தீபத்திருநாள் என்பது மிக முக்கியமான நாளாக இருந்து வந்துள்ளது இவற்றை சில கல்வெட்டுகளும் உறுதிப்படுத்துகின்றன.*

*அண்ணாமலையார் கோவிலில் கிடைத்த முதலாம் ராஜேந்திரச் சோழனின் (கி.பி. 1031) ஆண்டின் கல்வெட்டு கார்த்திகைத் தீபத்திருநாளில் இறைவன் திருவேட்டைக்கு எழுந்தருளுவதைப் பற்றிக் கூறுவதாவது. 'திருவண்ணாமலை உடையார் திருக்கார்த்திகைத் திருநாளில் திருவேட்டை எழுந்தருளி இருந்தால் பெந்திருவவமிர்தமெய்து செய்தருளவும் அடியார்க்குச் சட்டிச்சோறு பிரசாதஞ்செய்தருளவும் குடுத்த பொன் ஏழு கழஞ்சில்' என்று அந்தக் கல்வெட்டுக் கூறுகிறது. மேலும் இரண்டு கல்வெட்டுகள் ராஜேந்திர சோழன், ராஜாதி ராஜனின் கல்வெட்டும் கோவிலுக்குக் கொடுக்கப்பட்ட தானங்கள் பற்றியும் கூறுகின்றன. ஆனால், இந்த ஊரில் ஏற்றப்படும் தீபம் பற்றின தரவுகள் ஏதும் சோழர்கால கல்வெட்டுகளில் இல்லை. 1311ஆம் ஆண்டில் ஹொய்சாள மன்னரான வீரவல்லாளனின் கல்வெட்டு பஞ்சபர்வ தீப உற்சவம் பற்றிக் குறிப்பிடுகிறது. "ஸ்ரீவீர வல்லாள தேவராசக்ர சக வர்ஷம் ஆயிரத்திருநூற்று முப்பதொன்பத நளசம்வத்சரத்து மாசிமாசம் இருபத்திரண்டாந்தியதி செவ்வாய்க் கிழமையும் பெற்ற நாள் அருணகிரி அண்ணாமலை நாயனார்க்கும்*

*உண்ணாமுலை நாச்சியார்க்கும் அமுதுபடிக்கும் சாத்துப்படிக்கும் பஞ்சபர்வ போத்சவத்துக்கும் திருநாளுக்கும் பஞ்சபர்வததுக்கும் பலபடி நிவந்தத்துக்கும் விட்ட பொன் பதினாயிரமும். இப்பொன் பதினாயிரத்துக்கு அண்ணாமலை நாயனார்க்கும் உண்ணாமுலை நாச்சியார்க்கும் அமுதுபடிக்கு நாளுக்கு சந்தி மூன்றுக்கு ஆடி அருள அமுதுசெய்யவும் வீரவல்லாலதேவன் சந்திக்கு அமுதுபடி சாத்துப்படி வெஞ்சனத்துக்கு" என்று இந்தக் கல்வெட்டு கூறுகிறது. 10 ஆயிரம் பொன்னைக் கொடையாக இந்த விழாவிற்கு மன்னர் வழங்கியுள்ளதை இந்தக் கல்வெட்டு கூறுகிறது.*

*அதேபோல, திருவண்ணாமலை பெரிய தெருவில் உள்ள 24 மனை தெலுங்கு செட்டியார் தலைவரிடம் கிடைத்த, 17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த செப்பேட்டில், 'மனப்பூறுவமாகவு அருணாசலமெண்டும் நினைக்க முத்தி தருவோமெண்ட அபைய அஸ்த்தம் காட்டிய திருக்கார்த்திகை தீபாராத்தினையில் தெரிசனம் பண்ணின' என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது, அருணாச்சலம் என்று நினைக்க மோட்சம் அளிக்கும் இடம், அபயஹஸ்தம் காட்டிய திருக்கார்த்திகை' என்று இதற்கு அர்த்தம்" என்கிறார் அரியலூர் அரசு கல்லூரி முன்னாள் முதல்வர் தியாகராஜன். இங்கு ஹொய்சாளர் கால கல்வெட்டில் கூறப்படும் "பஞ்சபர்வதீப உற்சவம்" என்பது மலை உச்சியில் ஏற்றப்படும் தீப விழாவா என்பதை அறியமுடியவில்லை. அண்ணாமலையார் மகா தீபம் ஏற்றும் கொப்பரைக்கு அருகில் அண்ணாமலையார் பாதம் இருப்பதும் அதற்குச் சந்தனக் காப்பு மலர் மாலை அணிவித்து வழிபாடுகளும் நடத்தப்படுகிறது. தீப வழிபாடு போலவே பாத வழிபாடும் சைவர்களோடு தொடர்புடையதல்ல.*





*இதே போல் திருவண்ணாமலை வட்டத்தில் உள்ள போலூர் வந்தவாசி வழியில் இருக்கும் திருமலையிலும் இதே போல் மூன்று பாதங்கள் மலை உச்சியில் இருக்கின்றன. திருவண்ணாமலை சுற்றியுள்ள பல மலைகளில் இது போன்ற பாதங்கள் இருப்பதை நம்மால் காண முடியும். மிகப் பிரபலமான பர்வத மலையிலும் ஒரு பாதம் இருக்கிறது. இது போன்ற பாதங்கள் வந்தவாசி திருவண்ணாமலை வேலூர் புதுக்கோட்டை மதுரை மலைகளில் அதிகமாக நம்மால் காண இயலும். இவை அனைத்திலும் சமணர்களின் பள்ளிகள் இருந்திருக்க*

*அதிக வாய்ப்புகள் உண்டு. இதுபோன்ற பாதங்களைப் பெருமாள் பாதம், ராமர் பாத, பகவதி பாதம், சிவன் பாதம், ஆஞ்சநேயர் பாதம் என்றெல்லாம் கூறுவதுண்டு. இவை புத்தர் பாதம் என்றும் கூறப்படுவதுண்டு. இவை அனைத்திலும் ஆசீவகம் சமண மற்றும் பௌத்த தொடர்பு இருப்பதும். இவற்றை ஏற்றுக் கொள்ளாத மனப்பான்மையோடு இன்றைய நிலை இருப்பதும் வருந்தத்தக்கது. போளூர், வந்தவாசி, திருமலை குன்றில் அமைந்திருக்கும் திகம்பர சமண வளாகம் மூன்று தனி குடைவரைக் கோயில்களாக இருக்கிறது. இது பொ.யு 9ம் நூற்றாண்டில் நிறுவப்பட்டதுள்ளது. சோழர் காலத்தில் இவ்விடம் மிகுந்த சிறப்புப் பெற்று இருந்திருக்கிறது. குந்தவை நாச்சியாரால் சோழர் காலத்தில் இங்கு சிகாமணிநாதருக்கு கோவில் எடுப்பிருக்கப்பட்டிருக்கிறது.*

*சிகாமணிநாதர் எனும் நேமி நாதர்; தொல்காப்பியத்தின் சொல்லதிகாரத்தை 12-ஆம் நூற்றாண்டில் குணவீரபண்டிதர் என்பவர் வெண்பாவில் சுருக்கியும் விளக்கியும் நேமிநாதம் பாடினார். இதனால் இவருக்கு நேமிநாதர் என்ற பெயர் வந்திருக்கலாம். நேமிநாதர் அச்சணந்திமாலை பாடியவர் (அச்சணந்தி - சீவகனின் குரு). இவரின் சிற்பமும் இங்கு மலை உச்சியில் நிறுவப்பட்டுள்ளது. இது மட்டும் இன்றி முல்லைக் கொடிகளோடு கூடிய பாகுபலி, தர்மதேவி, மகாவீரர், பார்சுவநாதர் உருவங்களும், பல சுனைகளும், மூன்று பாதங்களும் தாங்கி மலை உச்சியில் கம்பீரமாக நிற்கின்றன. கல்வெட்டுகளில் இவ்விடம் ஸ்ரீசைலபுரம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இன்றும் கூட இது எழில் குறையாத சமணப் பள்ளியாகவே இருக்கிறது. இங்கு இயற்கையாகவே அமைந்த குகைகளும் அதில் நாயக்கர் கால ஓவியங்களும் இருக்கின்றன.*

*ஆசீவகம், சமணம், பௌத்தம் சமயம் சார்ந்தவர்கள் அறம், துறவு, கொல்லாமை, அகிம்சை ஆகிய விழுமியங்களைத் தமிழ்ச் சமூகத்திடம் வேரூன்ற வைத்தவர்கள். திருவண்ணாமலையில் ஏற்றப்படும் கார்த்திகை தீபம் போன்றே பல மலைகளில் மகா தீபம் ஏற்றும் பழமை உள்ளது. போலூரில் உள்ள பெருமாள் மலையில் கார்த்திக்கைத் திருநாளில் தீபம் ஏற்றப்படுகிறது. தமிழ்நாடு முழுவதும் பல இடங்களில் மலை உச்சியில் தீபங்கள் ஏற்றும் வழக்கம் இருக்கிறது. இந்த மலைகள் எல்லாமே சமண பௌத்த தொடர்பு கொண்டவையாகவே உள்ளன. சைவமும் வைணவமும் வளர்ந்து பெருகி பௌத்த சமண அடையாளங்களை தமதாக்கி முற்றிலுமாக சீரணித்து அடையாளங்கள் பறிக்கப்பட்டு புராணக் கதைகள் திணிக்கப்பட்டு மாற்றப்பட்டுவிட்டது. ஆசீவகமும் சமணமும் பௌத்தமும் கொண்ட கொள்கைகளில் முதன்மையானவை ஆசையை கட்டுப்படுத்துவது, மாயையை உணர்தல், முக்திபெருதல், முற்பிறவியில் செய்த பலன் போன்ற கோட்பாடுகள் கொண்டவை.*

ஒரு முறை மதுரையில் 'நின்ற சீர் நெடுமாறன்' பாண்டிய நாட்டினை ஆட்சி செய்யும் பொழுது சமணம் உச்சத்தில் இருந்த நேரம். அரசன் எவ்வழியோ மக்கள் அவ்வழி என்ற பழமொழிக்கேற்ப மதுரை முழுவதும் சமணக்காற்று வீசிய காலம். அரசன் உடல் நலக்குறைவால் பாதிக்கப்பட்டிருந்தான். சமண அந்தணர்கள் பூசைகளும் மருந்துகளும் நோய் தீர்க்காமல் போக தீவிர சைவர்களான இவனது மனைவி மங்கையர்க்கரசியார் மற்றும் மந்திரி குலச்சிறை ஆகியோர் திருஞானசம்பந்தரை தன் நாட்டிற்கு வருகை தருமாறு வேண்டுகிறார்கள். சோழ நாடான சீர்காழியில் சிவபாத விருதையர் பகவதி ஆகிய 'பிராமண' வைதீக தம்பதிகளுக்குப் பிறந்தவர் சம்பந்தர். பாண்டிய நாட்டு அரசன் சமணமதத்தை ஏற்று சமண நெறியோடே ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறான். திருஞானசம்பந்தர் வருகைக்குப் பின் பல அரசியல் மாற்றங்கள் மதுரையில் நடைபெறுகிறது. சைவ எழுச்சியின் வித்தாகத் தான் அமையப் போவதை ஞானசம்பந்தர் ஏற்கனவே அறிந்திருந்தார். அரசியின் அழைப்பினை ஏற்ற திருஞானசம்பந்தர் மதுரைக்கு வருகிறார். திருஞானசம்பந்தர் சமண சமயத்தைக் கடுமையாக எதிர்க்கின்ற ஒருவர். சைவ சமயம் என்ற இயக்கத்தின் மூர்க்கமான அதிதீவிர பரப்புரையாளர் என்ற வகையில் எதிரியின் கருத்துகளிலுள்ள நியாயங்களைக்கூட உணர ஆயத்தமாக இல்லாமல், கடுந்தாக்குதலில் ஈடுபடுகிற ஒருவர். அவர் சமணர்களை முற்றிலுமாக வெறுத்தார். அவர் பாடல்களில்;

"வேட்டு வேள்வி செயும்பொரு ளைவிளி மூட்டு சிந்தை முருட்டமண் குண்டரை ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே..." என்றும்,



"பெண்ணகத்து எழிற் சாக்கியப் பேய் அமண் தெண்ணர் கற்பழிக்கத் திருவுள்ளமே..."

என தேவாரப்பாடல்களைப் பாடியுள்ளார்.

சமணர் வைதீக வேத வேள்விகளை மதிக்காமல் அந்தணர்கள் சொல்லையும் கேளாமல் நடந்துகொள்வதாலேயே சம்பந்தர் சமணர்களை அவர் பாடல்களில் சாடுகிறார். தவிர சைவத்தை மதிக்காமல் இருப்பதாகச் சாடவில்லை . "வான் புகழ் கற்புக் கனலாம் கண்ணகி சமண கற்பு நோன்பினை கடைப்பிடித்தவள் என்பதும் குறிப்பிடத்தக்கது. அவர் தங்கியிருந்த மடத்திற்குச் சமணர்கள் மந்திரத்தினால்

நெருப்பு வைத்தார்கள் எனக் கூறப்படுகிறது. இதன் உண்மைத் தன்மை பற்றி ஆராய்தல் வேண்டும். அதிலிருந்து தப்பித்த திருஞான சம்பந்தர், இந்த கொடுஞ்செயலுக்குத் துணைநின்றமைக்காக பாண்டியன் மீது கோபமுற்றுச் சபிக்கிறார். அக்கோபம் வெப்பு (வயிற்றுவலி) நோயாக பாண்டியன் மன்னனைத் தாக்கியது. மருத்துவர்களும், சமணர்களும் முயன்றும் வெப்பு நோய் தீரவில்லை. பாண்டிய மகா ராணியின் வேண்டுதலுக்கிணங்க சம்பந்தரின் திருநீறு பூசி அரசர் குணமடைகிறார். பின் ஞானசம்பந்தரால் சைவமதத்திற்கு மாற்றப்படுகிறார்.

சமணர்களையும் மதம்மாற ஞானசம்பந்தர் நிர்ப்பந்திக்கிறார். இதற்கு தன் மறுப்பைத் தெரிவித்த சமணர்களை அனல்வாதம் புனல்வாதம் என்ற வாதத்திற்கு ஞானசம்பந்தர் அழைத்தார் எனவும்,சிலர் சமணர்கள் அழைத்ததாகவும் கூறுகின்றனர். அனல்வாதம் என்றால் பக்திப்பாடல்கள் அடங்கிய ஏடுகளைத் தீயில் இடுவது. பாண்டியன் மனைவியும், அமைச்சர் குலச்சிறையும் சமணர்களை நிர்ப்பந்தித்து போட்டிக்குப் பணிய வைக்கிறார்கள். மன்னனுக்கும் இதில் உடன்பாடு இல்லாமல் தயக்கம் காட்டுகிறான். பின் மன்னனின் கட்டளைக்குப் பயந்து சமணர்கள் தங்களின் ஓலைச் சுவடிகளை எல்லாம் கட்டுக்கட்டாக நெருப்பில் கொட்டுகிறார்கள். அவ்வளவும் எரிந்து அழிந்தன. சம்பந்தர் ‘‘போகமார்த்த " என்ற பாடல் எழுதிய ஓலை நெருப்பில் போடுகிறார். எரியாமல் அப்படியே இருக்கிறது. அப்போது சமண முனிவர் கந்துசேனர், நெருப்பில் போட்டு எரியாத ‘சைவ’ ஓலையை எல்லோரிடமும் எடுத்துக்காட்ட சொல்கிறார். சம்பந்தர் தடுமாறி கையிலிருந்த ஏட்டைக் காட்ட மறுக்கும்போது கந்துசேனர் பிடுங்கி தரையில் வீசுகிறார். அது ஓலை அல்லாத வேறு பொருளாக இருக்கிறது.

அடுத்து, புனல் வாதம் தொடங்கியது. சமணர்கள் 'அத்தி நாத்தி' என்று எழுதி, ஏட்டை வைகை ஆற்றில் இட்டார்கள்; அந்த ஏடு வெள்ளத்தில் அடித்துச் சென்றது. சம்பந்தர் "வாழ்க அந்தணர் வானவர் ஆன் இனம்" என்ற பாசுரத்தை ஓர் ஏட்டில் எழுதி ஆற்றில் இட்டார். அந்த ஏடு ஆற்றில் எதிர்த்துச் சென்றது. குலச்சிறையார் உடந்தையாக இருந்ததால் அதனை எடுக்கக் குதிரைமேல் ஏறி பாய்ச்சல் வேகத்தில் போகிறார். குதிரையில் ஏறிச் சென்ற குலச்சிறை திரும்பி வந்து, மன்னரிடம் ஒரு ஏட்டைக் காட்டி திருவேடகம் என்ற ஊரில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் திருவடிக்கருகில் சென்று ஏடு அப்படியே நின்றுவிட்டது என்றும் கூறுகிறார். மன்னனும் நம்புகிறார். அந்த ஏட்டில் 'வேந்தனும் ஓங்குக' என்று எழுதப்பட்டு இருந்தது. அதிலிருந்து அரசனது கூனும் தானே நிமிர்ந்தது. அன்று முதல் பாண்டிய அரசனும் நெடுமாறன் என்று பெயர் பெற்றான். பாண்டியன் சைவ சமயத்தைத் தழுவினான். இங்கு அரசனின் கூன் என்பது சமண மதத்தை அவன் பின்பற்றியதால் கூன்பாண்டியன் என்றும் சைவமதத்தை ஏற்றுக்கொண்ட பின் நெடுமாறன் என்றும் மாற்றப்படுகிறது.



உடல் கூனை அல்ல. இதுபோன்றே, உலக பாவங்களைச் சுமக்க வந்த ஏசுநாதர் உண்மையில் ஒரு புரட்சியாளர் முற்போக்கு சிந்தனையாளர். யூதமத ஆசாரியார்களின் மூடத்தனங்களையும் மூடநம்பிக்கைகளையும் அவர் எதிர்த்தார் அதனாலேயே அவர் சிலுவையில் அரையப்பட்டார்.

மெய்யியல் கொள்கைகளைக் கொண்ட ஆசீவக சமண அந்தணர்கள் சனாதன வைதீக வேள்வி விரும்பிகளுக்கு அச்சுறுத்தலாக இருந்தனர் என்பது கவனிக்கத்தக்கது. தோல்வியை ஏற்ற சமணர்களைக் கழுமரத்தில் ஏற்றியதாகத் திருவிளையாடற்புராணத்தில் (63வது படலம்) சமணரைக் கழுவேற்றிய படலத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. சமணர் குடும்பங்கள் ஆங்காங்கே அழிக்கப்படுகிறது. மதுரை சுற்றியுள்ள பகுதிகளில் இந்த விவரம் தெரிந்த பலர் திருநீறு அணிந்து தப்பினர். ஏன் கொல்லப்படுகின்றோம் என்று தெரியாமலேயே பலர் கழுவேற்றப்பட்டனர். பலர் யாரும் நுழைய முடியாத மலைக் குகைகளிலும் பொந்துகளிலும் அடைக்கலம் கொண்டனர். சமணப் பூண்டு ஒன்றுகூட இருக்கக் கூடாது என்ற தனது கொள்கையை மதுரையில் நிறைவேற்றி அடுத்த இடம் செல்கிறார் சம்பந்தர். இந்த சமணர் கழுவேற்றத்தினை பலரும் மறுக்கின்றனர். பல இலக்கியச் சான்றுகள் இதற்கு நம்மிடம் உள்ளன. மன்னவன் மாறன் கண்டு மந்திரியாரை நோக்கித் "துன்னிய வாதி லொட்டித் தோற்றவிச் சமணர் தாங்கள் முன்னமே பிள்ளை யார்பா லநுசித முற்றச் செய்தார்கொன்னுனைக் கழுவி லேற்றி முறைசெய்க" வென்று கூற" எனும் பெரியபுராணப் பாடலிலும் சமணர் கழுவேற்றம் குறித்துச் சான்றுகள் இருக்கின்றன. இதே நிகழ்வை ஒட்டக்கூத்தர் தனது தக்கயாகப்பரணி எனும் நூலில் குறிப்பிடுகிறார்.

மதுரையில் ஆண்டுதோறும் நடைபெறும் சித்திரைத் திருவிழா நிகழ்வுகளில் இக்கழுவேற்றம் நடத்திக் காட்டப்படுகிறது. கழுகுமலைக் கோயில் சுவரோவியங்கள், மதுரை மீனாட்சியம்மன் கோயில் சுவரோவியங்களில் சமணர் கழுவேற்றம் சித்தரிக்கப்பட்டுள்ளது. ஆனால் சமண இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் இது பற்றிய தகவல் இல்லை. கோவிலில் இருக்கும் சித்திரங்களில் நீண்ட ஜடா முடியுடனும் தாடி மீசையுடனும் கழுவேற்றப்பட்டவர் காணப்படுகிறார் எனவே இவர் சமணர் அல்ல என்று

*பலரும் தன் கருத்தினை முன் வைக்கின்றனர். ஆனால் அது ஆசீவக சிகையுடன் காட்சியளிக்கும் ஆசீவக/சாவக சமணரின் கழுவேற்றம் . ஜைன (அருகர்கள்) சமணர்கள் தான் தலையை மழித்து இருப்பர். ஆசீவகர்களும், சாவகர்களும் இல்லற சமணர்கள் நீண்ட சிகையுடனே இருப்பர். கழுவேற்றப்பட்டவர் சமணர்களா இல்லையா என்ற கேள்வியை விட சித்தர்களான அவர்களின் கொள்கை மீது வைதீகர் எத்தனை அச்சம் கொண்டிருக்க வேண்டும். அப்படி எதைக் கண்டு அஞ்சியிருப்பர் என்பதை நாம் ஆராய வேண்டும் . மதுரைக்கு மேற்கில் உள்ள சாமணத்தம் சமணப் பள்ளியில் எண்ணாயிரம் சமணர் கழுவேற்றம் நடந்ததாகக் கருதப்படுகிறது. எண்ணாயிரம் என்பது வணிக குழுவின் பெயரைப்போல சமணக்குழுவின் பெயராகவோ அல்லது எண்ணாயிரம் எனும் ஊரின் பெயராகவோ இருந்திருக்க வேண்டும். சமணக் கழுவேற்றம் வரலாற்றில் மிக முக்கியமான நிகழ்வு. கூர்மைப்படுத்தப்பட்ட மரம் ஒன்றினில் குற்றவாளியை ஆசன வாய் வழியாக ஏற்றுவர். அதற்குமுன் கழுமரத்தில் எண்ணெய் தடவி கழுவேற்றப்படுபவனைப் பிடித்து நிர்வாணமாக்கி, அவனை குண்டுகட்டாகத் தூக்கி ஆசனவாயை கழுமுனையில் வைத்து அப்படியே செருகி விடுவார்கள். உடலின் எடையால், எண்ணை தடவிய கூர்மையில் உடல் மெதுவாகக் கீழே இறங்கும். கழு மெதுவாக உடலைத் துளைத்துக் கொண்டு மேலேறும். கொஞ்சம் கொஞ்சமாக மரம் உடலினுள்ளேற ஏற வலி தாங்காமல் மடிந்து போவான். கழுவிலேற்றப்பட்ட உடல் பறவைகளுக்கும், நாய்களுக்கும், நரிகளுக்கும் இரையாகும்.*



*இந்த காலகட்டத்திலிருந்து சுமார் 600 ஆண்டுகளுக்குக் கல்வெட்டும் ஏதும் எழுதப்படவில்லை. இந்த இடைவெளி மதுரையில் சமண ஆதிக்கத்தின் வீழ்ச்சியாக இருந்திருக்க வேண்டும் என்றே கருதவேண்டும். அனல்வாதம் புனல்வாதம் என்ற பெயரில் தமிழ் ஏடுகளை அநியாயமாக நெருப்பில் எரித்தார் ஞானசம்பந்தர். ஆனால் அவர் எழுதிய 16000 பதிகங்களில் 384 பதிகங்களே கிடைத்தாக நம்பியாண்டார் நம்பி குறிப்பிடுகிறார். இராஜராஜ உடையார் முயற்சியால் சிதம்பரம் நடராஜர் கோயிலில் புற்றுக்கட்டி கிடந்த ஓலைச்சுவடிகளிலிருந்து மீட்டு எடுக்கப்பட்டதே இவரின் தேவாரப்பாடல்.*

# மகாகவி ஈரோடு தமிழன்பன் கவிதைகளும் வாழ்வியலும்

***(கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நுண் ஆய்விருக்கையின் ஆய்வுரை)***



— ***கவிஞர் வித்யா மனோகர்***, *வல்லினச் சிறகுகள்*

*"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்*
*வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்"*

*என்பது வள்ளுவர் வாக்கு.*

*சிறந்த வாழ்க்கையின் தன்மை எதுவென்று புரிந்து வாழ்ந்தால் வாழ்க்கை வளமாகும். ஆதிநாள்களில் நாடோடி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்த மக்கள் பின்னர் ஓரிடத்தில் தங்கிக் கூட்டம் கூட்டமாக வாழத் தொடங்கினர். அவர்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். தாம் வாழுமிடத்தில் கிடைத்த காய்கறிகள், பழங்களை உண்டனர். வேட்டையாடியும் உண்டனர். பின்னர் நாகரிகம் வளர்ச்சி பெற்றதும் பயிர்களை விளைவித்து உண்ணக் கற்றுக்கொண்டனர்.*

*இவ்வாறாக மனிதன் படிப்படியாக வளர்ந்ததில், எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்ற நிலைமாறி இப்படித்தான் வேண்டும் என்று நாகரிகத்துடன் வாழ்க்கையை நெறிப்படுத்திக் கொண்டான். இவ்வாழ்வியல் முறைகள் மண்ணையும் மரபையும் கட்டிக்காப்பாற்றும் உணர்வு இழைகள் என்றால் மறுப்பதற்கில்லை.*

*இம்மனித வாழ்வில் ஏற்படும் சீர்கேடுகள், அவலங்கள், ஏற்றத்தாழ்வுகள் இவற்றுக்கு எதிராகக் குரல் கொடுக்கும் மனிதநேய மிக்க கவிஞராக ஈரோடு தமிழன்பன் தொடர் படைப்பாளியாக விளங்குகிறார். அவரின் கவிதைகள் பல்வேறு பாடுபொருள்களில் வாழ்வியல் கருத்துகளைத் தாங்கி நிற்கின்றன. பிறப்பு, இறப்பு, காதல், மலர்கள், பறவைகள், வீடு, பொதுவுடைமை, பெண்ணுரிமை, கல்வி, நட்பு, மூப்பு, குழந்தைகள் என்று வாழ்வியல் சார்ந்து பல்வேறு கவிதைகளைப் படைத்துள்ளார் நம் மகாகவி.*

*பனி பெய்யும் பகல் (1998) என்ற நூலில், "அப்பாவும் அவர் குடையும்" என்ற தலைப்பில் அமைந்துள்ள கவிதையில்,*

*"தூசி படிந்து*
*தொங்கும் அப்பா குடையில்*
*வலைகள் பின்னும்*

*சிலந்திகளுக்குத் தெரியாது*
*அவர் எவ்வளவு கோபக்காரர் என்று*
*அப்பா செலவழித்ததுபோக*
*மிச்சமான கோபமெல்லாம்*
*அந்தக் குடையில்தான்... "*

*என்று அப்பாவைப் பற்றிய நினைவுகளைக் கவிதையாக்கியுள்ளார்.*



**மகாகவி ஈரோடு தமிழன்பன்**

*"மாற்று மனிதம்" என்ற நூலில், "தொட்டில் கட்டும் அம்மா நினைவுகள்", "அம்மாவும் மல்லிகையும்" என்று இரு அற்புதமான கவிதைகளை அளித்துள்ளார். அம்மாவுக்கும் மல்லிகைக்குமான நேசத்தை அழகான கவிதையாக்கியுள்ளார்.*

*"யாரும்*
*மல்லிகைப் பூக்களைப் பறிப்பதில்லை*
*அம்மா அல்லவா பூத்திருக்கிறாள்!*
*பூத்தால் அம்மா புன்னகை ஞாபகம்;*
*உதிர்ந்தால் அம்மா இறந்தநாள் ஞாபகம்"*

*என்று எழுதுகிறார் கவிஞர். "விளையாடு ஆயமொடு வெண் மணல் அழுத்தி" என்ற சங்க இலக்கியப் பாடல் நம்மில் பலரும் அறிந்ததே. புன்னை மரத்தைத் தங்கையாகப் பாவித்த அதே அன்புள்ளம், அம்மாவிற்கும் மல்லிகைக்கும் இடையிலான பேரன்புடன் ஒத்துப்போகிறது என்றே சொல்லத் தோன்றுகிறது.*

*"கதவைத் தட்டிய பழைய காதலி" (2005) என்ற நூலில் "எதிலும் இனிமை" எனும் தலைப்பில் அமைந்துள்ள கவிதை....*

*"பூவாக மலர்வது இனிமை!*
*பூவாத மலருக்குள் உதிர்வதும் இனிமை!*
*தொட்டில் பிறையாவது இனிமை!*
*தொட்டிலாய்ப் பிறையேந்தி அசைவதும் இனிமை!*

*வீணையாய் இசைப்பது இனிமை!*
*மீட்டாத பாடலாய் அதிர்வதும் இனிமை!*
*தண்ணீராய்க் கிடைப்பது இனிமை!*
*தாகமாய்த் தவித்துத் துடிப்பதும் இனிமை!"*

*என்று தொடர்கிறது இக்கவிதை.*

*வாசிக்கும் போதே இனிதாக இருக்கும் இவ்வரிகளில் உள்ளதைப்போல் வாழ்ந்தால், வாழ்தல் இனிதாகும் என்பதில் ஐயமில்லை. அடுத்து, அதே நூலில் "வாழ்க்கை வசப்படுமா?" என்ற தலைப்பில் அமைந்துள்ள கவிதை....*

*"வானம் வசப்படும்*
*பூமி வசப்படும் மனிதா!*
*வாழ்க்கை வசப்படுமோ - உனக்கு*
*வாழ்க்கை வசப்படுமோ?*

*நீரும் வசப்படும்*
*நெருப்பும் வசப்படும்-மனிதா!*
*காற்றும் வசப்படும் உனக்குக்*
*கருணை வசப்படுமோ?*

*அறிவு வளர்ந்தது பொய்யல்ல*
*ஆற்றல் வளர்ந்தது பொய்யல்ல*
*தெரியா திருந்தவை எத்தனையோ நீ -*
*தேடிப் பிடித்தனை பொய்யல்ல"...*



*என்று நீள்கிறது இக்கவிதை. "வாழ்க்கை வசப்படுமா?" என்ற தலைப்பே நம் சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது.*
*கவிதையின் இறுதிப்பத்தியில்....*

*"அறிவால் வரும் புதுமை*
*அன்பால் வரும் இனிமை*
*ஒன்றாய் விடும் நாளைச்*
*செய்வாய் புகழ் கொய்வாய்!"*

*என்று அன்புடன் அறிவும் இணைந்தால் வாழ்க்கை வளமாகும் என்று வாழ்வை வெற்றிகொள்ள வழி காட்டுகிறார் மகாகவி.*

*"அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம்" (1982) என்ற நூலில் "திசைகளில் கோளாறு; தேசப் படங்களைத் திருத்தி என்ன பயன்" என்ற தலைப்பில் வரதட்சணை பற்றி பேசுகையில் .......*

*"வரதட்சணை ஒழிப்பு*
*உன் கால் சங்கிலியில்*
*ஓரிரு கண்ணிகளை*
*வெட்டி விடுவதன்றி*
*விடுதலை அல்ல...!*
*வரதட்சணை ஒழிப்புக் கவிதைகள் -உனது*
*சிறையின்*
*அகலநீளங்களை அதிகப்படுத்தவே பரிந்துரைக்கின்றன*

*பெண்ணே!*
*திசைகளில் கோளாறு இருக்கிறது....*
*தேசப் படங்களைத் திருத்திக் கொண்டிருப்பதால் என்ன பயன்?"*

*என்று வினவுகிறார். பெண்ணின் அகக் கண்களைத் திறக்கும் ஆகச் சிறந்த கவிதைகளில் இதுவுமொன்று.*

*வாழ்தலை இனிதாக்கக் கூடிய காதல் எனும் பேரன்பின் வெளிப்பாடுகளைப் பற்றிய கவிதையொன்றில் இப்படி எழுதியுள்ளார் மகாகவி....*
*"நிலாவரும் நேரம்" (1984) என்ற நூலில் வருவதும் வராததும் என்றொரு கவிதை....*

*"உன்னை*
*எதிர்பார்த்து*
*எனது இறுதிமூச்சு சுவாசப்பைக்கு*
*நன்றி அறிதலை நிகழ்த்திக்*
*கொண்டிருந்தாலும்*
*நான் காத்திருப்பேன்.*

*வருவதும்*
*வராததும் உன் விருப்பம் - உன்*
*வருகைக்காகக்*
*காத்திருப்பது என் தவம்."*

*என்று வாழ்தலை அழகாக்கும் காதலென்ற உணர்வின் உன்னதத்தை வரிகளில் வடித்திருக்கிறார் மகாகவி.*

*மூட நம்பிக்கைகளை முறியடிக்கும் முற்போக்குச் சிந்தனைகளால் மட்டுமே மானுடம் தழைக்கும் என்பதை நன்குணர்ந்தவர் மகாகவி.*
*ஊமை வெயில்(1984) என்ற நூலில் கிழமைகளைக் கழுவி வை என்றொரு கவிதை....*

*"திங்கள்*
*கிழமையும் அதுவுமாய் பார்த்து எடுங்கள்*
*பத்திரம்*
*உடைத்து விடாதீர்கள் கண்ணாடியை*
*செவ்வாயில்*
*உடைந்தால் தீய சகுனம்*



*பொன்*
*கிடைக்காத*
*புதனில்*
*போட்டுடைத்து விடாதீர்கள்....*

*இப்படியே எல்லா நாளுக்கும்*
*ஏதாவது ஒன்று சொல்லியும் எந்த நாளில் உடைந்தால்*
*குந்தகம் இல்லை*
*என்பதைச் சொல்லாமலும்...*
*இந்தக் கண்ணாடியால்*
*நாடி தளர்ந்து நான் சாகிறேன்.*

*ஒன்று*
*செய்யடி பெண்ணே!*
*நானோ*
*இல்லை - இந்தக் கண்ணாடியோ*
*உடைந்த பிறகு*

*தோஷங்களைக்*
*கண்ணாடியில் தூதுவிடும்*
*கிழமைகளைக் கழுவி வை!"*

*என்ற அருமையான கவிதையைத் தொடர்ந்து, "ஊர் சுற்றி வந்த ஓசை" என்ற நூலில் "வெற்றித் தேர் வருகிறது விரைவாக" என்ற கவிதையில்*

*"விதையின்*
*செவியில் - அதன் எதிர்காலக் கிளைகளை*
*அசைக்கும்*
*இயற்கை,*
*நமது காதில் மட்டும்*
*அழிவுகளையா சொல்லும்?*

*ஒல்லி*
*அரும்புகளின்*
*உள்ளத்தில் உட்கார்ந்து*
*வெளிச்சத்தில் விவரிக்கும்*
*சூரியன்*
*இருளிடமா*
*நமது கையைப் பிடித்துத்*
*தருவான்?"*

*என்ற வினாக்கள் வழி, இயற்கை மீது பெருநம்பிக்கையையும், இயற்கையோடு இணைந்துள்ள வாழ்வியலையும் உணர்த்தும் வகையில் மகாகவி படைத்துள்ளார்.*

*அடுத்து, எல்லார்க்கும் எல்லாமும் கிடைக்க வேண்டும் என்ற மனித வாழ்வியலின் அடிப்படை உரிமைக்காகக் குரல் கொடுக்கிறார் தமிழன்பன் ஐயா...*

*"பகிர்ந்து கொள்ளாமல்*
*பகல்கள்*
*யார்க்கும் சமமாய்க் கிடைப்பது போல்*
*வாழ்க்கை*
*கிடைக்கட்டும்.*

*மண்ணின்*
*வற்புறுத்தல் இல்லாமல்*
*பசும்புல்*
*வளர்கிறதே -*
*அதுபோல் மனத்தில் அன்பு வளரட்டும்."*

*என்று மனித வாழ்வில் பொதுவுடைமையின் அவசியத்தைப் பதிவு செய்கிறார் மகாகவி.*

வீடு பற்றி பல கவிதைகள் எழுதிய மகாகவி வீட்டில் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கும் எழுதியுள்ளார். "என் வீட்டு எதிரே ஓர் எருக்கஞ்செடி"(1995) என்ற நூலில் "இன்னொருவர் வீட்டில் இருப்பதுபோல்" என்ற தலைப்பில் அமைந்துள்ள கவிதையில்,

"உன் வீட்டில்
இருக்கும்போதும் நீ
இன்னொருவர் வீட்டில் இருப்பதுபோல இரு!

உனக்கே
ஒரு நாகரிகம் வந்துவிடும் "

என்கிறார். இன்னொருவர் வீட்டில் இருப்பதைப்போல் இருந்தால் காலணிகளைச் சரியாகக் கழற்றி விடுதல், உடம்பை ஒழுங்குபடுத்தி உட்காருதல், பெற்றோரிடம் பிரியமாகப் பேசுதல், உணவில் உப்புக் குறைந்ததற்குக் கோபம் கொள்ளாதிருத்தல், இப்படிப் பல நல்ல விடயங்கள் நடக்கும்.

தவறே செய்யாதவர் என்று எவரும் கிடையாது இதையே மகாகவியும் பதிவு செய்கிறார் தவறுகளை திருத்தி வாழ்வதே மனித இயல்பு என்கிறார். "நடை மறந்த நதியும் திசை மாறிய ஓடையும்" (1997) என்ற நூலில்;

"பழுதே இல்லாதவை
பழுத்து விடுவதில்லை எடுத்த எடுப்பில்! எனவே
பழுதுகளைச் செய்து பழுது பார்த்துக் கொண்டிருப்பதே
இயங்கும் வாழ்க்கைக்கு இலக்கணம்." என்கிறார்.

அடுத்து, பல்வேறு குடும்பப் பொறுப்புகளைச் சுமக்கும் நடுத்தர வர்க்க குடும்பத் தலைவனின் நிலையை மிக அற்புதமான கவிதையாகப் படைத்துள்ளார் மகாகவி. "பனி பெய்யும் பகல்" (1998) என்ற நூலில் "விடை கிடைக்கும் வேளை" என்ற தலைப்பில் அமைந்துள்ள கவிதை...

"கொஞ்சமாவது
அறிவிருக்கிறதா உனக்கு?
எதுக்கு நிலம் வாங்க வேண்டும்? உடனே.
என்னையும் உன்னையும் புதைக்கவா?"

கையில் மண்வெட்டி பிடித்த இந்த
வார்த்தைகளை என் கைபிடித்தவள் பக்கம்
புறப்பட்டுப் போக விட்டிருக்கக் கூடாது....

அவள் முகத்தில் இருந்த
நிலா உடைப்பட்டுச் சிதறியது.

"மருந்து
வாங்கித்தானே தருகிறேன்.
மறுபடியும் மறுபடியும் நச்ச வேண்டுமா இப்படி?"

அப்பாவைச் சலித்துக் கொண்ட இந்த வாக்கியங்களை
உள்ளே இழுத்துப்போட்டு
நான்
உதடுகளைச் சாத்தியிருக்க வேண்டும்.

மரணத்தின்
கைகளைப் பிடித்துக் கொண்டு அப்பா கெஞ்சினார்."

இக்கவிதையில் மனைவி, அப்பா இருவரையும் தொடர்ந்து, உல்லாசப் பயணத்திற்கு மகளை அனுப்பமுடியாத நிலை; மகன் விரும்பிய ஜீன்ஸ் பேண்ட் வாங்கித் தரவியலாத கையறு நிலை இவற்றையெல்லாம் கவிதையாக்கி நம் கண் முன்னே காட்சிப்படுத்தி இறுதியாக அந்தக் கவிதையை இப்படி முடித்திருக்கிறார் மகாகவி.

"என் கேள்விகளை இப்படி எனக்குத் தயாரித்துக் கொடுத்த
வாழ்க்கையிடம்
நான் கேட்க வேண்டிய கேள்விகளை இரவில் கேட்டேன்.

வாழ்க்கை
எனக்குரிய விடைகளைச் சொல்ல
விடியலை என்னிடம் அனுப்பி வைத்தது.
விடியல் ஒன்றும் சொல்லவே இல்லை"

என்று இயல்பு வாழ்வை மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார் மகாகவி. இவ்வாழ்வியல் கவிதையைத் தொடர்ந்து "திசை கடக்கும் சிறகுகள்" என்ற நூலில் (2015) "குடும்பப் படம்" என்றொரு கவிதை. இக்கவிதையில் அரசு அதிகாரிகள் வீட்டிற்கு வந்து குடும்ப உறுப்பினர்களை, குடும்பப் படத்துடன் ஒப்பிட்டுச் சரி பார்க்க வேண்டும் வீட்டில் உள்ளவர்களை அழைக்கவும் என்ற போது....

"மகன் அமெரிக்காவில்;

*மகள் கனடாவில்;*
*மனைவி*
*மகளுக்குக் குழந்தை பிறக்கும்*
*தருணம் கருதிப் பறந்திருக்கிறார். இங்கில்லை"*
*என்றேன்.*

*'உங்கள் குடும்பத்தில்*
*யார்தான் உங்களோடு உள்ளார்கள்?*
*நாங்களே படம் எடுத்துக் கொள்கிறோம்*
*அதிகாரிகளின் குரலில் கொஞ்சம்*
*ஆத்திரம்.*

*'நான் இருக்கிறேன்.*
*நான் வளர்க்கும் நாயிருக்கிறது*
*என் குடும்பம் சார்ந்த ஒரு கொன்றை மரம்:*
*கூட்டில் இரண்டு மூன்று குருவிகள்:*
*வந்துபோகும் காக்கைகள் அப்படியே*
*வாசல் தாடையில்*
*செம்பருத்தி, அரளி, செவ்வந்தி*
*மற்றும் காதுக் கம்மல்களைப் பூத்துவைக்கும்*
*செடிகள் உள்ளன.'*
*உங்கள் குடும்பமா இவை?'*
*வினா வெடித்தனர்.*

*இப்படி வீட்டில் வளர்க்கும் நாய், வீட்டுக் கொன்றை மரம், குருவிகள், காகம், பூத்துக் குலுங்கும் மலர்ச்செடிகள் இவற்றைக் குடும்ப உறுப்பினர்களாகக் கருதும் வாழ்வியல்தான் எத்தனை அழகானது என்பதை வார்த்தைகளால் சொல்லி மாளாது. உணர்தலே அழகு.*

*வாழ்வில் அனைத்தையும் ஆண்டு அனுபவித்து மூப்பு எனும் பருவத்தை அடையும்போது அடங்கி, மூலையில் முடங்கி, முனகும் பருவமல்ல... மூப்பென்பதே வாழ்வின் சாரம் என்று மூப்பிற்குப் புதிய முகவரி அளிக்கிறார் மகாகவி. "கருவறையிலிருந்து ஒரு குரல்" (1987) என்ற நூலில் மூப்பு என்ற தலைப்பில் அமைந்துள்ள கவிதை....*

*"அசைவுகளை*

*நிறுத்துவதற்கு ஓர்*
*அமர அலை ஆக்கினைகள் பிறப்பிக்கும்..*

*மரணத்தின் மார்பில்*
*பால் அருந்தும் பருவம் -*
*இதை மூப்பென்று யார் சொன்னார்?*
*வயதுகளின் ஓரமல்ல... வாழ்க்கையின் சாரம் இது!*

*நள்ளிரவும் கண்விழித்து*
*நாடோறும்*
*எண்ணி முடியாத*
*நட்சத்திர நடுவிலே நீயும் ஓர் நட்சத்திரமாகிவிடுவாய்.*
*கண்மூடிப் படுத்தபின் படிப்பதற்கோர் கவி எழுது -*
*அதற்கு அனுபவ வார்த்தைகளைக் கைவசத்தில் கொய்துவை.*

*நெற்றி மடிப்புகளில்*
*கன்னப் பிளவுகளில் காணாமல் தொலைந்த வாலிபத்தை*
*அந்திம விளக்கெடுத்துத்*
*தேடி அலையாதே.*

*இரண்டாம் கருவறையின் கரையோரம் அவை*
*புத்தம் புதுப் பூவாய்ப்*
*பூத்திருக்கும்*
*உன்னை வரவேற்கக் காத்திருக்கும்...*
*நதியே நட*
*இன்னும் சிறு தூரம்..."*

*என்ற அற்புதமான கவிதையோடு இக்கட்டுரையின் நிறைவுப் பகுதிக்கு நாம் வந்துவிட்டோம்.*

*ஈரோடு தமிழன்பன், வாழ்வை இனிதாக்கக் கூடிய செயல்கள் மூலம் வாழ்வை வசப்படுத்திக் கொண்டு, இயற்கையோடு இயைந்து வாழ்ந்தால் வாழ்தல் இனிதாகும் என்பதை அழகுறு கவிதைகள் மூலம் வெளிப்படுத்திக் கொண்டே தொடர்ந்து இயங்கி வருகிறார். கவிதையாகவே வாழ்ந்தும் வருகிறார். அவருடைய படைப்புகள் பல தலைமுறைகள் கடந்தும் நிலைத்து நிற்கும். தமிழ் இலக்கிய உலகிற்கு ஈரோடு தமிழன்பன் அளித்துவரும் பங்களிப்பு மகத்தானது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.*

*தொடர் – 4*

# *எளிய முறையில் யாப்பறிவோம்!*

**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**
*பொருளாளர்,*
*பெங்களூரு தமிழ்ச் சங்கம்*



*பாடம்- 4. தளை:*
*பாவலர்காள்!*

*இதுவரை எழுத்து, அசை, சீர் உள்ளிட்ட மூன்று பாடங்களை அறிந்தோம். இப்பொழுது நான்காம் பாடத்தில் தளை என்பதைப் பற்றி அறிவோமா? வாருங்கள்.*

*ஒவ்வொரு பாடத்திலும் என்னுடன் பயணப்பட்டால் தெளிவு ஏற்பட்டு எளிதில் இலக்கணம் கற்று விடலாம். என்னுடன் பயணப்பட்டுத்தான் பாருங்களேன்! ஏற்கெனவே கற்ற, மூன்று பாடங்களை விட, தளை பற்றிய பாடம் எளிதில் புரிய இயலாது. ஒரு முறைக்குப் பலமுறை வாசித்து உள்வாங்கிப் பயிற்சி எடுத்தால் மட்டுமே எளியதாகும். ஆகவே ஊன்றி உற்று நோக்கிப் பயிற்சி எடுங்கள். இனிப் பாடத்திற்குள் நுழைவோம்!*

*தளை:*
*சீரோடு சீர் சேர்ந்து இயற்றும் அடியிலே சீர்களின் இடையிலே நின்று இசைத் தொடர்ச்சி உண்டாகுமாறு அசைச் சீர்களைக் கட்டுவது அதாவது இயற்றுவது, சீர்களை ஒன்றுடன் ஒன்றாகப் பிணைப்பதையே தளை எனப்படும்.*

*முதலில் உள்ள சீருக்கடுத்து வரும் சீரை முதல் சீரின் ஈற்றசையை ஒட்டி, அடுத்து வரும் சீரின் முதல் எழுத்தென்னும் முதல் அசையும் நெறிப்படி ஒன்றியும் ஒன்றாமலும் பாடலுக்கேற்ப கூடி நிற்பதே தளை எனப்படும். இந்தத் தளை எத்தனை வகைப்படும் என்பதைப் பார்ப்போம்.*

*கீழே வருவதை நோக்குங்கள்:*
*1. நேரசை ஒன்றி வரும் ஆசிரியத் தளை.*
*2. நிரையசை ஒன்றி வரும் ஆசிரியத் தளை.*
*3. இயற்சீர் வெண்டளை (இது ஆசிரியப் பாவிற்குரிய ஈரசைச் சீராகும்)*
*4. வெண்சீர் வெண்டளை (இது காய்ச்சீர் என்னும் மூவசைச் சீருக்குரியது)*

*5. கலித்தளை (இது கலிப்பாவிற்குரிய தளையாகும்)*
*6. ஒன்றிய வஞ்சித் தளை ( வஞ்சிப் பாவிற்குரிய தளையாகும்)*
*7. ஒன்றாத வஞ்சித் தளை ( இதுவும் வஞ்சிப் பாவிற்குரியதே)*

*ஆக மொத்தம் ஏழு தளைகளாகும். நன்றாக மீண்டும் மீண்டும் கற்றுப் பொருளுணர்ந்து கொள்ளுங்கள். ஒன்றுதல் என்றால் பொருந்துதல், பொருந்தி வருவது.*
*வெண்+ தளை= வெண்டளை யாகும். வெண்டளை - என்பது ஏற்கெனவே சுட்டிக் காட்டியது போல், வெண்பாவுக்குரிய தளையாகும்.*
*கலித்தளை - இது கலிப்பாவுக்குரிய தளையாகும்.*
*ஒன்றிய வஞ்சித் தளை எனப்படுவது ஏற்கெனவே கூறியது போல் வஞ்சிப் பாவிற் குரிய தளை யாகும். கனி முன் நிரையசை வரும்.*
*ஒன்றாத அதாவது பொருந்தி வராத தளை என்பது கனிச்சீர் முன் நேரசை வருகின்ற தளை யாகும். நேரசை முன் நேரசையும், நிரையசை முன் நிரையசையும் வருதல் ஒன்றிய ஆசிரியத் தளை யாகும். இவ்வாறு பொருந்தி வராமல் நேரசை முன் நிரையசையும், நிரையசை முன் நேரசையும் வருவது ஒன்றாததால் அதாவது, பொருந்தி வராததால் ஒன்றாத தளையாகும்.*

*ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவை. நான்கு பா வகைகளாகும். இவற்றில் ஏதேனும் ஒரு பாவின் சீரில் நிற்கும் ஈற்றசையுடன் அடுத்து வரும் சீரின் முதல் அசையுடன் ஒன்றி அதாவது பொருந்தி வந்தால் அவ்விரு சீர்களுக்கிடையில் தோன்றுவதே தளையாகும். இனி தளையைப் பற்றி சிறிது விளக்கமாகக் காண்போம்.*

*1. நேரொன்றிய ஆசிரியத் தளை:*
*ஈரசையின் ஈற்றில் ( ஈற்று என்றால், இறுதி, கடைசி என்பது பொருளாகும்.) ஈற்றின் ஆசிரியச் சீர் நின்று, நேரசையை முதலாக வரும். அடுத்த சீருடன் சேரும்போது உண்டாகும் தளையானது நேரொன்று ஆசிரியத் தளை யாகும்.*

*மாச்சீருக்கு முன்பு அதாவது தேமாச்சீருக்கு முன்னே, அல்லது புளிமாச் சீருக்கு முன்னே நேர் அசை வருவதே நேரொன்றிய ஆசிரியத் தளை எனப்படும். எடுத்துக் காட்டாக, அகவல் என்ற நேரிசை ஆசிரியப் பாவினைப் பார்ப்போம்.*

*"போது சாந்தம் பொறப ஏந்தி*
*ஆதி நாதற் சேர்வோர்*
*சோதி வானம் துன்னு வாரே!"*



*இந்தப் பாவின் வாய்பாடு அறிந்து அடுத்த தளைக்குப் போவோம். நேரிசை ஆசிரியப் பாவில் எத்தனை அடிகள் வேண்டு மென்றாலும் எழுதலாம். ஆனால் பாவினை முடிக்கும்போது ஈற்றடிக்கு (கடைசி அடிக்கு) முன்னால் உள்ள அடி மூன்று சீர் வந்து, கடைசி அடி நான்கு சீருடன் முடியும்போது கடைசி சீரின் கடைசி அசை ஏகாரத்தில் முடிய வேண்டும். மேலே உள்ள பாவில் 'ரே' என்று ஏகாரத்தில் முடிந்திருப்பதை உற்று நோக்குங்கள். இது போல் பா முடிதல் வேண்டும். அடி என்பது மரபுப் பாவில் சொல்லப்படும் வரியாகும். புதுக்கவிதையைப் போல வரி கணக்கு வராது என்பதையும் உணர்க. இனி, மேலே உள்ள பாவினை ஒட்டித் தளையைப் பார்ப்போம்.*

*மேலே உள்ள பா, நேரொன்றிய ஆசிரியத் தளையால் முழுவதும் முடிந்து வந்திருக்கும் அகவல் என்ற ஆசிரியப்பாவாகும்.*
*போ+ து = நேர்+நேர்- தேமா.*
*மா முன்னே சாந் என்ற நேரசை வந்திருப்பதைக் காண்க. நேரசை முன்னால் நேரசை வந்தால் நேரொன்றிய ஆசிரியத் தளை ஆகும்.*
*அடுத்து………*

*2. நிரையொன்றிய ஆசிரியத் தளை:*
*நிரையசைச் சீரின் கடைசியில் ஆசிரியச் சீர் நின்று, நிரையசை முதலாக அடுத்து வரும் சீருடன் சேரும்போது உள்ள தளையானது நிரையொன்றிய ஆசிரியத் தளை யாகும். நிரை ஒன்றிய ஆசிரியத் தளைக்கு உகந்த சீராக வருவது கூவிளம், கருவிளம் என்ற விளச் சீர்களாகும். கூவிளம் கருவிளம் சீருக்கு முன்னே நிரையசை வருவதே நிரையொன்றிய ஆசிரியத் தளையாகும். இந்தத் தளைக்கேற்ற ஒரு பாவினை எடுத்துக் காட்டாக கீழே உள்ள பாவினைப் பாருங்கள்.*

*"அணிநிழல் அசோகமர்ந் தருள்நெறி நடாத்திய*
*மணிதிகழ் அவிரொளி வரதனைப்*
*பணிபவர் பவம்நனி பரிசறுப் பவரே!"*

*இப்பா முழுவதும் நிரையொன்றிய ஆசிரியத் தளையால் வந்துள்ள அகவல் என்ற ஆசிரியப்பாவாகும். அணி+நிழல்= நிரையசை+ நிரையசை = கருவிளம். நிரையசை முன்னே "அசோ" என்னும் நிரையசையில் தொடங்கி இருப்பதை*

*நோக்குங்கள். நிரையசை முன்னே நிரையசை வந்தால் நிரையொன்றிய ஆசிரியத் தளையாகும்.*

*அடுத்து………*

*நேரொன்றிய ஆசிரியத் தளையும் நிரையொன்றிய ஆசிரியத் தளையும் விரவியும் அகவற்பா வருவதுண்டு. (விரவி என்றால் எங்கோ ஒன்று இரண்டாகக் கலந்து வருவதை இலக்கண ஆசிரியர் விரவி என்று குறிப்பிடுவர். தளை மாறி வருவதால் இப்படிக் குறிப்பிடுகிறார் என்று உணர்க)*
*எடுத்துக் காட்டாக ஒரு பாவினைப் பார்ப்போம்.*

*"அவரோ வாரார் தான்வந் தன்றே*
*நறும்பூங் குரவம் பயந்த*
*செய்யாப் பாவை கொய்யும் பொழுதே!"*
*பாடல்: ஐங்குறு நூறு.*

*இப் பாடலில்……*

*அவரோ, நறும்பூங், குரவம், பயந்த, பொழுதே போன்ற சீர்கள் நிரையசையிலும், வாரார், தான்வந், தன்றே, செய்யாப், பாவை, கொய்யும் போன்ற சீர்கள் நேர்சையிலும் தொடங்கி இருப்பதை நோக்குங்கள். ஆக, நேர் முன் நிரை, நிரை முன் நேர் வந்திருத்தலால் தளை ஒன்றியும் ஒன்றாமலும் வரலாம் என்பதையும் உணருங்கள்.*

*3. வெண்சீர் வெண்டளை:*

*இந்த வெண்சீர் வெண்டளை தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் என்ற வாய்பாடு வெண்பா என்ற பாவிற்குரியது ஆகும். எல்லாமே காய்ச் சீராக இருப்பதால் காய்ச்சீருக்கு முன்னே நேரசை வருவதுவே வெண்சீர் வெண்டளை என்பதாகும்.எடுத்துக் காட்டாக கீழே உள்ள திருக்குறளைப் பாருங்கள்.*

*"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு." ( 397)*

*இக் குறள் வெண்பாவில் ஈற்றுச் சீரைத் தவிர்த்து மற்ற எல்லாச் சீர்களுமே வெண்சீர் வெண்டளை வருமாறு வள்ளுவனார் எழுதி உள்ளார்.*
*யா+தா+ னும்= நேரசை + நேரசை+ நேரசை= தேமாங்காய் ஆகும். இந்த 'யாதானும்' என்னும் தேமாங்காய் முன் 'நாடாமால்' என்னும் சீரின் முதலசை 'நா' என்னும் நேரசையில் தொடங்கி இருப்பதை நோக்குங்கள்.*

# மாதவி, சுரமஞ்சரி பாத்திர புனைவு - அழகியல் ஓர் ஒப்பீடு

**சி.அனுப்பிரியா**

*இளங்கலைத் தமிழிலக்கியம் மூன்றாமாண்டு,*
*விவேகானந்தா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி,*
*வீராச்சிப்பாளையம், சங்ககிரி, சேலம்*

**முன்னுரை:**

*பெண்கள் என்றாலே "அழகு" என்பார்கள். அத்தகு அழகுப் பெண்கள் தங்களை மேலும் அழகுபடுத்துவதில் ஆர்வம் கொண்டவர்கள். காப்பியக் காலங்களில் வாழ்ந்த பெண்கள், இன்றைய பெண்களைப் போல அறிவியல் முறைப்படியால் அமைந்த ஒப்பனைப் பொருட்களைப் பயன்படுத்தி உடலுக்குத் தீங்கு ஏற்படுத்துவது போல் அழகுபடுத்திக் கொள்ளாமல், அன்றைய பெண்கள் இயற்கையாக அமைந்த பல பொருட்களைக் கொண்டும், அதனால் விளையும் பல அறிவியல் நன்மைகளையும் அறிந்து அழகுபடுத்திக் கொண்டவர்கள். அவ்வாறு ஐம்பெருங்காப்பியங்களான சிலப்பதிகாரத்திலும், சீவக சிந்தாமணியிலும் இடம்பெறும் அழகு நங்கைகளான மாதவி, சுரமஞ்சரியின் அணிகலன்கள், ஒப்பனை போன்ற பல வகைகளில் தங்களை அழகுபடுத்திக் கொள்வதை ஓர் ஒப்பீட்டுப் பார்வையில் இங்குக் காணலாம்.*

**கண்ணழகு:**

*மௌனம் பேசும் வார்த்தைகளை விட, கண்ணால் கதைக்கும் வார்த்தைகள் விலை மதிப்பற்றது, உணர்வுகள் பல கலந்தது. கண்களால் பேசும் வார்த்தைகளைக் கூட அழகுடன் நயமாக வெளிப்படுத்துபவர்கள் பெண்கள். அவ்வாறு மாதவி, சுரமஞ்சரியின் கண்களுக்காக இளங்கோவடிகளும், திருத்தக்க தேவரும் பயன்படுத்திய கற்பனை நயத்தினைக் காணலாம்.*

*"மைத்தடம் கண் மணமகளிர் கோலம்போல் வனப்பு எய்தி" – 1*

*சிலப்பதிகாரத்தில் உள்ள மாதவி எனும் பெண்ணின் அழகு நலத்தையும், ஆடலில் அவளது திறத்தையும் பல பாடல்களில் கூறியுள்ளார், இளங்கோவடிகள். மாதவியின் கண்களானது மையிட்டு மணப்பெண் போலக் காட்சியளிப்பதாக வருணித்துள்ளார்.*

*"மா மலர் நெடுங்கண் மாதவி" - 2*

*மேற்கண்ட வரிகளில் மலர் போன்ற நீண்ட கண்களை உடையவள் என்று மலரோடு ஒப்பிட்டுள்ளார். மேலும் அழகிய மான் போன்ற மயக்கும் பார்வையைக் கொண்டு விளங்குபவளே "மாதவி" என்றும் இளங்கோவடிகள் கூறியுள்ளார்.*

*சீவக சிந்தாமணியில் சுரமஞ்சரியைத் திருத்தக்க தேவர், எவரும் வருணிக்க இயலாத வகையில் மிகுந்த சிறப்பான கற்பனை நயத்தோடு வருணித்துள்ளார்.*

*"மழைக்கண் மாதரை மாலுறு நோய் செய்வான்" - 3*

*பெண்களின் கண்களானது மயக்கும் தன்மையுடையது என்பதையும் தாண்டி, அக்கண்களானது குளிர்ச்சி பொருந்தியதும், குளிர்ந்த பார்வையைக் கொண்டதும் என்றும் வருணித்துள்ளார். மேலும்,*

*"ஐயரிய வாட்கண்" - 4*

*எனும் சொற்களின் வாயிலாக சுரமஞ்சரியின் கண்ணானது வாள் போன்ற கூரிய விழிகளை உடையது என்கிறார்.*



**மாதவி**



**சுரமஞ்சரி**

*இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் மையினை உடைய கண் என்று கூறினாலும், திருத்தக்க தேவர் மலர்க்கண், மாவடு போன்ற தோற்றத்தினை உடைய கண் என்று சிறப்பாக வருணித்துள்ளார். பெண்களின் கண்களை கயல் மீன் என்று கூறுவதைத் தாண்டி, திருத்தக்க தேவர் மாவடுவுடன் ஒப்பிட்ட நயமானது அனைவரையும் மயக்கும் வகையில் அமைந்துள்ளது.*

***குழலழகு:***

*பெண்களின் அழகில் முக்கியப் பங்கு வகிப்பது கூந்தலே ஆகும். அதுவும் காப்பியக் காலப் பெண்களின் கூந்தல் கருமையாகவும், கொடி போல் நீண்டு காணப்படுவதாகவும் கூறுவர்.*

*“பத்து துவரினும் ஐந்து விரையினும்*
*முப்பத்து இருவகை ஓமாலி கையினும்*
*...........................................................................................*
*புகையின் புலர்த்திய பூமென் கூந்தலை" - 5*

*மாதவியின் மனம் மயக்கும் அழகுகளில் கூந்தலே அழகுத் தோற்றத்தினை வழங்குகிறது. கோவலனுடன் ஊடியும், கூடியும் மகிழ்ந்த மாதவி, தன்னுடைய கூந்தலுக்கு பத்து வகை துவரினாலும், ஐந்து வகை வாசனைப் பொருட்களாலும், முப்பத்திரண்டு வகை திரவியப் பொருட்கள் கலந்தும், நல்ல நீரினாலும், வாச நெய் தேய்த்த மணமுடைய அழகிய கூந்தலைக் கழுவிய பின், அக்கூந்தலின் ஈரம் போக்க அகில் புகைகாட்டி உலர்த்தி, ஐந்து வகை கஸ்தூரிக் குழம்பு தடவி கூந்தலை வாசனைப்படுத்திய விதத்தை இளங்கோவடிகள் அழகுறக் கூறியுள்ளார்.*

*“ஏத்தரு மல்லிகை மாலை ஏந்திய*
*பூத்தலைக் கருங்குழல் புரியி னால்புறம்" - 6*

*கண்களுக்கே! சிறப்பாக வருணனை கூறிய திருத்தக்க தேவர், சுரமஞ்சரியின் கூந்தலானது மல்லிகை மாலை சூடியும், பல வகைப் பூக்களைச் சூடியும், கயிறுபோல் சீவகனைக் கட்டி இழுக்கும் திறம் உடையதே! என்றும் வருணித்துள்ளார். மேலும் சுரமஞ்சரியின் கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டி, மணம் கமழும் தன்மையுடையது என்கிறார் திருத்தக்க தேவர்.*

*சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் பலவகை வாசனை திரவியங்களைக் கூறி தனது திறத்தை வெளிப்படுத்தினால், சீவக சிந்தாமணியில் திருத்தக்க தேவர் சுரமஞ்சரியார் இலம்பகம் முழுவதும் தனது கற்பனைத் திறத்தாலே, எளிதாக மனம் கவர்ந்தார்.*

***கைவளை சிறப்பு:***

*பெண்கள் அணிகலன்கள் அணியும் வழக்கமானது, பழங்காலம் தொட்டே அறிவியல் நன்மையின்படி அமைந்த ஒரு நற்பழக்கமாகும். அவ்வாறு மாதவியும், சுரமஞ்சரியும் அணிந்த கைவளையின் சிறப்பினைக் குறித்துக் காணலாம்.*

நடன மங்கையான மாதவி அழகில் மெய்மயங்கச் செய்பவள். மேலும் மாதவியின் ஆடல் ஆசிரியர், அழகு நலம், அணிகலன்கள், அழகினைக் குறிப்பிடுவதற்கென பல பாடல்களையே இயற்றியுள்ளார், இளங்கோவடிகள்.

"மத்தக மணியொடு வயிரம் கட்டிய
சித்திரச் சூடகம் செம்பொன் கைவளை
பரியகம் வால்வளை பவழப் பல்வளை" - 7

மேற்கண்ட வரிகளில் மாதவியின் கைவளையல்கள் பல விதங்களில், பல வகைகளில் அமைந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளார். அழகிய வேலைப்பாடுகள் மிகுந்த கைக்கடகத்தின் முகப்பில் மாணிக்கமும், வயிரமும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. செம்பொன்னால் செய்த கைவளையும், கைச்சரியும் சங்கு வளையல்கள், பவளத்தாலான கைவளையல்களையும் அணிந்துள்ள செய்திகளை மேற்கண்ட வரிகளால் அறியலாம்.

ஓவியப்பாவை போன்ற ஒப்பரிய நங்கையாம் சுரமஞ்சரி கைகளில் ஒளிரக்கூடிய மணிகள் நிறைந்த கடகத்தை அணிந்தவள். அத்தகைய சுரமஞ்சரியின் கைகளில் உள்ள முடிகள் கூட மிக மென்மையானதாகக் காணப்படும் என்று திருத்தக்க தேவர் குறிப்பிடுகிறார்.

**குழைகள்:**

சங்க இலக்கியக் காலங்களில் வாழ்ந்த பெண்கள், இன்றைய பெண்களைப் போல சிறு காதணிகளையும், பெரும் காதணிகளையும் அணியவில்லை. காதுகளில் அழகிய பெரும் குழையினை அணிந்தவர்களாகவே காணப்பட்டனர்.



மாதவி இந்திர நீலக் கல்லோடு, பெரிய வயிரமும் சேர்த்துக் கட்டிய "குதம்பை" எனும் குழையினை காதிலே அணிந்து காணப்பட்டாள்.

மயக்கும் தோற்றத்தினை உடைய சுரமஞ்சரியின் ஒரு காதில் அணிந்த மாணிக்கக் குண்டலத்தின் ஒளி, மற்றொரு குழையின் ஒளியோடு கலந்து வானவில்லை தோற்றுவித்தது போல ஒளிரும் அளவுக்கு சுரமஞ்சரியின் அழகினை அழகாக பாடல் வரிகளாக வடிவமைத்துள்ளார் திருத்தக்க தேவர். இங்கு சுரமஞ்சரியின் குழையின் கற்பனை நயமானது "வானவில்லையே உருவாக்கியது" என்பதன் வாயிலாகச் சிறந்த வருணனையை அறியலாம்.

**மேகலை மேன்மை:**

*மாதவி தன் ஆடையின் மீது "விரிசிகை" எனும் அணியினை மேகலையாக உடுத்திக் காணப்பட்டாள். திருத்தக்க தேவரின் கற்பனை நயத்தை பாராட்டுவதற்கு வார்த்தைகள் எதுவும் போதாது. "அதாவது சுரமஞ்சரியின் இடையானது மேகலையைத் தாங்கினால், அவளது இடையே வருந்துமாம்" என்ற அளவிற்குச் சிறப்பாகத் தனது நயத்தை வெளிப்படுத்தி உள்ளார். சுரமஞ்சரியின் மேகலையில் இந்திர நீல மணியானது, பதிக்கப்பட்டு, அழகிய தோற்றத்துடன் காணப்பட்டாள். கொடி போன்ற மெல்லிய இடையினை உடையவளாகக் காணப்பட்டாள்.*



***காற்சலங்கை:***

*மாதவியும், சுரமஞ்சரியும் தங்களது அழகிய சிற்றடிகளில் சிலம்பும், கிண்கிணியும் சேர்ந்து ஒலிக்கும் வகையில் இரண்டையும் சேர்த்தே அணிந்திருந்தனர். மேலும் மாதவி பெண்கள் காலில் அணியும் பரியகம், பாடகம், சதங்கை, கிண்கிணி, போன்ற ஆபரணங்களை அணிந்தும் காணப்பட்டாள்.*



***முடிவுரை:***

*பெண்களில் இயல்புகளில் ஒன்று "அழகுபடுத்துதல்" என்பது. இயல்பாகவே பெண் என்பவள் தன்னை அழகுபடுத்திப் பார்ப்பதில் ஆர்வம் கொண்டவள். அத்தகு ஆர்வத்தினை ஒவ்வொரு ஆசிரியனும், தனது கற்பனை நயத்தால் சிறப்பாக வெளிப்படுத்துகிறான். இங்கு இளங்கோவடிகள் ஒரு பெண்ணிற்குக் கூறிய அழகு நலன்களையும், திருத்தக்க தேவரின் கற்பனை நயங்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பதின் வாயிலாக அவர்களது கற்பனைத் திறத்தினை நாம் நன்கு அறியலாம்.*



***மேற்கோள் நூல்கள்:***


*1.கானல் வரி பாடல்- 1 - சிலப்பதிகாரம் தெளிவுரை, ஞா. மாணிக்கவாசகன் உரை, உமா பதிப்பகம், சென்னை.*

*2.கடலாடு காதை 174 - சிலப்பதிகாரம் தெளிவுரை, ஞா. மாணிக்கவாசகன் உரை, உமா பதிப்பகம், சென்னை.*

*3.சுரமஞ்சரியார் இலம்பகம் 2004 - சீவக சிந்தாமணி தெளிவுரை*

*4.சுரமஞ்சரியார் இலம்பகம் 2017 - சீவக சிந்தாமணி தெளிவுரை*

*5.கடலாடு காதை 80 - சிலப்பதிகாரம் தெளிவுரை, ஞா. மாணிக்கவாசகன் உரை, உமா பதிப்பகம், சென்னை.*

*6.சுரமஞ்சரியார் இலம்பகம் 2007 - சீவக சிந்தாமணி தெளிவுரை*

*7.கடலாடு காதை 95 - சிலப்பதிகாரம் தெளிவுரை, ஞா. மாணிக்கவாசகன் உரை, உமா பதிப்பகம், சென்னை.*

# குற்றியலுகரம்

**பேராசிரியர் கு. இராமகிருட்டினன்**

*முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,*
*தென்னிந்திய மொழிகள் துறைத் தலைவர்,*
*பஞ்சாபு பல்கலைக்கழகம்,*
*சண்டிகார் – 160014*



*குற்றியலுகரத்துக்கு மூன்று தேவைகள்:*

*ஒரு சொல்லின் இறுதியில் உகரம் வரும்.*

*சொல்லின் இறுதி வல்லெழுத்தில் முடியும்.( அதாவது இறுதி எழுத்துக் கு,சு,டு,து,பு,று என முடியும்)*

*ஒரு சொல் இணைக் குறிலாக இருக்கக் கூடாது. ( அதாவது, பசு, அது, இது முதலியனவாக இருக்கக்கூடாது)*

*அஃது ஆறு வகைப்படும்.*

*எ.டு.:*

*நாகு (காசு, ஆறு) -நெடிற்றொடர்க் குற்றியலுகரம்,*

*பத்து (காப்பு) -வன்றொடர்க் குற்றியலுகரம்,*

*பந்து -மென்றொடர்க் குற்றியலுகரம்,*

*கயிறு -உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்,*

*தெள்கு -இடைத்தொடர்க் குற்றியலுகரம்,*

*எஃகு -ஆய்தத்தொடர்க் குற்றியலுகரம் என்பன.*

*குறிலெழுத்துக்கு ஒலி அளவு ஒரு நொடி. ஆனால் குற்றியலுகரத்துக்கு அளவு அரை. எனவே அஃது இருந்தும் இல்லாததுபோல் கருதப்படும். குற்றியலுகரத்துக்கு முன் உயிரெழுத்து வந்தால் குற்றியலுகரம் மறைந்து விடும். அப்பொழுது வல்லொற்று மட்டும் நிற்கும் ( காசு-காச்,பத்து-பத்த் என்பனபோல்). அப்போது உயிரெழுத்துச் சேர்ந்தால் இறுதி வல்லொற்று உயிர்மெய்யாகிவிடும் (காச்+ஆ=காசா, பத்த்+இல்=பத்தில்)*

ஆனால் சிலர், `எழுத்துவால்` `கொழும்புவில்` `முத்துவை` `பந்துவின்` `காசுவுக்கு` என்று தவறாக எழுதுகின்றனர், பேசுகின்றனர் (எழுத்தால், கொழும்பில், முத்தை, பந்தின், காசுக்கு, என்பனவே சரி).

பிற மொழிகளைச் சரியாகப் பேசவேண்டும், எழுதவேண்டும் என நினைப்பவர்கள் நம் தமிழ் மொழியில் சரியாக எழுதவேண்டும், பேசவேண்டும் என்று எண்ணுவதில்லை என்பது வருத்தத்துக்குரியது.

இரண்டெழுத்துள்ள ஒரு சொல்லில் முதலெழுத்து நெடிலாகவும் இறுதி எழுத்துக் குற்றியலுகரமாகவும் இருந்தால் அவ் வுகரம் நெடிற்றொடர்க் குற்றியலுகரம் என்றழைக்கப் பெறும். ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகளையுடைய ஒரு சொல்லில் இறுதி எழுத்துக் குற்றியலுகரமாகவும் அதற்குமுன் வரும் எழுத்து உயிர்மெய் யெழுத்தாகவும் இருந்தால், அஃது உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் என்றழைக்கப் பெறும்.

நெடிற்றொடர்க் குற்றியலுகரத்திலும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரத்திலும் இறுதியில் டு, று என்ற எழுத்துகள் இருந்தால், வேற்றுமையில் (வேற்றுமை உருபு விரிந்து வந்தாலும், தொக்கி வந்தாலும்), டு, று இரட்டிக்கும். எ.டு. நாடு - நாட்டில், கயிறு - கயிற்றால். நாடு- நாட்டுப் பாடல், வீடு-வீட்டுத் தோட்டம், கயிறு-கயிற்றுக்கட்டில், வயிறு-வயிற்றுவலி.

அடுத்துச் சில சொற்களைப் பார்ப்போம்: வீடை, ஓடை (மாற்று), அடையாரில், மூணாரின் அல்லது மூணாறின், பாலாறுக்கு. இவை பிழையான சொற்கள் எனப் புலப்படும் (வீட்டை, ஓட்டை, அடையாற்றில், மூணாற்றின், பாலாற்றுக்கு என்பவை பிழையில்லாதவை).

தமிழ் நாட்டில் பெரும்பாலான ஆறுகள் "ஆறு" என்றே முடிகின்றன. ஆனால் பேச்சிலும் எழுத்திலும் இவ்வாறு பயன்படுத்துவது தவறு. செய்தித்தாளிலும் வானொலியிலும், தொலைக்காட்சியிலும் இத்தவற்றைச் செய்கிறார்கள். திருந்த வேண்டும். செந்தமிழ் வளர எல்லாரும் துணை புரிய வேண்டும்.

நெடிற்றொடர்க் குற்றியலுகரமும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரமும்-2 :

'று' வில் முடியும் சொற்கள் பற்றி முன்பு அறிந்தோம். இப்பொழுது 'டு' வில் முடியும் சொற்களைப் பார்ப்போம்.

1. ஒற்றை நெடிலெழுத்துக்குப்பின் 'டு' வந்தால் (அதாவது ஈரெழுத்துச் சொல்லில் நெடிலெழுத்துக்குப் பின்'டு' வந்தால்) அது நெடிற்றொடர்க் குற்றியலுகரம் எனப்படும். எ.டு: ஆடு, மாடு, காடு, வீடு. வேற்றுமையில் அவ் வல்லொற்று இரட்டிக்கும். ஆட்டை, மாட்டால், காட்டுக்கு, வீட்டிலிருந்து, வீட்டது, ஏட்டில் எனவாகும்.

*2. இச் சொற்கள் அடையடுத்து வந்தால் உயிர்த்தொடர்க் குற்றியலுகரமாகும். எ.டு: வெள்ளாடு, வரையாடு, பசுமாடு, கல்வீடு, பெருங்காடு, குறிப்பேடு. இவையும் வேற்றுமையில் இரட்டிக்கும். எ.டு: வெள்ளாட்டை, பசுமாட்டால், பழவேற்காட்டுக்கு, கல்வீட்டிலிருந்து, கல்வீட்டது, குறிப்பேட்டில் எனவாகும்.*

*3. இரண்டுக்கும் மேற்பட்ட எழுத்தோடு உயிர்மெய் எழுத்தையடுத்து ‘டு’ அல்லது ‘று’வந்தால் அச் சொற்களும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரமாகும். எ.டு: அகடு, தகடு, பகடு, கயிறு, வயிறு, கிணறு. அக் குற்றியலுகரமும் வேற்றுமையில் இரட்டிக்கும். எ.டு: அகட்டை, தகட்டால், பகட்டுக்கு, கயிற்றிலிருந்து, வயிற்றது, கிணற்றில்.*

*4. வல்லினமன்றி வேற்றினச் சொற்கள் வந்தாலும் வேற்றுமையில் இரட்டிக்கும் . எ.டு: சோற்று வளம், ஆட்டு மந்தை, வயிற்று வலி, தகட்டு வீடு, வயிற்றிடை*

*5. சிறுபான்மை ‘டு’ ‘று’ வேற்றுமையில் இரட்டிக்கா. எ,டு: காடு சென்றான், கிணறு மூழ்கினான், ஆறு+தலை=ஆறுதலை*

*6. சிறுபான்மை அல்வழியிலும் இரட்டிக்கும். காடு+அரண்=காட்டரண், களிறு+யானை=களிற்றி யானை, மூட்டுப் பூச்சி, வெளிற்றுப் பனை. குருட்டுப் பையன், வறட்டாடு, செவிட்டு மனிதன், முரட்டுக் காளை, முரட்டு மனிதன்.*

*முன்பு தெரிவித்தவாறு நெடிற்றொடர்க் குற்றியலுகரத்தையும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரத்தையும் அடுத்து வருமொழி முதலில் வல்லொற்று வந்தால், அவ் வல்லொற்று இரட்டிக்கும். எ.டு. வீட்டுக் கதவு, கயிற்றுக் கட்டில்.*

*7. வல்லின ‘டு’, ‘று’ தவிரப் பிற வொற்றுகள் அல்வழி, வேற்றுமை எனும் இரு வழிகளிலும் இரட்டித்தலும் உண்டு. எ.டு: வெருகு+கண்= வெருக்குக் கண், எருது+மாடு = எருத்து மாடு.)*

## ***குற்றியலுகரம்:***

*‘மாசுவை’ என்று ஒரு நாளேட்டில் கண்டேன். அதை ‘’மாசை’’ என்று திருத்தினேன்.*

*‘’மாசை என்று வாரா.*

*"இன்" சாரியை வரவேண்டுமன்றோ?’’ என்று ஒருவர் வினவினார். மேலும்,*

*‘’குற்றிய லுகரத்து இறுதி முன்னர் முற்றத் தோன்றும் இன்னென் சாரியை (தொ195) இந்நூற்பாவைக் காண்க. பிழையான வழக்கு வந்துவிட்டதென்பதற்காக அவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை. களைய முற்படுவேண்டும்.’’என்று*

*மேலும் தெரிவித்தார்.*

*தொல்காப்பியத்தில் (தொல்.எழு. நச்.406-483) குற்றியலுகரம் பற்றி விரிவாகக் காண்கிறோம். அதில் சாரியைபற்றிக் காணலாம்(415);*

*'மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை '. எ.டு. தேக்கங்கோடு புன்கங்கோடு வேப்பங்கோடு(416); சூதம்போர் (417);*

*அக்குச் சாரியை: அரசக்கன்னி முரசக்கட்டில். குன்றக்கூகை.*

*அத்துச் சாரியை : இருட்டத்துக் கொண்டான்.*

*அன், அக்கு இரண்டும் ஒன்றாக வரும். பார்ப்பனக்குழவி (418);*

*எண்ணுப்பெயர்க் கிளவி அன் பெற்றுப் புணரும் (419);*

*ஒன்றன்காயம்.*

*இன் சாரியை: (420) வண்டின்கால் (476) ஒரு பதினாயிரம் (477) ஒருபதின் கலம். ஒருபதின்பலம்.*

*அன் சாரியை: (422) யாதன் கோடு, அதன்கோடு.*

*ஏ என்னும் சாரியை: (431) தெற்கேவடக்கு, கிழக்கேமேற்கு, ஒன்றேகால் (நன்னூல்244)*

*'குற்றியலுகரத்து இறுதி முன்னர் முற்றத் தோன்றும் இன் என் சாரியை (தொ195) எனத் தொல்காப்பியர் கூறுகிறார். அதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், ''முற்ற'' என்பதனால் பிற சாரியை பெறுவனவும் கொள்க'' என்று விரித்துரைக்கிறார் என்பதனையும் உளம் கொள்க. 'சாரியை வருதலும் தவிர்தலும் விகற்பமும் உளவாகும்'.*

*எனவே குற்றியலுகரத்துக்கு இன் சாரியைமட்டும் வரும் என்பது ஏற்றுக்கொள்ளவியலாது.*

*உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்: 2*

*உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் இரண்டெழுத்துக்குமேல் ஈற்றெழுத்து வல்லொற்று உகரமாகவும் (கு,சு,டு,து,பு,று), ஈற்றயலெழுத்து உயிர்மெய்யாகவும்(உயிராகவும்) இருக்கும். எ.டு..வயிறு, கிணறு அகடு, தகடு.*



நெடிற்றொடர்க் குற்றியலுகரம் ஈரெழுத்து மொழியாய், ஈற்றெழுத்து வல்லொற்று உகரமாகவும் முதலெழுத்து நெடிலாகவும் இருக்கும். எ.டு.; நாகு, ஆறு, நாடு.

நெடிற்றொடர்க் குற்றியலுகரம் 'டு' அல்லது 'று' வில் முடிந்தால் வேற்றுமையில் இரட்டிக்கும். எ. டு.: நாடு-நாட்டு, ஆறு-ஆற்று. அவ்வாறே உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் இரட்டிக்கும்.எ.டு: வயிறு-வயிற்று, தகடு-தகட்டு.

இரண்டு குற்றியலுகரங்களும் வேற்றுமையில் ஒத்து நடக்கின்றன. (இவற்றை அடுத்து நாற்கணங்களும் வந்தாலும் வேற்றுமையில் இரட்டிக்கும்).

அடையடுத்து வந்தாலும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் நிலைமை மாறாது. அப்போதும் அஃது உயிர்த்தொடர்க் குற்றியலுகரமே; இரட்டிக்கும்: எ.டு: பெருவயிறு-பெருவயிற்று, பொற்றகடு-பொற்றகட்டு.

தொல்காப்பிய நூற்பாக்கள் 411-414உம் நன்னூல் 183-185 உம், திரு. வெள்ளைவாரணாரும் (பக்.221-225) நெடிற்றொடர்க் (ஈரெழுத்துமொழி) குற்றியலுகரம் அடையடுத்து வரும்போது எவ்வாறு அழைக்கப்பெறும் என்று குறிப்பிடவில்லை.

நெடிற்றொடர்க் குற்றியலுகரம் அடையடுத்து வந்தால் பாலாறு, செய்யாறு, மாங்காடு, சோணாடு, வெள்ளாடு என வரும். அவ்வாறு வந்தால் ஈரெழுத்துக்குமேல் வரும். சோணாடு, வெள்ளாடு, பாலாறு என ஒரு சொல் நீர்மைத்தாய் ஆகும். சொல்லிலக்கணம் பார்த்தால் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் ஆகும். மேலும், சோணாடு, வேணாடு எனத் திரிந்தும் வரும். மாங்காடு, ஆர்க்காடு பழவேற்காடு என்பன காடு என்ற பொருள் மாறித் தற்போது ஊர்ப்பெயரைக் குறிக்கும். வெள்ளாடு என்பது ஓர் இனத்தின் பெயராகும் (வெள்ளாடு என்பதில் வெள்ளைஆடு மட்டுமன்றிக் கறுப்பு ஆடும் அடங்கும்). எனவே அடைமொழியால் பொருள் வேறுபாடு ஏற்பட்டு வேறு சொல்லாகிறது. நெடிற்றொடர்க் குற்றியலுகரத்திலிருந்து வேறுபடுகிறது. உயிர்த் தொடர்க் குற்றியலுகரம் ஆகிறது. அவ்விலக்கணத்துக்குப் பொருந்துகிறது.

அல்வழியில் இரட்டிக்காது. பாலாறு- பாலாறே!, நாடு-நாடா.

# முல்லைப்பாட்டில் தலைவியின் பிரிவாற்றாமை

**சீ. கீர்த்திகா**
*முதுகலைத் தமிழிலக்கியம் இரண்டாமாண்டு,*
*விவேகானந்தா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி*
*வீராச்சிபாளையம், சங்ககிரி.*

***முன்னுரை :***

*ஒழுக்கத்தை உயிரினும் மேலாக மதித்துப் போற்றியவர்கள் நம் தமிழர்கள். நல்லொழுக்கமுடையோர் அறவழி நடப்பது இயல்பு. அவ்வகையில் பண்டைய தமிழர்களது வாழ்வே அறத்தை மையமாகக் கொண்டது எனலாம். அதனால் தான் காதலிலும் வீரத்திலும் கூட அறத்தை வலியுறுத்தினர். இல் வாழ்வையும் இல்லறம் என்றே குறித்தனர். இல்லறமும் அக்காலத்தில் நல்லறமாக விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் காட்சிப் படுத்துகின்றன. இல்லற வாழ்வில் இன்பமும் துன்பமும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போல் ஆகும். தலைவன் தலைவி கூடி இருக்குங்கால் இன்பமும், பிரிவின்போது துன்பமும் உண்டாகும். அந்த வகையில் சங்க இலக்கியத்துள் பத்துப்பாட்டில் தலைவன் தலைவியின் பிரிவைத் தெற்றென இயம்பிடும் முல்லைப்பாட்டில் தலைவியின் ஆற்றாமையை எடுத்துரைக்கும் முகமாக இவ்வாய்வு அமைகிறது.*

***முல்லைப்பாட்டு:***

*சங்க இலக்கியமான பத்துப்பாட்டில் நான்கு ஆற்றுப்படைகளுக்குப் பின்வரும் முல்லைப்பாட்டு அகம் சார்ந்த நூலாகும். 103 அடிகளால் ஆன இப்பாட்டு பத்துப்பாட்டுகளிலேயே அளவால் மிகச் சிறியது. இதனைப் பாடியவர் காவிரிப்பூம்பட்டினத்து பொன் வணிகனார் மகனார் நப்பூதனார் ஆவார்.*

*முல்லைப்பாட்டில் நப்பூதனார் முல்லைத் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள் ஆகிய மூன்றையும் செம்மையாகக் கையாண்டு உள்ளார். முல்லைத் திணையின் இயல்புகளை மட்டுமல்லாமல்,*

> *"வஞ்சி தானே முல்லையது புறனே" ( தொல் : புறத் : நூ – 64)(1)*

*எனத் தொல்காப்பியம் கூறுவதற்கேற்ப, அதற்குப் புறனாய வஞ்சித் திணை இயல்புகளையும் இயைத்துப் பாடுகின்றது. மேலும்,*

> *"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்*
>
> *சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்" (தொல் : அகத் : நூ – 57)(2)*

என்னும் அகநூல் மரபைப் பின்பற்றி, பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரைச் சுட்டிக் கூறாத அகப்பொருள் சார்ந்த இலக்கியமாகவே இந்நூல் விளங்குகிறது.

**தலைவனின் பிரிவு :**

முல்லைப்பாட்டில் தலைவன் போரின் காரணமாக தலைவியைப் பிரிந்து செல்கிறான். அவ்வாறு செல்லும் போது கார்காலம் தொடங்கும் முன் வந்து விடுவேன் எனவும் 'நான் வரும் வரையிலும் ஆற்றியிரு' எனவும் வற்புறுத்திக் கூறி தலைவியை ஆற்றுவித்த பின்னரே தலைவன் பிரிந்து செல்வது மரபாகும். இதனைத் தொல்காப்பியர்,

> "துன்புறு பொழுதினும் எல்லாம் கிழவன்
>
> வற்புறுத்து அல்லது சேறல் இல்லை" ( தொல் : கற் : நூ – 182)(3)

என்றும், நன்னூலார்,

> "பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை" ( ந.அ : கற்: நூ – 209)(4)

என்றும் எடுத்தியம்புகிறார். போரின் காரணமாகப் பிரிந்த தலைவன் பாசறையில் கண் துஞ்சாது படும் துயரத்தையும், தலைவியின் வருத்த மிகுதியையும் நப்பூதனார் ஒன்றன்பின் ஒன்றாக வரித்துக் காட்டுகிறார்.




**தலைவியின் துயரம்:**

தலைவன் தான் மீண்டு வருவதாகக் கூறிய கார்காலம் தொடங்கியது. அவன் சொன்ன பருவம் தலைப்பட்டும் தலைவன் வராமையால் தலைவி மிகுந்த துயரோடு இருக்கிறாள். அவளது வருத்தத்தைக் கண்ணுற்ற முதுபெண்டீர்

*நற்சொல் பெற மாலையில் ஊரின் புறத்தே படியில் நெல்லும் மலரும் கொண்டு சென்று தெய்வத்தை வழிபட்டு நிற்கின்றனர். அப்போது இடையர் பெண் ஒருத்தி பசியால் வாடிய கன்றுகளை நோக்கி,*

*“……………. ……………. …………….. கைய*

*கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர*

*இன்னே வருகுவர் தாயர்” (முல்லைப்பாட்டு: பா.வ :14-16)(5)*

*எனக் கூறக்கேட்டோர், அதனை நற்சொல்லாகக் கொண்டு தலைவியிடம் சென்று, “தலைவன் விரைவில் மீள்வான்; நீ உனது வருத்தம் களைவாயாக!” என்று கூறி அவளைத் தேற்றினர். நெடுநல்வாடையிலும் இவ்வாறு தலைவியை ஆற்றுவிப்பதை,*

*“இன்னே வருகுவர் இன்துணை யோரென*

*முகத்தவை மொழியவும் ஒல்லாள் மிகக்கலுழ்ந்து” (நெடுநல்:பா.வ :155-156)(6)*

*எனும் பாடல் வரிகளால் அறியலாம். பலர் தேறுதல் மொழிகளைக் கூறினாலும் தலைவி பிரிவுத் துயரைத் தாங்காது கண்ணீர் வடிக்கிறாள். கார்காலமும் மாலைப்பொழுதும் தலைவனின் நினைவை மிகுதிப்படுத்தி தலைவிக்குப் பசலை நோயை ஏற்படுத்துவதை,*

*“காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி*
*மாலை மலருமிந் நோய்” (குறள் – 1227)(7)*

*என்ற குறட்பா விவரிக்கிறது. கார்காலம் தலைவியின் பசலை நோய்க்குக் காரணமாக அமைந்ததை,*

*“கார்நாள் உருவமொடு கையறம் பிரிந்தென*

*நோய் நன்கு செய்தன எமக்கே” (ஐங் : மு : பா – 441)(8)*

*என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் சான்று பகர்கிறது.*

***தலைவனின் வரவை நோக்கி ஆற்றியிருத்தல்:***

*போரின் வெற்றியால் இனிது துயிலும் தலைவனைக் காணாத தலைவி, பாவை விளக்கின் ஒளி சூழ ஏழு அடுக்கு மாளிகையில் தனிமையில் வருந்துகிறாள். தலைவன் “ஆற்றியிரு” எனக் கூறிய ஒற்றைச் சொல்லை மனதிற்கொண்டு கைகளிலிருந்து நழுவும் வளையல்களைத் திருத்தி தன்னைத்தானே தேற்றிக் கொள்கிறாள்.இதனை,*

*"நெஞ்சு ஆற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு*

*நீடுநினைந்து , தேற்றியும், ஓடுவளை திருத்தியும்"*

*(முல்லைப்பாட்டு : பா.வ: 81-82)(9)*

*என்னும் பாடல் பாடல் வரிகள் உரைக்கின்றன. இடைவிடாது தலைவனை எண்ணி வருந்துவதால் தலைவியின் மேனியழகு பொலிவிழந்து மெலிவதை,*

*"கார் நயந்து எய்தும் முல்லை ; அவர்*

*தேர் நயந்து உறையும், என்*

*மாமைக் கவினே"      (ஐங் : மு : பா – 454)(10)*

*என்றுவரும் இப்பாடல் தெற்றென விளக்குகிறது. முல்லைக்குரிய கற்பு நெறியோடு தலைவி தலைவனின் வரவை நோக்கிக் காத்திருப்பதை,*

*"முல்லை சான்ற கற்பின்*

*மெல் இயற் குறுமகள் "      (நற்றிணை பா – 142)(11)*

*என்ற நற்றிணைப் பாடல் பகர்கின்றது. நெடுநல்வாடையில் இடம் பெற்ற,*

*"உரோகிணி நினைவனள் நோக்கி, நெடித்து உயிரா"*

*(நெடுநல் :பா.வ -163)(12)*

*என்னும் பாடல் அடி தலைவியின் பிரிவாற்றாமையை இயம்புகிறது.*

***தலைவன் வருகை – தலைவியின் உவகை :***

*முல்லைத் தலைவி மனம் தேற்றி ஆற்றியிருக்க முயலும் வேளையில் கார்ப்பருவ மழையானது உள் முற்றத்தே அருவி போல விழுகிறது. மழையின் ஓசையைக் கேட்டவாறு தலைவி மயங்கி நிற்கிறாள். அவ்வேளையில் போரில் வெற்றி பெற்ற தலைவன் தலைவியைக் காணும் ஆர்வ நெஞ்சமோடு பல வகை இசைக் கருவிகள் ஒலிப்பத் தேரில் வரும் ஓசை தலைவியின் செவிகள் குளிரும்படி ஒலித்தது. இச்செய்தியை ,*

*"இன்பல் இமிழ்இசை ஓர்ப்பனள் கிடந்தோள்*

*அஞ்செவி நிறைய ஆலின"      (முல்லைப்பாட்டு : பா.வ :87-88)(13)*

*என்ற வரிகள் மெய்ப்பிக்கிறது.*

**முடிவுரை:**

சங்கக் கால மக்கள் கற்பு நெறியை உயிராக மதித்தனர். முல்லைப்பாட்டு என்ற இவ்விலக்கியம் அந்நெறியை உயர்த்திக் காட்டும் வகையிலும் தலைவன் தலைவியின் தூய்மையான காதலையும் இருவருக்குமான புரிதலையும் எடுத்துக்காட்டும் வகையிலும் அமைந்துள்ளது. வினையை மேற்கொள்ளப் பிரியும் தலைவனுக்குப் பிரிவுத்துயர் இருக்கும். எனினும், வினையில் ஈடுபடும் வேளையில் அத்துயரை மறக்க நேரிடும். ஆனால் தலைவியின் நிலையோ எதிர்மறையானது. இல்லத்தில் உள்ள பொருட்களும் இடங்களும் பொழுதுகளும் நித்தம் தலைவனை நினைவூட்டுவதால், தலைவி எதிர்கொள்ளும் துயரம் சொல்ல உண்ணாதது தலைவன் வருவதாகக் குறித்த பருவமும் எதிர்ப்படத் தலைவியின் ஆற்றாமை ஓங்குகிறது. இருப்பினும் கற்பு நெறியை ஓம்பும் பொருட்டு தலைவி அனைத்தையும் பொறுத்துக் கொள்கிறாள். இத்தகு உயர் பண்பாடுகளை உரைப்பதனாலேயே உலகோர் போற்றும் சமூகமாகத் தமிழ்ச் சமூகம் விளங்குகிறது. இத்தகைய பண்பாட்டுத் தரவுகளை உள்ளடக்கி உள்ளதால் தான் சங்க இலக்கியங்கள் தமிழ் இலக்கியங்களுள் தலைமை பெற்று விளங்குகின்றன.



**மேற்கோள்கள்:**

*1. உ. ஆ முனைவர் ச.திருஞானசம்பந்தம், தொல்காப்பியம் பொருளதிகாரம் (மூலமும் உரையும்), கதிர் பதிப்பகம், திருவையாறு, முதற்பதிப்பு – மார்ச் – 2020, பக்கம் – 55.*

*2. உ. ஆ முனைவர் ச.திருஞானசம்பந்தம், தொல்காப்பியம் பொருளதிகாரம் (மூலமும் உரையும்), கதிர் பதிப்பகம், திருவையாறு, முதற்பதிப்பு – மார்ச் – 2020, பக்கம் – 44.*

*3. உ.ஆ முனைவர் ச.திருஞானசம்பந்தம், தொல்காப்பியம் பொருளதிகாரம் (மூலமும் உரையும்), கதிர் பதிப்பகம், திருவையாறு, முதற்பதிப்பு – மார்ச் – 2020, பக்கம் – 187.*

*4. உ.ஆ வ.த.இராமசுப்பிரமணியம், நம்பியகப்பொருள் விளக்கம், முல்லைநிலையம், சென்னை, முதற்பதிப்பு – 2000, பக்கம் – 361.*

*5. உ.ஆ முனைவர் இரா.மோகன், பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) பகுதி – 1, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, முதற்பதிப்பு – ஏப்ரல் 2004, பக்கம் – 326.*

*6. உ.ஆ முனைவர் வி.நாகராசன் , பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) பகுதி – 2,பாவை பிரிண்டர்ஸ்(பி)லிட், சென்னை, முதற்பதிப்பு – ஏப்ரல் 2004, பக்கம் – 183.*

*7. திருக்குறள், பரிமேலழகர் உரை, சாரதா பதிப்பகம், சென்னை,ப.ஆ - எஸ்.கௌமாரீஸ்வரி, முதற்பதிப்பு – 2002, பக்கம் – 373.*

*8. உ.ஆ அறிஞர் ச.வே.சுப்பிரமணியன், எட்டுத்தொகை (மூலமும் உரையும்) தொகுதி – 1 , மாணிக்கவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு – 21 சூன் 2010, பக்கம் – 831.*

*9. உ.ஆ முனைவர் இரா.மோகன்,பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) பகுதி – 1,நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, முதற்பதிப்பு – ஏப்ரல் 2004, பக்கம் – 329.*

*10. உ.ஆ அறிஞர் ச.வே.சுப்பிரமணியன், எட்டுத்தொகை (மூலமும் உரையும்) தொகுதி – 1 , மாணிக்கவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு – 21 சூன் 2010, பக்கம் – 837.*

*11. உ.ஆ அறிஞர் ச.வே.சுப்பிரமணியன், எட்டுத்தொகை (மூலமும் உரையும்) தொகுதி – 1 , மாணிக்கவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு – 21 சூன் 2010, பக்கம் – 149.*

*12. உ.ஆ முனைவர் வி.நாகராசன், பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) பகுதி – 2,பாவை பிரிண்டர்ஸ்(பி)லிட், சென்னை, முதற்பதிப்பு – ஏப்ரல் 2004, பக்கம் – 183.*

*13. உ.ஆ முனைவர் இரா.மோகன்,பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) பகுதி – 1,நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, முதற்பதிப்பு – ஏப்ரல் 2004, பக்கம் – 329.*

# பழந்தமிழர் வணிகம்

***ஆறகளூர் பொன்.வெங்கடேசன் M.A., Mphil., D.pharm***
*தலைவர், சேலம் வரலாற்று ஆய்வு மையம்*



*மனிதன் காடுகளில் வாழ்ந்தபோது வேட்டையாடித் தன் உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டான். விவசாயம் செய்யும் முறையை அறிந்து கொண்ட பின் ஆற்றங்கரை ஓரங்களில் நிலையாகத் தங்கி விவசாயம் செய்யத் துவங்கினான். விவசாயத்தின் மூலம் கிடைத்த உணவுப் பொருட்களைத் தன் கூட்டத்தினருக்குப் பகிர்ந்து அளித்தான். விவசாயச் சாகுபடி முறைகளில் வளர்ச்சி ஏற்பட்ட போது பயிரிடும் நிலத்தின் அளவும் அதிகரித்தது. இதனால் அதிகமான விளைச்சல் கிடைத்தது. தன் கூட்டத்தினரின் தேவைக்கு மேலும் உணவு கையிருப்பில் இருந்தது.*

*தனக்கு அருகே வசிக்கும் மனித குழுக்களிடம் தன்னிடம் இருந்த உபரியான தானியங்களைக் கொடுத்து விட்டு அதற்குப் பதிலாக அவர்களிடம் உள்ள வேறு வகை தானியங்களையோ அல்லது பொருட்களையோ பெற்றுக்கொண்டான். இவ்வாறு மனிதர்களிடையே பண்டமாற்று முறையில் வணிகம் செய்யும் முறை தோன்றியது. போக்குவரத்து வசதிகள் அதிகரிக்கத் துவங்கிய பின் வெகு தொலைவில் உள்ள இடங்களுக்கும், கடல் கடந்தும் வணிகம் பரவியது.*



***உலகளாவிய வணிகம்:***

*பழந்தமிழ் அரசுகள் உலகளாவிய வணிக மேலாண்மையும் மிகப்பெரிய கடற்படையும் கொண்டிருந்தன. பண்டைய உலகின் ஆடம்பரப் பொருட்களாக இருந்த வாசனைத் திரவியங்கள், வாசனைப் பொருட்கள், முத்துகள், மணிக் கற்கள் போன்றவற்றை வணிகம் செய்வதில் தமிழர்கள் சிறந்து விளங்கினர். சுகாப் என்பவர் எழுதிய எரித்திரியக் கடலின் பெரிப்ளூஸ் (Periplus of the Erythraean Sea) என்கிற ஆங்கில நூல் பண்டைய தமிழக துறைமுகங்கள் நகரங்கள்,வணிகப் பொருட்கள் பற்றி 40 பக்கங்களில் விரிவாகவும் விளக்கமாகவும் சொல்லுகிறது.*

*இந் நூல் பழந்தமிழர் வணிகம் பற்றிச் சொல்லும் சிறந்த ஆவணமாகும்.எகிப்தில் இருந்து தமிழகம் வந்த கப்பல்களை விடத் தமிழகத்தில் இருந்து கிழக்கு நோக்கிச் சென்ற கப்பல்கள் அதிகம் என அந்நூல்*

*குறிப்பிடுகிறது.கி.பி 150ல் எழுதப்பட்ட முசிறி - அலெக்சாண்டிரியா ஒப்பந்தத்தின்படி, ஒருமுறை ரோமுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களின் இன்றைய மதிப்பு ஏறத்தாழ 120 கோடி ரூபாய் ஆகும்.*

***இலக்கியச் சான்றுகள்:***

*பட்டினப்பாலை என்ற நூல் காவேரிப் பூம்பட்டினம் சிறந்த துறைமுகமாகவும் மிகப்பெரிய வணிக நகரமாகவும் விளங்கியதைச் சொல்கிறது. ஏற்றுமதி, இறக்குமதிப் பொருட்களைப் பாதுகாப்பாக வைக்க நல்ல விசாலமான கிடங்குகள் அமைக்கப்பட்டிருந்தன. பொருட்களுக்கான சுங்கத் தீர்வைகள் அங்கேயே வசூலிக்கப்பட்டு புலிச்சின்னம் பொறிக்கப்பட்டு வெளியே அனுப்பப்பட்டன எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.*

***தொல்லியல் சான்றுகள்:***

*சங்கக் காலத்தில் இரும்பு, வார்ப்பு இரும்பு ஆகியவற்றைத் தயாரிக்கும் இரும்புத் தொழில் நுட்பத் திறமை உடையவர்களாகத் தமிழர்கள் இருந்துள்ளனர். ஆடை நெய்தல், சங்கு அறுத்தல், நீர்ப்பாசனத்தில் தொழில்நுட்பத் திறமை கொண்டிருந்தமைக்கு ஏராளமான தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன.*



*கொடுமணல் பகுதியில் நடந்த அகழ்வாய்வில் பச்சைக்கல், நீலக்கல், பளிங்கு, சூது பவளம், சேசுபரகேட், குருந்தம், வைடூரியம், மாவுக்கல் முதலிய அரிய கற்களைக் கொண்டு மயிரிழை அளவு துளை கொண்ட மணிகள் தயாரிப்பதிலும் தமிழர்கள் சிறந்து விளங்கியதை அங்கு நடந்த அகழ்வாய்வுகள் நிரூபிக்கின்றன. மேலும் அகழ்வாய்வில் பொன் நெற்றிப்பட்டங்கள், வெங்கலக் கிண்ணங்கள், வெங்கல ஏனங்கள், மூடிகள், குடுவைகள், பூச் சாடிகள், வெண்கலச் சல்லடைகள், வெண்கலச் சட்டிகள், வெண்கல அணிமணிகள், இரும்பு வாள்கள், குத்துவாள், இரும்பு ஈட்டி, அம்புகள், இரும்புக் கோடாரிகள், பல்வேறு வகையான மண்பாண்டங்கள் கிடைத்துள்ளன. இதன் மூலம் பழந்தமிழர் வணிகம்,தொழில் நுட்பம் போன்றவற்றில் சிறந்து விளங்கியதை அறிந்து கொள்ள முடிகிறது.*

*முசிறி அகழ்வாய்வுக் குறித்து அதன் இயக்குநர் செரியல் கூறும்போது தென் சீனத்திலிருந்து ஐரோப்பாவின் ஜிப்ரால்டர் ஜலசந்தி வரை, மத்திய தரைக்கடல், செங்கடல், இந்தியப் பெருங்கடல் ஆகியவற்றில் உள்ள 40 துறைமுக நகரங்களோடு தமிழகம் தொடர்பில் இருந்தமைக்கு உறுதியான சான்றுகள் கிடைத்துள்ளதாகக் குறிப்பிடுகிறார்.*

***கீழடி:***

*சிவகங்கை மாவட்டம் கீழடி பள்ளிச் சந்தை புதூரில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சங்கக் காலத் தமிழர்கள் அப்போதிலிருந்தே வெளிநாடுகளுடன் வணிகத் தொடர்புகள் வைத்திருந்தமைக்கான சான்றுகள் அகழ்வாய்வில் கிடைத்துள்ளன. ராமேஸ்வரம், அழகன் குளம் துறைமுகப்பட்டினத்துக்குச் செல்லும் வணிகவழிப் பெருவழியில் மதுரைக்கு அருகே அமைந்திருந்த வணிக நகரமாக கீழடி இருந்துள்ளது. இங்கு நடந்த அகழ்வாய்வில் சூது பவளம், பளிங்கு, அகேட் மணிகள், பச்சை, மஞ்சள், நீல நிறக் கண்ணாடி மணிகள், ஆகியனவும் தமிழி எழுத்தில் பானை ஓடுகளும் கிடைத்துள்ளன. இங்கு வாழ்ந்த மக்கள் உள்நாட்டில் பிற பகுதிகளில் வாழ்ந்திருந்த மக்களோடும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். வைகை நதியின் வலது கரையில் பண்டைய வணிக வழிப்பாதை இருந்துள்ளது.*






***வணிகக் குழுக்கள்:***

*சங்கக் காலம் முதல் தமிழர் சமுதாயத்தில் வணிகம் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. வட்டார வணிகக் குழுக்களும் ஆங்காங்கே இருந்து வந்துள்ளன. தமிழி கல்வெட்டுகளில் வெள்ளறை நிகமத்தோர் என்ற வணிகக் குழு குறிப்பிடப்பட்டுள்ளனர். கி.பி 9 ஆம் நூற்றாண்டு முதல் பரவலாக வணிகக் குழுக்கள் இருந்ததைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது. அக்குழுக்கள் தங்களுக்குள் கூடி தீர்மானங்களை நிறைவேற்றி அவற்றைக் கல்வெட்டுகளாகப் பொது இடங்களில் பொறித்து வைத்துள்ளனர்.*

*ஐயப்பொழில் ஐநூற்றுவர், திசை ஆயிரத்து ஐநூற்றுவர், நாநாதேசிகள், வளஞ்சியர், பதிணென் விசயத்தார், மணி கிராமத்தார் ஆகிய வணிகக் குழுக்களின் கல்வெட்டுகள் பரவலாகக் கிடைக்கின்றன. சித்திரமேழி பெரிய நாட்டார் என்ற சபை 11ஆம் நூற்றாண்டு முதல் அறியப்படுகிறது. இது விவசாயம்*



சார்ந்த வணிகக் குழுவாகவும் செயல்பட்டது. விவசாய விளை பொருட்களை உற்பத்தி செய்து வணிகம் செய்யும் பணியிலும் ஈடுபட்டனர். இவ்வணிகக் குழுக்கள் தங்களுக்கென தனித்தனி நியதிகளையும் கூட்டமைப்புகளையும் கொண்டிருந்தன. தங்களுக்கென தனித்தனி மெய்க்கீர்த்திகளையும் கல்வெட்டில் பொறித்துக்கொண்டனர். இவ்வணிகக் குழுக்களுக்கு என தனித்தனி படைப் பிரிவுகளும் பாதுகாப்புக்கு இருந்தது. இவர்கள் கல்வெட்டுகளில் சூலம், பசும்பை, சங்கு, கலப்பைக்கெழு, சம்மட்டி, வாள், யானை, குதிரை, அன்னம், பத்திரகாளி, ஐயப்பொழில் பரமேசுவரி, விளக்கு போன்ற உருவங்களை புடைப்புச்சிற்பங்களாக அமைத்து அதன் கீழ் கல்வெட்டு வாசகங்களைப் பொறிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.



**வணிகக் குழுக்களின் வகைகள்:**

தமிழகத்தில் செயல்பட்ட முக்கியமான வணிக குழுக்கள் மணிக் கிராமத்தார், ஐயப்பொழில், வளஞ்சியர், அஞ்சுவண்ணத்தார், நானா தேசத்து திசையாயிரத்து ஐநூற்றுவர், பதிணென் விஷயத்தார், நகரத்தார் போன்ற குழுக்கள் முக்கியமானவை. இவ்வணிகக் குழுக்கள் தங்களுக்குள் இணைந்து செயல்பட்டன. இந்த பலதரப்பட்ட வணிகக் குழுக்களில் பல இனத்தவரும், பல சமயத்தவரும் இடம் பெற்றனர். இவர்கள் நில வழியாகவும், நீர் வழியாகவும் பல இடங்களுக்குச் சென்று வணிகம் செய்தனர். இந்தியா முழுக்க இவர்கள் வணிகம் பரவியிருந்தது. இவர்கள் 18 விஷயங்களுடன் (மாவட்டங்கள்), 32 வேளார்புரங்களுடனும், 64 கடிகை தாவளங்களுடனும் (வணிகர் சபை) வணிகம் செய்தனர். இந்த வணிகக் குழுக்கள் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு, மலையாளநாடு, மகதைநாடு, சௌராஷ்டிரம், காம்போஜகம் போன்ற பகுதிகளுடன் வணிகம் மேற்கொண்டனர். மேலும் இலங்கை, இந்தோனேசியா, பர்மா, அரேபியா போன்ற அயல்நாடுகளுடனும் வணிகம் செய்தனர். தாங்கள் ஈட்டிய செல்வத்தின் ஒரு பகுதியைக் கோயில்களுக்குத் தானமாக அளித்தனர். 15 ஆம் நூற்றாண்டு வரை இவ்வணிகக் குழுக்கள் சிறப்புற்று விளங்கின.

# பாண்டியர்கள் - இஸ்லாமியர்கள் தொடர்பு

**முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,**
*கோயில் கட்டிடக்கலை மற்றும் சிற்பத்துறை கள ஆய்வாளர்*



*பாண்டியர்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் இடையேயான தொடர்புகளைக் கீழ்க்காணும் வரலாற்றுத் தடயங்கள் மூலம் அறிய முடிகிறது:*

*அரபு வணிகர்கள் மூலமாக இசுலாம் பாண்டிய நாட்டில் பரவியது. முற்கால பாண்டியர் காலத்தில் திருப்பத்தூரில் 9 ம் நூற்றாண்டுக் கல்வெட்டில் தினார் என்ற காசு பெயர் வருகிறது. தினார் என்பது அரபு நாட்டுத் தங்கக் காசு. (A.Abdul Majeed Fresh Light on Arab trade with South India,Damilika Vol II part III 1974, pp 69 -72 )*

*மார்க்கோபோலோ தன் பயணக்குறிப்பில் பாண்டியர்கள் அரபு வணிகர்களோடு குதிரை வணிகத்தில் ஈடுபட்டிருந்துள்ளனர் என்று குறிப்பிடுகிறார்.*

*(கே.ஏ நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்தியாவைப் பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள் (மொழி பெயர்ப்பு) ப:271-274 ).*

*பிற்காலப் பாண்டியப் பேரரசில் ராகுத்தர் (இசுலாம்) குதிரைப்படை வீரர்களாகப் பணிபுரிந்துள்ளனர். கி.பி.1297 ல் இறைகண்டன் ராகுத்தன் என்ற இஸ்லாமியர் திருவாதவூர் சிவன் கோயிலுக்கு விளக்கு எரிக்க தானம் கொடுத்த செய்தி உள்ளது (ARE:472 -/62-63). அதே காலகட்டத்தில் கரிசூழ்ந்த மங்கலம் பெருமாள் கோயில் விமானம் திருப்பணியை பித்துசி ராகுத்தர் மகன் கலிசாராகுத்தர் என்ற இஸ்லாமியரும் செய்துள்ளார் (ARE -568/16-17). மேலும், அழகர்கோவிலுக்கு மகாபிரதானியாக விளங்கிய ராகுத்தராயன் மச்சப்பதண்ட நாயகன் வைணவப் பற்றால் தன் பெயரை பின் சென்ற வில்லிதாசன் என மாற்றிக் கொண்டார் (ARE: 324,29/30).*

**த. நா. அ. தொல்லியல் துறை** — **தொடர் எண் : 14/ 2003**

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | மதுரை | ஆட்சி ஆண்டு : | 30 |
| வட்டம் : | மேலூர் | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1298 |
| ஊர் : | திருவாதவூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 472/1962-63 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | பிற்காலப் பாண்டியர் | | |
| மன்னன் | முதலாம் மாறவர்மன் குலசேகரன் | ஊர்க் கல்வெட்டு எண் | 14 |

இடம் : திருமறைநாதசுவாமி கோயில் திருச்சுற்று மாளிகை, தெற்குச்சுவர் உட்புறம்.

குறிப்புரை : திருமறைநாத சுவாமிக்குத் திருநந்தாவிளக்குகள் இரண்டு எரிப்பதற்காகத் திருவாதவூர் கைக்கோளன், முதலி ஆட்கொண்டான், ராகுத்தன் ஆகியோர் 132 ஆடுகள் அளித்ததை இக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது. இராகுத்தன் என்பதைக் குதிரை வீரன் எனக் கொள்ளலாம்.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவனச்சக்கரவத்திகள் எம் [மண்டல முங் கொண்டருளிய] ஸ்ரீகுலசேகர தேவற்கு யாண்டு
2. ௩௰வது ஸிம்ஹநாயற்று உ௰தியதி வ௵ஷபக்ஷத்து ஸப்தமியும் [சனிக் கிழமை] பெற்ற மூலத்தில் நாள் தென்பறப்பு நாட்டுத் திருவாதவூர்க் கைக்கோ
3. ளரில் முதலி ஆட்கொண்டானேன் உடையார் திருமறைநாயனார்க்கு [சந்திராதித்தவற்] செல்லக் கடவதாக வைத்த திருநந்தாவிளக்கு ஒன்றும் ம
4. . . ரைத்தான் இராகுத்தர் வைத்த திருநந்தாவிளக்கு ஒன்றும் ஆக விளக்கு இரண்டுக்கும் இந்நாயனார் . . . இடையரில் சிங்கன் கொற்றியான . . .

27

*தரவு: பாண்டிய நாட்டுச் சமுதாயமும் பண்பாடும் வெ. வேதாசலம்*

# இந்தியப் பேனாநண்பர் பேரவை - வரலாறும் வழிமுறையும்



**டாக்டர் புதேரி தானப்பன்**
*தலைவர், திருக்குறள் பாராயணம், புது தில்லி.*
*தலைவர், தில்லித் தமிழ் வளர்ச்சிக் கழகம், புது தில்லி*
*பேசி: 93 13 03 03 33*

*"இந்தியப் பேனாநண்பர் பேரவை" என்னும் அமைப்பின் பெயரைக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இந்த அமைப்பு மும்பையில் 1995ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 12 ஆம் தேதி தொடங்கப்பட்டு, மும்பையைத் தலைமை இடமாகக் கொண்டு செயல்படுகிறது.*

*இப்போது இந்த அமைப்பு, தமிழகத்தின் அனைத்து மாவட்டங்களிலும் செயல்படுகிறது. இந்தியாவில் தமிழர்கள் வாழ்கின்ற பல மாநிலங்களிலும் அயல் நாடுகளில் ஜெர்மனி, பிரான்ஸ், ஆஸ்திரேலியா, யூ. ஏ. இ., ரஷ்யா, இங்கிலாந்து, குவைத், மியான்மார், இலங்கை, பஹ்ரைன் போன்ற பத்துக்கு மேற்பட்ட நாடுகளிலும் இப் பேரவை பரந்து விரிந்து செயல்படுகிறது.*

*இது ஒரு மனிதநேயப் பேரியக்கம் ஆகும். அன்பு வளர்ப்பதும் நட்புப் பேணுவதும் மனிதநேயச் செயல்பாடுகளும் இப் பேரவையின் அடிப்படைக் கருப் பொருள்களாகும்.*

*இந்த அமைப்பு, அனைவரின் உள்ளங்களிலும் நட்பினை வளர்க்கும் அமைப்பாகவும் தொண்டு நிறுவனமாகவும் சிறப்பாகச் செயல்பட்டு வருகிறது.*

*தனி ஒரு மனிதராக இருந்து நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் தொண்டு செய்வது என்பது மிகவும் அரிதாகும். அப்படியே செய்ய முனைந்தாலும் ஏதேனும் ஒரு செயலை இயன்றவரை செய்யலாம். ஆனால் அந்தத் தனி மனிதர் ஓர் அமைப்பை ஏற்படுத்தி அந்த அமைப்பின் மூலம் செய்ய முனைந்தால் எவ்வளவு வேண்டுமானாலும் செய்யலாம். அதைத்தான் மும்பையில் வசிக்கும் 12 இலட்சம் தமிழர்களில் ஒருவராக விளங்கும் திருமிகு மா. கருண் அவர்கள் செய்து வருகிறார்.*

*அமைதிப் பேரணிகள் நடத்துதல்,*

*கலை, இலக்கியக் கருத்துரையாடல்கள் நடத்துதல்,*

*10ஆம் வகுப்பு, 12ஆம் வகுப்புத் தேர்வுகளில் அதிக மதிப்பெண்கள் பெறும் மாணவச் செல்வங்களுக்குக் கல்வி ஊக்கத்தொகை தருதல்,*

*நன்றாகப் படிக்கும் திறன் இருந்தும் ஏழ்மை காரணமாகக் கல்வியைத் தொடர முடியாத மாணவ, மாணவிகளுக்குக் கல்வி உதவித் தொகை வழங்குதல்,*

ஆதரவற்றோர் இல்லம், மனநலம் குன்றியோர் இல்லம், முதியோர் இல்லம், தொழு நோயாளிகள் இல்லம் போன்ற இடங்களுக்குச் சென்று நல உதவிகள் வழங்குதல் போன்ற நல்ல நல்ல தொண்டுகளைத் தனி ஒருவரால் செய்வதென்பது இயலாது. ஆனால் இந்த அமைப்பின் மூலம் திருமிகு மா. கருண் அவர்கள் செய்து வருகிறார்.

இந்த அமைப்பைப் பற்றிச் சொல்லும்போது, " எங்கள் உலகம் அன்பு, நட்பு, மனிதநேயச் சிந்தனைகளைக் கருவாகக் கொண்டு சாதி, சமய, அரசியல் பேதங்களை அகற்றி மனித இதயங்களை வளப்படுத்தும் இனியதோர் நட்புலகம்" ஆகும் என்று சொல்லி திரு கருண் அவர்கள் பெருமைப்படுகிறார். இந்தப் பேரவையின் அடிநாதமாக நட்பு என்னும் பண்பாட்டுக் குரல் ஓங்கி ஒலிக்கிறது என்பதை உறுப்பினர்களுக்கான கடிதம் வெளிப்படுத்துகிறது. இது மனிதநேயத்தின் உச்சத்தைத் தொட்டு நிற்பதாக நான் கருதுகிறேன். திருவள்ளுவர் நட்புக்கு ஓர் அதிகாரமே எழுதியிருக்கிறார். அந்த அதிகாரத்தை இந்த அமைப்பு, தனது நோக்கமாகக் கொண்டிருப்பதை நாம் பாராட்டியே ஆகவேண்டும்.



இப் பேரவை ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு நகரத்தில், "நட்புச் சங்கம விழா"வைக் கொண்டாடி வருகிறது. 1995ஆம் ஆண்டு இப் பேரவை தொடங்கப்பட்ட பின்பு,

1996 ஆம் ஆண்டு தஞ்சை

1997 ஆம் ஆண்டு கோலார் தங்க வயல்

1998 ஆம் ஆண்டு சென்னை

1999 ஆம் ஆண்டு கரூர்

2000 ஆம் ஆண்டு செங்கம்

2001 ஆம் ஆண்டு புதுக்கோட்டை

2002 ஆம் ஆண்டு தேனி

2003 ஆம் ஆண்டு திருச்சி

*2004 ஆம் ஆண்டு நாகர்கோவில்*

*2005 ஆம் ஆண்டு கோபிச்செட்டிப்பாளையம்*

*2006 ஆம் ஆண்டு மைசூர்*

*2007 ஆம் ஆண்டு காஞ்சிபுரம்*

*2008 ஆம் ஆண்டு திருநெல்வேலி*

*2009 ஆம் ஆண்டு செயம்கொண்டம்*

*2010 ஆம் ஆண்டு சென்னை*

*2011 ஆம் ஆண்டு விருதுநகர்*

*2012 ஆம் ஆண்டு நாகர்கோவில்*

*2013 ஆம் ஆண்டு மும்பை*

*2014 ஆம் ஆண்டு சிவகங்கை*

*2015 ஆம் ஆண்டு கோவை*

*2016 ஆம் ஆண்டு ஓசூர்*

*2017 ஆம் ஆண்டு நாமக்கல்*

*2018 ஆம் ஆண்டு கோவா*

*2019 ஆம் ஆண்டு திருச்சி*

*2022 ஆம் ஆண்டு மகாபலிபுரம்*

*என்று ஒவ்வொரு ஆண்டும் தனது நட்புச் சங்கமத்தைத் தொடர்கிறது. கொரோனா என்னும் தீ நுண்மி காரணமாக 2020 மற்றும் 2021 ஆகிய ஆண்டுகளில் நட்புச் சங்கம விழா நடத்தப்பட வில்லை.*

*இந்த நட்புக்குக் கை கொடுத்து, மலர்களை வெளியிட்டு, அன்புள்ளம் கொண்ட, "இதழியல் போராளி" நக்கீரன் கோபால், செவாலியர் வி. ஜி. சந்தோசம், திலகவதி ஐ. ப்பி. எஸ்., தமிழ்த் தொண்டர் முத்துக்குமாரசாமி தம்பிரான் சுவாமிகள், கவிஞர் முனைவர் தமிழச்சி தங்கபாண்டியன், எழுத்துச் செல்வர் முனைவர் லேனா தமிழ்வாணன் போன்ற முப்பதுக்கும் மேற்பட்ட பிரபலங்கள் தங்கள் தங்கள் வாழ்த்துகளை அள்ளித் தெளித்துள்ளார்கள். தில்லித் தமிழ்ச் சங்கத்தின் பொதுச் செயலாளர் டாக்டர் முகுந்தன் அவர்களின் வாழ்த்தும் இதில் அடங்கும்.*

*உங்கள் அமைப்பின் மூலம் அப்படி என்னதான் செய்துவிட்டீர்கள்? என்று கேட்பவர்களுக்கு ஒரு நீண்ட பட்டியலையே தருகிறார், இந்த அறக்கட்டளையின் அறங்காவலராக இருக்கும் "மனிதநேய மாமணி" மா. கருண் அவர்கள்!*

*குஜராத்தில் பூகம்பம் ஏற்பட்டபோது அதற்கு நிதி திரட்டி மும்பை ஆட்சித் தலைவரிடம் வழங்கப்பட்டது.*

*ஆழிப்பேரலை பாதிப்பின்போது மக்களுக்கு உணவுப் பொருட்களும் துணிமணிகளும் நேரடியாக வழங்கப்பட்டன.*

*கவிஞர் வெற்றிவேல், கவிஞர் செந்தூர் நாகராஜன், கவிஞர் இரஜகை நிலவன், கவிஞர் எம். எஸ். இராஜன் மார்ட்டீன், கவிஞர் கருமலைத் தமிழாழன் போன்ற படைப்பாளிகளின் நூல்களுக்கு வெளியீட்டு விழா நடத்தப்பட்டு, படைப்பாளர்கள் ஊக்குவிக்கப் பட்டார்கள்.*



*கேரளாவில் ஏற்பட்ட நிலச் சரிவில் வீடுகளையும் உடைமைகளையும் இழந்தோருக்கு நிவாரணப் பொருட்கள் நேரடியாக வழங்கப்பட்டன.*

*மேற்படிப்பைத் தொடர முடியாத ஏழை மாணவர்களுக்கு ஆண்டுதோறும் 2 . 5 இலட்சம் உரூபாய் கல்வி உதவித் தொகையாகக் கடந்த 23 ஆண்டுகளாக வழங்கப்பட்டு வருகிறது.*

*இப்படி இன்னும் பல வகையிலும் பல இடங்களிலும் பல்வேறு தொண்டுகளை இப் பேரவை செய்து வருகிறது.*

*இப் பேரவையைச் சேர்ந்தோர் சிறப்பு அழைப்பாளர்களாக அழைக்கப்பட்டு, பாரீஸ் மாநகர், இலங்கை போன்ற அயல் நாடுகளுக்குச் சென்று சிறப்பு செய்யப்பட்டார்கள்.*

*திரு மா. கருண், திரு J. ஜான் கென்னடி, திரு. K. செல்லதம்பி, திரு. முத்து செல்வராஜா, திரு. D. தேவதாஸ், திரு. A. பிரம்மநாயகம், திருமதி P. மலர்விழி ஆகியோர் இந்த அமைப்பின் அறங்காவலர்களாக இருந்து பேரவையை வழி நடத்தி வருகின்றனர்.*

"தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை" என்றார் பாவேந்தர் பாரதிதாசன். இக் கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் தமிழ்த் தொண்டு பலவும் செய்துவரும் மா. கருண் அவர்களின் புகழ் என்றென்றும் நிலைத்து நிற்கும்.

ஆண்டு தோறும் இப் பேரவையின் சார்பில் மலர் வெளியிடப்பட்டு வருகிறது. கடந்த மே மாதம் 25 ஆம் ஆண்டு வெள்ளி விழா நட்புச் சங்கமத்தில் சிறப்பு மலர் வெளியிடப்பட்டது. மலரை வி.ஐ டி வேந்தர் கோ. விஸ்வநாதன் அவர்கள் வெளியிட்டு வாழ்த்துரை வழங்கினார். லேனா தமிழ்வாணன் அவர்கள் முதல் மலரைப் பெற்று வாழ்த்துரை வழங்கினார்.

வி ஐ டி வேந்தர் சிறப்பு மலரில் சொல்லியிருப்பது போல, "தமிழ்ச் சொந்தங்களை ஒன்றிணைக்கும் இணைப்புப் பாலமாக" இப் பேரவை மிளிர்கிறது.



உரத்த சிந்தனை திரு ராம் அவர்கள் குறிப்பிடுவது போல, "தமிழ் மொழி வளர்ச்சி, தமிழர்களின் நல்வாழ்வு, கலை, பண்பாடு, கலாசாரத்தை மேம்படுத்துதல், சமூக நற்பணிகள் செய்தல், போன்ற உயரிய நோக்கங்களோடு செயலாற்றி வருவது இப் பேரவையை உயர்ந்த இடத்திற்குக் கொண்டு சென்றுள்ளது."

இப் பேரவையை உருவாக்கி, தொய்வின்றி நடத்திவரும் மா. கருண் அவர்கள் மிகவும் திறமை மிக்கவர் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. அதனால்தான், லேனா தமிழ்வாணன் அவர்கள், "அன்பு, நட்பு, மனிதநேயம் என்ற மானுடத் தேவைகளை முன்னெடுத்து அமைப்பு ரீதியாக உலகெங்கும் நண்பர்களை உருவாக்கி பேரவையை வழி நடத்தும் திறமைக்கு வாழ்த்துகள்" என்று அவரது திறமையைப் பாராட்டி மகிழ்கிறார்.

மும்பை தி.மு.க. இளைஞரணியின் மாநில அமைப்பாளர் திரு ந. வசந்தகுமார் அவர்கள் கூறுவதுபோல, "சந்திப்புகளும் தொடர்புகளும் மட்டுமே நட்பை வலுப்படுத்தும் ஆதாரங்கள் என்ற வலுவான உண்மையை உலகுக்கு உணர்த்தும் வகையில் பேரவை செயல்பட்டுக் கொண்டிருக்கிறது."

தீ நுண்மியினால் நாடு முழுவதும் பொது முடக்கத்துக்கு வந்தபோது இப் பேரவையின் உறுப்பினர்கள் வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடக்காமல், வேலையில்லா திண்டாட்டத்தினாலும் உண்ண உணவின்மையாலும் ஒட்டிய வயிறுடன் பசியாலும் பட்டினியாலும் வாடிக்கிடந்த மக்களைத் தேடித்தேடி

உணவும் அரிசி, பருப்பு, எண்ணெய், சர்க்கரை, தேயிலைத்தூள் போன்ற உணவுப் பொருட்களையும் வழங்கினார்கள்.

கேரளாவில் இடுக்கி மாவட்டத்தில் வாழும் தமிழர்களுக்கும் உதவிக் கரம் நீட்டினார்கள்.

மனநலம் குன்றியோர் காப்பகத்திற்கு சற்றேறக்குறைய ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மருந்துகள் வழங்கியுள்ளார்கள்.

கருமலை (கிருஷ்ணகிரி) மாவட்ட, கிராமப்புற அரசுப் பள்ளி மாணவர்களுக்குக் கல்வித் துணைப் பொருட்கள் வழங்கி யுள்ளார்கள்.

இப்படி இப் பேரவையின் தொண்டு விரிந்து செல்கிறது.



மக்கள் தொடர்பான பிரச்சினைகள் ஏதேனும் உள்ளன என்று கருதினால் அப் பிரச்சினை தொடர்பாக, அரசுத் துறைக்கோ அமைச்சருக்கோ முதல்வருக்கோ தனியாருக்கோ கடிதம் எழுதி அப் பிரச்சினைக்கு வடிகால் தேடவும் முயற்சி செய்யப்படுகிறது என்பது இரட்டிப்பு மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியாகும். பேரவையின் செயற்பாடுகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டு வருவோர் யாரேனும் மறைந்துவிட்டால் அவர்களை நினைவுகூரும் வகையில் சிறப்பு செய்யப்படுகிறது. இது மனிதநேயத்தின் உச்சம் ஆகும் என்று சொல்லலாம்.

நட்பு என்றால் என்ன? என்பது குறித்து பாவலர் கருமலைத்தமிழாழன் அவர்கள் எழுதியுள்ள ஓர் அருமையான கவிதை 2022 ஆம் ஆண்டு சிறப்பு மலரில் வெளிவந்துள்ளது.

"அன்னையின் அன்பிற்கு அடுத்த தாக
அவனிதனில் போற்றிடும்நல் லன்பே நட்பு.
தன்னிடுப்பில் நழுவுகின்ற ஆடை தன்னைத்

தனிச்சையாய்ப் பிடிக்கின்ற கையே நட்பு.
தன்குருதி யைப்பாலாய் ஊட்டி விட்ட
தாயிடத்தும், தன்னையே ஒப்ப டைத்த
தன்மனைவி யிடத்தும்வாய் சொல்ல வொண்ணா
தன்கருத்தைப் பகிர்ந்திடும்நற் றுணையே நட்பு!"

இப்படிப் போகிறது அக் கவிதை. நட்பிற்குக் கலங்கரை விளக்கமாய்த் திகழும் இப் பேரவைக்கு ஏற்றதாக இக் கவிதை விளங்குகிறது.

இப் பேரவையின் செயற்பாட்டுக்காக மும்பையில் ஓர் அலுவலகம் திறக்கப்பட்டுள்ளது எல்லோருக்கும் மன நிறைவைத் தருகிறது.

"ஆண்டுதோறும் நட்புச் சங்கம விழாக்கள் நடத்தி பேரவை நண்பர்களை ஒருமுகமாக எழுச்சியுடன் உற்சாகப்படுத்தும் பேரவையின் முயற்சிகள் வெல்லட்டும் " என மகாராட்டிரச் சட்டமன்ற உறுப்பினர் கேப்டன் இரா. தமிழ்ச்செல்வன் அவர்கள் வாழ்த்துவதை நான் வழிமொழிகிறேன்.




கடந்த 51 ஆண்டுகளாக மும்பையில் 12 இலட்சம் தமிழர்களில் ஒருவராக வாழ்ந்துவரும் மா. கருண் அவர்கள், முத்தமிழும் முத்தமிடும் குமரி மண்ணின் மைந்தன். ஆம். இவர், கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்தவர். 51 ஆண்டுகளுக்கு முன்பு மும்பை வந்து சேர்ந்த இவர், தொடக்கத்தில் இந்தி தெரியாததால் புதிதாகப் பணிக்குச் சேர்ந்த நிறுவனத்தில் பலரது கேலிக்கு உள்ளானார். எனினும் ஆங்கிலம் தெரிந்ததால் ஓரளவுக்கு சமாளிக்க முடிந்தது என்று சொல்லிச் சிரிக்கிறார்.

இவர், 32 ஆண்டுகள் ஏர் இந்தியா நிறுவனத்தில் பணிபுரிந்து மனிதவள மேம்பாட்டுத்துறை அதிகாரியாகப் பணிநிறைவு பெற்றவர்.

பொது வாழ்க்கையில் ஈடுபட்டு மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற உந்துதல் காரணமாக மனிதநேயத்தை மையமாக வைத்து இப்பேரவையைத் துவங்கினார். இவரைப் போலவே இவரது துணைவியாருக்கும் ஆர்வம் இருந்ததால் அவரது ஒத்துழைப்புடன் இப்பேரவையை முன்னெடுத்துச் செல்வது இவருக்கு எளிதாயிற்று. பல நண்பர்களும் இவருக்குத் தோள்கொடுத்ததால் இப் பொதுத் தொண்டில் வெற்றிக்கனி பறிப்பது என்பதும் இயன்றது.



இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரியா, செக் குடியரசு, சிங்கப்பூர், மலேசியா, இந்தோனிஷியா, ஐக்கிய அரபுக் குடியரசு போன்ற உலக நாடுகளை யெல்லாம் சுற்றிவந்து பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு உரையாற்றினாலும் பாரிஸ் நகரில், மகாத்மா காந்தி சிலை திறப்பு விழாவில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு வோரேயால் தமிழ்க் கலாசார மன்றத்தில் உரையாற்றியது தனது வாழ்நாளில் மறக்க முடியாத பெருநிகழ்வாகும் என்று மனம் திறந்து சொல்லுகிறார்..

மகாராஷ்டிரா முதல்வர் மாண்புமிகு தேவேந்திர பட்நவிஸ் அளித்த வாழ்நாள் சாதனையாளர் விருது,

தமிழக அமைச்சர் மாண்புமிகு க. பாண்டியராஜன் அளித்த தமிழ்ப்பணிச் செம்மல் விருது,

தமிழ் வளர்ச்சி துறை இயக்குனர் அளித்த மொழிக் காவலர் விருது,

மற்றும் மனிதநேய மாமணி, நட்பின் இமயம், மனிதநேயச் செம்மல், நட்பின் சிகரம் என பல்வேறு விருதுகள் இவரைத் தேடிவந்து புகழேணி என்னும் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுப் பாடுகின்றன. இவை யாவும் இவரது பொது வாழ்க்கைக்கான அங்கீகாரங்கள் எனில் மிகையாகாது.

நீங்களும் இவர்களோடு நட்பு கொண்டு நட்புக்கு இலக்கணமாகத் திகழ வேண்டும் என்று வாழ்த்துகிறேன்!

*தொடர் - 7*

# தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் சிந்தனைகள்- ஞானத்தளை



***மு. பழநிச்சாமி, நூலகர், டில்லி.***

*அடியார்கள் இறைவனையே கட்டிப் பிடித்து, அவனுக்கு விலங்கிட்டு வைக்கும் வல்லமை பெற்றவர்கள். இங்கே, பிடிப்பது என்றால், கையினால் கட்டிப் பிடிப்பது அன்று. நமது புத்தியாகிய அறிவைக் கொண்டு, 'அன்பினால் இறைவன் திருவடியை அடைவதாகும்.*

*அந்த அன்பிற்கு நிலைக்களனாகிய சித்தம் எனும் வலிய கயிற்றினால், இறைவன் திருவடிகளை (அவர் கட்டுவிக்க)க் கட்டினேன் என்கிறார் – மணிவாசகர்.*

*'பத்திமையும் பரிசுமிலாப் பசுபாதம் அறுத்தருளிப்*
*பித்தன் இவன் எனஎன்னை ஆக்குவித்துப் பேராமே*
*சித்தம்எனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த*
*வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே'.*

*இதுபோலவே நாவுக்கரசர் பெருமானும் ஞானப் பொருளாய் இருக்கும் இறைவனைப் பிடித்து விலங்கிட்டு விட்டேன் என்கிறார்.*

*'முன்னை ஞான முதல்தனி வித்தினைப்*
*பின்னை ஞானப் பிறங்கு சடையனை*
*என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்*
*தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே'.*

*காரைக்கால் அம்மையாரும், இறைவனைப் பிடித்து, அன்பென்னும் போர்வையால் மறைத்து, தன் தனி நெஞ்சில் சிறைப்படுத்தி வைத்துள்ளதாகச் சொல்கிறார்.*

*'ஆர்வல்லார் காண அரனவனை அன்பென்னும்*
*போர்வை யதனாலே போர்த்தமைத்துச் – சீர்வல்ல*
*தாயத்தால் நாமும் தனிநெஞ்சி னுள்ளடைத்து*
*மாயத்தால் வைத்தோம் மறைத்து'.*

*இவை இருக்க, வில்லி பாரதத்தில் ஒரு பகுதி; கண்ணபிரான் துரியோதனனிடம் தூது செல்வதற்கு முன், பாண்டவர் ஐவரையும் ஒன்றாக அழைத்து வைத்து அவர்களின் கருத்துக்களைக் கேட்டறிகிறார். தருமர், வீமன், அர்ச்சுனன், நகுலன்*

*ஆகியோர் கருத்துக்களைக் கேட்டுவிட்டு இறுதியாக, சகாதேவனிடம் அவன் கருத்து என்ன? எனக் கேட்கிறார்.*

*சகாதேவனின் எண்ண ஓட்டம் இவ்வாறு ஓடுகிறது. 'நீ ஒரு முடிவுக்கு வந்துவிட்டாய்; அதன்படியே அனைத்தும் நிகழப்போகிறது; இதில் என் கருத்தைக் கேட்டு என்ன ஆகப் போகிறது?' – என நெஞ்சால் நினைக்கிறான்.*

*அதை அப்படியே வெளிப்படுத்தாமல், ஆதி மூர்த்தி! நீ தூது போனால் என்ன? போகாவிட்டால் என்ன? துரியோதனன் நிலம் வழங்கினால் என்ன? வழங்காவிட்டால் என்ன? பாஞ்சாலியாகிய இவள், இப்படியே கூந்தலை விரித்துப் போட்டுக் கொண்டிருந்தால் என்ன? அல்லது சீவி முடித்துச் சிங்காரித்து வைத்துக்கொண்டால்தான் என்ன? உன் மாயையால் அந்தத்தில் நடந்து முடியப்போவதை இப்போது யாரறிவார்?' – என்று சொல்கிறான்.*

*அனைத்தையும் முன்கூட்டியே அறியும் வல்லமை பெற்றவனாயினும், வெளிப்பார்வைக்கு, பலர் முன் இவ்வாறு வெம்பி வெதும்பி விரக்தியுற்றுப் பற்றற்றுப் பேசுவதுபோலப் பேசுகிறான்.*

*சிந்தித்தபடி நீயும் சென்றால் என்ன? ஒழிந்தால் என்ன?*

*செறிந்த நூறு மைந்தர்க்குள் முதல்வன் நிலம்வழங்காமல் இருந்தால் என்ன? வழங்கினால் என்ன?*

*கொந்துற்ற குழலை இவளும் முடித்தால் என்ன?*
*விரித்தால் என்ன? குறித்த செய்கை*
*அந்தத்தில் முடியம்வகை அடியேற்குத் தெரியுமோ? ஆதிமூர்த்தி.*

*இவனது இந்த விபரீதப் போக்கைக் கண்ட கண்ணபிரான், அவனைப் பாண்டவராகிய ஐவர் குழுவிலிருந்து பிரித்து, தனியிடத்திற்கு அழைத்துச் சென்று, உன் உண்மையான கருத்து என்ன? எனப் பக்குவமாகக் கேட்கிறார். அதற்குப் பதிலுரையாக 'உன் மாயையால் நடந்து கொண்டிருக்கும் நிகழ்வுகள், இங்குள்ளோரில் ஒருவருக்கும் தெரியாது. உண்மையில் நான் அறிவேன். உன் திருவுள்ளம் எதுவோ அதுவே என் கருத்துமாகும்' என இவ்வாறு உரைக்கிறான் சகாதேவன்.*



இதைக்கேட்ட கண்ணபிரான், மேலும் அவனிடம், பாரதப்போர் நிகழாவண்ணம் தடுக்க, ஏதாவது வழி அல்லது உபாயம் உண்டா? எனக் கேட்கிறான். இதற்குத் தூக்கிவாரிப் போடும்படியான பதிவைத் தருகிறான் – சகாதேவன்.

ஒன்று, இந்தப் போருக்குப் பிரதானமானவன் எனக் கருதப்படும் அர்ச்சுனனை முதலில் கொல்ல வேண்டும்.

இரண்டு, இப்பொழுது எதிரணியில் இருக்கும் கர்ணனைக் கூட்டி வந்து, இந்த நாட்டு மன்னனாக முடிசூட்ட வேண்டும்.

மூன்று: இந்தப் போருக்கு ஆதிகாரணமாய் அமைந்த பாஞ்சாலியின் கூந்தலைக் களைந்து, அவளது காலில் விலங்கு மாட்ட வேண்டும்.



நான்கு: இறுதியாகவும் உறுதியாகவும் உன்னை நான் கட்டிப்போட வேண்டும்.

இப்படிச் செய்தால் பாரதப் போர் வராமல் காக்கலாம் என்றான்.

பாராளக் கண்ணன், இகல் பார்த்தனை முன்கொன்று அணங்கின்
காரார் குழல்களைந்து, காலில் தளைபூட்டி
நேராகக் கைப்பிடித்து நின்னையும்யான் கட்டுவனேல்
வாராமல் காக்கலாம் மாபாரதம் என்றான்.

இதைக் கேட்டு அதிர்ச்சியுற்றுப்போன கண்ணன், பின் சுதாரித்துக் கொண்டு ‘நீ கூறிய இந்த நான்கில் எதுவும் நடக்க இயலாதவை. வாதத்திற்காக இதை ஏற்றுக்கொண்டாலும் நீ சொன்னபடி அமர்த்தி விடலாம்; பாஞ்சாலியின் கூந்தலைக் களைந்து, காலில் தளைபூட்டி விடலாம்; ஆனால் என்னை நீ எப்படிக் கட்டுவாய்? எனும் பொருள் பொதித்த கேள்வியை விநயமாகக் கேட்கிறான்.

*அதற்குப் பதிலளிக்கும் வண்ணம், அர்த்தமுள்ளதொரு சிரிப்பைச் சிரித்து 'உன்னையே உனக்குத் தெரியாது. ஆனால் உன்னை நான் முற்றாக அறிவேன். உன் வடிவத்தைக் காட்டு. அப்பொழுது உன்னைச் சிக்கெனப் பிடித்துக் கட்டிப் போடுகிறேனா? இல்லையா? என்று பார்' – என்கிறான் சகாதேவன்.*

*முன்னம் நீ கூறியவை எல்லாம் முடித்தாலும்,*
*என்னை நீகட்டுவது எவ்வாறுஎன மாயன்*
*உன்னை நீதானும் உணராதாய் உன்வடிவம்*
*தன்னை நீகாட்ட 'தளைந்திடுவன்யான்'*

*என்றான்.*



*பார்த்தார் பகவான். 'என்னைக் கட்டிப்போடு, பார்க்கலாம். அப்பொழுது உன் சாமார்த்தியத்தைப் பார்க்கிறேன்' – என்று சொல்லி பதினாறாயிரம் வடிவெடுத்து, அவன்முன் நின்றார். இது கண்டு பிரமித்துக் கலங்காமல், குழம்பித் தவிக்காமல் 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப்பொருள் மெய்ப்பொருள் காணும் திறம்பெற்றிருந்த சகாதேவன், மூலவடிவத்தை அறிந்து, மாயவன் பாதங்களை இறுகப் பிணித்தான்.*

*மாயவனும் அன்பன் மனமறிவான், கட்டுகொன்று*
*ஆயவடிவு பதினாறாயிரம் கொண்டான்*
*தூயவனும் மூலமாம் தோற்றம் உணர்ந்து, எவ்வுலகம்*
*தாய அடியிணைகள் தன்கருத்தினால் பிணித்தான்.*

*இவ்வாறு இவன் பிடித்த பிடி, இறுக இறுக, கண்ணபெருமானுக்கு மூச்சுத் திணறுகிறது; நிலை தடுமாறுகிறது; சகாதேவனிடன் கெஞ்சிக் கேட்பதுபோல் 'என் பாதந்தன்னை இனி விடுக' என வேண்டுகிறார்.*

*"அன்பால் இன்றென்னை அறிந்தே பிணித்தமை நன்று;*
*என்பாதம் தன்னை இனிவிடுக என்றுரைப்ப"*

*‘அன்பால் இன்று என்னை அறிந்தே பிணித்தமை நன்று’ – என்பதுதான் இங்கே, கவனிக்க வேண்டிய செய்தி. அன்பு நெஞ்சங் கொண்டு, ஆர்வமோங்க இறைவனைத் தலையிட்டுப் பிணித்த பாங்கு வில்லிபுத்தூரார் பாரதத்தில் இவ்வாறு வெளிப்பட்டு நிற்கிறது.*

*அன்பெனும் பிடிகொண்டும் – பக்தி மனங்கொண்டும் – பரமனை வசப்படுத்திச் சிக்கெனப் பிடித்துச் சிறைப்படுத்தும் சதுரப்பாடு – மணிவாசகரிடம் மேலோங்கி நின்றதைக் காண்கிறோம்.*

*‘வலிசெய்து போகலொட்டேன்’ ‘பிழைத்தேயும் போகலொட்டேன்’ – என்றெல்லாம் சொல்லி – இறைவனையே மறப்போருக்கு அழைத்து மல்லுகட்டி மடக்கிப் பிடிப்பது போல் – தன் கட்டுக்குள் கொண்டுவந்து – ஞானத் தளையிட்டு வைத்த பெருமிதம் – நாவுக்கரசரிடம் நலம்பயின்று நின்றதை நல்லவாறு அறிகிறோம்.*



*அன்பெனும் போர்வைகொண்டு, அந்த ஆதிமுதல்வனை, தன் தனிநெஞ்சிற்குள் அடைத்துச் சிறையிட்டு – மாய முத்திரையிட்டு – மறைத்து வைத்த தகவு – காரைக்கால் அம்மையாரிடம் கனிந்து நிற்கக் காண்கிறோம்.*

*தன் சித்தமெனும் அன்புக் கயிற்றால் – அந்தச் செந்தமிழைக் கண்ணனின் சிவந்த திருவடிகளை – தளையிட்டுத் தவிக்கவிட்டுப் பார்த்த சாதுர்யம் – சகாதேவனிடம் சதிராடி நின்றதை – நினைவோடிக் காண்கிறோம்.*

*மேற்கண்ட இந்தச் செய்திகள் சொல்லும் சாரம் என்ன? அருட் கலப்புற்ற அடியார்கள் – எங்கும் நிறைந்து யாதுமாய் இருக்கும் இறைவனை – வளைத்துப் பிடித்து ஞானத் தளையிட்டு வைக்கும் வல்லமை பெற்றிருந்தனர் என்பதுதானே.*

*இவர்களின் இந்த இனிய இறையனுபவங்களை முன்மாதிரியாகக் கொண்டு – பாவனை கொண்டு பக்தி செய்து – பரமன்பால் அன்பைப் பதிக்கும் அடியார் அனைவருக்கும் ஆகிவளர்ந்து சிந்திக்க – இறையருள் துணை கூடுமாக.*

# சமுதாயத்தில் தனியாள் வாழ்வியலின் வழிகாட்டி திருக்குறள் (அ)



**கி. செயராமன் எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,**
*முதுநிலைத் தமிழ் மொழியாசிரியர் பணிநிறைவு.*
*கல்வியியல் தமிழ் உதவிப் பேராசிரியர்.*
*காஞ்சிபுரம்.*

*மக்கள் கூட்டம் கூட்டமாய்ச் சேர்ந்து வாழ்வது தொல்காலத்திலிருந்தே நடைமுறையில் உள்ளதாகும். துறவி உலகப்பற்றற்றவர் மட்டுமே தனியாளாய் உலகில் அலைந்து திரிந்தனர். அன்றும் இன்றும் இது நடைமுறையில் இருப்பதைக் காணலாம். அடுத்ததாக மக்களோடு மக்களாய் வாழ்ந்து உலகில் சிறந்த நிலையை அடையமுடியும் என்பதை வாழ்ந்தும் வழிகாட்டியும் செல்பவர் ஞானிகளாவர். நல்லறிவை நடையில் பயன்படுத்தி அதில் தோன்றும் நிறைகுறைகளை அலசி ஆய்ந்து அதில் எவை சிறந்தவையோ அதுவே வாழ்நெறி என்று வகுத்தளித்துள்ளனர். திருவள்ளுவர் எனும் ஞானி வழங்கும் வாழ்வியல் நடைமுறைகளை அறிந்து அதன்வழிப் பயணித்து மகிழ்வோம்.*

***திருவள்ளுவரும் திருக்குறளும் உடைமைகளும்:***

*திருவள்ளுவரின் திருக்குறள் மூன்று பால்களாகவும் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களும் ஒரு அதிகாரத்தில் பத்து குறள்கள் என ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்களும் அமைந்துள்ளன. இதில் முதலில் நமக்கு வழங்குவது தனிமனித ஒழுக்கமாகும். பால் தூய்மையானது என்றாலும் அதை வைக்கும் பாத்திரம் அழுக்கானதாய் இருப்பின் பால் கெட்டுவிடும். அதனால் பாத்திரமும் ஒதுக்கப்பட்டு விடும். எனவே பாத்திரமாகிய தனிமனிதன் ஒழுக்கமாய் உலகியல் வாழ்முறையோடு சிறந்திருப்பின் எப்பொருளாயினும் கெடாது பிறர்க்கு வழங்குதல் எளிமையானதாகும். திருவள்ளுவர் தனிமனித ஒழுக்கங்களாக வாழ்முறையாகப் பத்து உடைமைகளை வழங்குகிறார்.*

***திருவள்ளுவர் வழங்கும் பத்து உடைமைகள்:***

*திருவள்ளுவர் தனிமனிதச் சொத்தாக ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டிய உடைமைகளை, சொத்துகளை, பொருள்களை வரையறை செய்கிறார். அவை பத்து அதிகாரங்களில் வழங்கப்படுகின்றன.*

*1. அன்புடைமை — எட்டாம் அதிகாரம் அறத்துப்பால் இல்லறவியல்*

*2. அடக்கமுடைமை — பதின்மூன்றாம் அதிகாரம் அறத்துப்பால் இல்லறவியல்*

*3. ஒழுக்கமுடைமை — பதினான்காம் அதிகாரம் அறத்துப்பால் இல்லறவியல்*

*4. பொறையுடைமை — பதினாறாம் அதிகாரம் அறத்துப்பால் இல்லறவியல்*

*5. அருளுடைமை — இருபத்தைந்தாம் அதிகாரம் அறத்துப்பால் துறவறவியல்*

*6. அறிவுடைமை — நாற்பத்து மூன்றாம் அதிராம் பொருட்பால் அரசியல்*

*7. ஊக்கமுடைமை — அறுபதாம் அதிகாரம் பொருட்பால் அரசியல்*

*8. ஆள்வினையுடைமை — அறுபத்திரண்டாம் அதிகாரம் பொருட்பால் அரசியல்*

*9. பண்புடைமை — நூறாவது அதிகாரம் பொருட்பால் ஒழிபியல்*

*10. நாணுடைமை — நூற்றிரண்டாம் அதிகாரம் பொருட்பால் ஒழிபியல்*

*இந்த பத்து அதிகாரங்களில் நான்கு அதிகாரங்கள் இல்லறவியலிலும், ஒன்று மட்டும் துறவறவியலிலும், மூன்று அரசியலிலும், இரண்டு ஒழிபியலிலும் வழங்கப்பட்டுள்ளன.*

***தனிமனிதச் சொத்தாக விளங்கவேண்டும் என்னும் வாழ்முறை:***

*மக்கள் தாங்கள் வாழ்கின்ற காலத்தில் எதை அணிகலனாக அணிந்திருக்கிறாரோ இல்லையோ இந்தப் பத்துச் சொத்துகளையும் தனக்கே உரிய உடைமைகளாகக் கொண்டிருத்தல் வேண்டும். அதுவே உலகில் வாழ்ந்ததின் அடையாளம் என்பதை முன்னிறுத்தி வாழ்முறையை வகுத்துக் காட்டுகிறார். சிறிது முன்னோக்கிய காலங்களில் ஒருவர் தன் மகனுக்குப் பெண்பார்த்துத் திருமணம் செய்ய விரும்புகிறார் என்றால் தன் உறவுகளிடமும் தன்னுடைய அன்பர் நண்பர்களிடமும் என்மகனுக்குத் திருமணம் செய்ய விரும்புகிறேன். அதற்கு என் வீட்டிற்கு விளக்கேற்றும் ஒரு பெண்மணியை சொத்து பத்து உள்ளவளாக இருக்குமாறு பார்த்துக் கொடுங்கள் என்று வேண்டுதல் வைப்பார். எல்லோரும் சொத்து என்பதை செல்வந்தர் வீட்டுப்பெண் என்றும் பத்து என்பதை ஏராளமான சுற்றத்தார் உள்ள பெண் எனவும் கொண்டிருப்பர். ஆனால் திருவள்ளுவர் கூறும் இந்தப் பத்துப் பண்புகளையும் வாழ்வியல் நடைமுறைகளையும் தம்முடைய சொத்தாக உடைமையாகக் கொண்டு விளங்கும் பெண்ணைப் பார்த்துக் கொடுங்கள் என்பதே இதன் பொருளாகும்.*



*முற்காலத்தில் இந்த உடைமை பத்தும் சொத்துபத்தாக விளங்கியதை அறியமுடிகிறது. வள்ளுவரின் வாழ்வியல் முறை எவ்வாறெல்லாம் மாற்றமடைந்துவிட்டது என்பதையும் அறிய முடிகிறது.*

***வாழ்வியல் இயக்கத்தின் முதல் மூச்சு அன்பு:***

*திருவள்ளுவர் வாழ்வியலை இல்லறத்திலிருந்து தொடங்குகிறார். வாழ்க்கை இல்லறத்தில் தொடங்குவது நாம் அறிந்த ஒன்றாகும். இல்லறமே நல்லறம் என்று நாமும் போற்றி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அதில் தலையாய பண்பு எல்லா உயிர்களிடமும் அன்புடையவராக நாம் விளங்குதல் வேண்டும். இதை உணர்த்தவே முதல் உடைமையாக அன்புடைமையை வைத்திருக்கிறார்.*

*அன்பு உயிரோடு கலந்ததாகும். அன்பினை யாராலும் தாழ்ப்பாள் போட்டு அடைத்துவிட முடியாது. அது, தானே பொங்கி வழியும் நிலையினை உடையதாகும்.*

*அன்புடையவரின் கண்ணீர் தளும்பல் அவர் கொண்டிருக்கும் அன்பை வெளிப்படுத்திவிடும். அன்பினை ஒவ்வொருவரும் தன் உடைமையாகச் சொத்தாகக் கருதித் தன்னுள் வைத்துக்கொண்டு வேண்டியபோது பிறர்க்கு வழங்கிடும் இயல்பைக் கொண்டிருக்கவேண்டும். மூச்சின் இயக்கமின்றி உடல் இயக்கமில்லை. அதுபோல அன்பின் இயக்கமின்றி வாழ்க்கை வளப்பம் இல்லை எனலாம்.*

***அன்புடைமையின் இயல்புகளும் அதன் தலைமைப் பொறுப்பும்:***

*அன்பிலார் தன்னலத்தார் ஆவர். அன்புடையார் பிறர்நலம் கருதும் பொது நலத்தார் ஆவர். நட்பின் அடிப்படைக் காரணி அன்பாகும். அன்பு ஆர்வத்தைத் தூண்டி நட்பை வளர்க்கும்.*

*உலகில் இன்புற்று வாழ்ந்தவர் என்ற பெருமையை வழங்குவது அன்பாகும். அன்பின் பயன் உலகவாழ்வின் சிறப்பினை வழங்கும். உலக வாழ்வில் அறமும் மறமும் இணைந்து இயங்குவதாகும். இவ்விரண்டிற்கும் அன்பே காரணமாக அமைந்திருக்கும்.*

*எலும்பில்லாது வாழ்கின்ற உயிர்களை வெயிலானது வருத்துவது போல் அன்பில்லாத உயிர்களை அறமானது துன்பத்தில் ஆழ்த்திவிடும். உலகில் வாழ்கின்ற உயிர்கள் அன்பில்லாது வாழ்தல் இயலாது. அன்பில்லாத உயிர் என்பது பாலை நிலத்தில் காய்ந்துபோன மரம் தளிர்த்ததைப் போன்றதாகும்.*

*மனதில் அன்பு ஊற்றெடுக்காவிடில் வெளியில் உள்ள உறுப்புகளால் எவ்விதப் பயனும் இல்லை. அன்புள்ள உடலே உயிருள்ள உடலாகும். அன்பில்லாத உடல் எலும்பு தோல் போர்த்திய வெற்றுடலாகும்.*

*அன்புடைமையைச் சொத்தாகப் பெற்றிருப்போர் உலக வாழ்வில் இன்புற்று, சிறப்புற்று, பெருமையுற்று வாழ்வர் என்று நம்மை அன்புடைமைக்குச் சொந்தக்காரராக மாற்றுகிறார். உலக வாழ்வியலுக்கு அன்பு என்பது மிகப்பெரிய தளமாகும். எச்செயலும் அன்பில்லாமல் ஈடேறாது என்பதை நாம் அறிந்து இருப்பதோடு கற்றல் இனிமையாகப் பெற்றிருக்கிறோம்.*

***வாழ்வியல் நெறிகளின் தலைமையான அடக்கமுடைமை:***

*வாழ்க்கை என்பது சலசலப்பு அமைதி என்ற இரு நிலைகளில் வழிந்தோடிக் கொண்டிருக்கும். மலையில் தோன்றும் ஆறானது மேடு பள்ளங்களில் ஓடும்போது சலசலப்புக்குப் பஞ்சமிருக்காது. அவ்வாறு தோன்றும் அருவிகளையும் நாம் எண்ணிக் கொள்ளலாம். பின்னர் சமவெளியில் செல்லும்போது ஆற்றுநீர் எவ்வித சலசலப்புக்கும் இடங்கொடாமல் அமைதியாகச் சென்று கடலில் சேரும். ஆற்றைப்போலவே மக்கள் இளமையில் சுறுசுறுப்பும் துடிதுடிப்பும் கொண்டு இயங்குவர். அப்போது பற்பல ஆற்றல்கள் எழுந்து உலவும். அவ்வாற்றல்களை மடைமாற்றம் செய்து பயனுள்ள ஆற்றல்களாக மாற்றுவதுபோல் அடக்கமுடைமை நமக்குப் பெருந்துணை புரியும். அடக்கமுடைமையைப் பின்பற்றி வாழ்வில் நடைபயிலும்போது அமைதியும் ஆழமும் இன்பமும் பலருக்கு உதவும் பண்பும் மேலோங்கி வாழ்க்கை இன்பமானதாய் விளங்கும். இதனையே வள்ளுவர் அடக்கமுடைமையைச் சொத்தாக்குகிறார்.*



***அடக்கமுடைமையின் இயல்பும் தலைமைப் பண்பிற்கான வழிகாட்டலும்:***

*அடக்கம் எதற்குப் பயன்படும் என்ற வினாவைத் தோற்றுவிப்போர் பலர். அடங்கிப் போவதற்கு நான் என்ன கோழையா? என்று வினாத் தொடுப்பர். இவ்வாறானவர்களுக்கு விடையாக விழுகிறது குறள். உலக வாழ்வில் அடங்க*

வேண்டியவற்றிற்கு அடங்கி அடக்கத்தோடு இருந்தால் தேவர் உலகத்தில் வாழ்வதுபோல உயர்ந்த வாழ்வை வாழலாம். அப்படியில்லை நான் அடக்கமில்லாது திரிவேன் என்றால் துன்ப உலகில் வாழ்ந்து துன்பத்தில் மூழ்கியிருக்கவேண்டும்.

உலக வாழ்வியலுக்குத் தேவையான பொருள் அடக்கமாகும். எனவே அப்பொருளை அதிகம் சேர்த்து வாழ்தல் வேண்டும். அதுவே உயிர்வாழ்தற்கான ஆக்கத்தை உலகில் விளைவித்து மக்கள் நலன் காக்கும்.

அறியவேண்டியவற்றை அறிந்து அடங்கி அடக்கத்தோடு வாழ்வோரை உலகில் வாழ்வோர் பெரிதும் மதித்து வரவேற்பர். தனக்கென ஒரு உயர்நிலையை அடக்கத்தின் வழி உருவாக்கி வாழ்பவர் உலகில் உள்ள உயர்ந்தோராக உயர்ந்த மலையைப் போன்ற தோற்றத்தை அடைவர். மலை என்பது வெறும் கல்லன்று. அதில் உயிர்வாழத் தேவையான அனைத்தும் விளையும் சிறந்த இடமாகும். உடல் நலத்தோடு வாழ்வதற்கு வழிகாட்டும் இடமாகும். எனவே அடக்கத்தோடு நன்னெறியில் வாழ்வோரை மலையைவிட உயர்ந்தவர்களாகின்றனர்.




***அடக்கம் செல்வத்தைப் போன்று மக்களிடத்தில் மதிப்பளிக்கும் கருவி:***

மக்கள் வாழ்வியலில் பிறர் கருத்துக்கு மதிப்பளித்துப் பணிந்து செல்லுதல் செல்வந்தரிடம் செல்வம் சேர்வதைப் போன்றதாகும். செல்வம் சேரவும் அடக்கம் உறுதுணையாகிறது. ஆமை தன்னுறுப்புகள் ஐந்தினையும் தன் ஓட்டிற்குள் அடக்கிக் காத்துக் கொள்வதைப்போல மக்களும் தங்களின் ஐம்பொறிகளையும் அடக்கி ஆளும்போது இப்பிறப்பு மட்டுமல்லாது இனி வருகின்ற பிறப்புகளிலும் துன்பமின்றி வாழ்வதற்கான வழியாக அமைகிறது.

அடக்கத்தில் தலைமையானது நாம் பேசப் பயன்படுத்தும் நாக்காகும். எனவே எதற்கெடுத்தாலும் துடுக்காய்ப் பேசாது அடங்கியிருந்தால் சொல்லால் வரும் துன்பங்களிலிருந்து மீண்டுவிடலாம்.

பேசுகின்ற ஒரு சொல் தீச்சொல்லாயிருப்பினும் அது குடம் பாலில் ஒருதுளி நஞ்சைப்போல் எல்லாவற்றையும் தீமையாக்கிவிடும். நாவினால் சொல்லப்படும் சொல்லானது மனதைச் சுடும். ஆனால் அது எக்காலத்திலும் ஆறாது இருக்கும். ஆனால் தீயினால் சுட்ட புண் ஆறிவிடும். எனவே அடக்கத்தின் வலிமையை உணர்ந்து வாழவேண்டும். சினத்தையும் அடக்கிக் காத்துக் கொண்டு கற்க வேண்டியவற்றைக் கற்று அடக்கத்துடன் வாழ்தல் அறவாழ்க்கை என்பது தானே வந்து அமைந்துவிடும் என்று அடக்கமுடைமையின் ஆற்றல் வாழ்வில் பேரொளி வீசும் என்பதைப் புலப்படுத்துவதோடு வாழ்வியல் நெறிகளை எளிமைப்படுத்துகிறார். அடக்கம் என்பது சூழல்களை உணர்ந்து அங்கு தன்நிலை என்ன என்பதை உணர்ந்து அடங்கி இருந்து தன்னாற்றலை வெளிப்படுத்தும் இடத்தில் வெளிப்படுத்தி அடக்கத்தின் மாண்பை உணரவைத்தல் என்பது அனைவரும் ஏற்று ஒழுகுகின்ற அடக்கமுடைமை நெறியாக விளங்குகிறது.

**ஒழுக்கமுடைமை எனும் வாழ்முறையின் வழிமுறைகள்:**

ஒழுக்கம் என்பது முதலில் தனிமனிதனுக்கு உரியதாகும். தனிமனிதனின் ஒழுக்கம் சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கள் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும்போது அது சமுதாய ஒழுக்கமாக மாற்றம் அடையும். காப்பீடு என்று ஒரு திட்டம் முதலில் ஊர்திகளுக்கு உருவானது. தற்போது மக்களுக்கும் உரிய ஒழுக்கம் என்றாகிவிட்டது. ஊர்திகளுக் கானதாயின் ஊர்திக் காப்பீடு என்றும் மனிதனுக்கு எனும்போது ஆயுள் காப்பீடு என்றும் வழங்கப்படுகிறது. அதைப் போலவே ஒழுக்கமும் காலங்காலமாய் நம்மால் பின்பற்றப்படுகின்ற ஒன்றாகும். அந்த ஒழுக்கங்களைப் பின்பற்றுவதால் நம் வாழ்வின் உறுதித்தன்மை சிறந்து விளங்குவதை நமக்கான வாழ்வியல் நெறியாக மாறாத விழுமியமாகத் திருவள்ளுவர் வகுத்தளித்துள்ளார்.

**ஒழுக்கமுடைமை உயிரினும் மேலான வாழ்வியல் நெறி அறிவோம்:**

தனிமனித வாழ்வியல் வரைமுறையே ஒழுக்கமாகும். சமுதாயத்தில் வாழ்முறை ஒழுக்கத்தை நிரல்படுத்தி வள்ளுவர் நம் வாழ்வை ஒளிபெறச் செய்கிறார்.

ஒருவன் வாழ்க்கையில் பின்பற்றப்படும் ஒழுக்கம் அவனை மக்களில் மேம்படுத்திக் காட்டுகிறது. அதனால் அத்தகு மேன்மையைத் தரும் ஒழுக்கம் உயிரைவிட மேலானதாகப் போற்றிப் பின்பற்றுதல் வேண்டும்.

துன்பச் சூழலில் ஒழுக்கத்தோடு வாழமுடியாத நிலை ஏற்பட்டாலும் அதை முறையாகப் பின்பற்றி துன்பத்தோடு வாழ்தல் வேண்டும். அவ்வாறு வாழ்வது உயிருக்கு உறுதுணையாக ஒழுக்கம் அமையும் என்பதை அறிந்து பின்பற்றுதல் வேண்டும்.

எக்குடியில் பிறந்திருப்பினும் ஒழுக்கத்தோடு வாழும்போது மக்களால் உயர் குடியாளனாகப் போற்றி அவரோடு இணைந்து வாழ்வர். ஒழுக்கத்திலிருந்து விலகினால் இழிந்த பிறப்பாளானாய்க் கருதி எல்லோரும் விலகி வாழ்வர்.

எதை மறந்துவிட்டாலும் மீண்டும் அதனைக் கற்றுத் தேர்வதில் முயற்சி கொள்ளலாம். ஆனால் ஒருவன் ஒழுக்கம் குன்றக் கெடுவானாயின் அவனால் மீண்டும் நன்னெறியாளன் என்ற ஒழுக்க நிலை அடைய இயலாது என்பதை உலக நடைமுறையில் பார்ப்பவர்களால் அறிந்து தெளியலாகிறது.

மக்களில் யாரைப் பார்த்தாலும் ஒப்பீட்டு உணர்வோடு பார்க்கும் இயல்புடையன் பொறாமையாளன் ஆவான். அத்தகுப் பொறாமையாளனிடம் செல்வம் தங்காமல் சென்றுவிடும். அதுபோல ஒழுக்கம் இல்லாதவனிடம் உயர்வு இல்லாமல் போய்விடும்.

ஒழுக்கத்தில் குறைவது இழிவானதாகும் என்பதை உணர்ந்து பின்பற்றி வாழ்வோர் அறிஞர் ஆவர். அவ்வாறு வாழும் அறிவுசால் அறிஞர் யாரும் ஒழுக்கத்திலிருந்து விலகாது விளங்குவர்.

ஒழுக்கத்தைப் பின்பற்றி வாழ்வோர் நாளும் சமுதாயத்தில் தம் வாழ்வில் மேன்மையுடன் வாழ்ந்து வருவர். அத்தகையோர் ஒழுக்கத்திலிருந்து வழுவினால் யாரும் அடைய இயலாத பழியை அடைந்து துன்புறுவர்.

நல்லொழுக்க வாழ்வானது சமுதாய வாழ்வில் விதைக்கப்படும் விதையைப்போல அனைவராலும் பின்பற்றப்பட்டு ஒழுக்கம் பலவாறு பெருகி அதன் சிறப்பை அனைவருக்கும் வழங்கும் இயல்பினதாகும். நல்லொழுக்கம் விதையானால் நாளும் நன்மை பெருகும். அதேபோல் தீயொழுக்கம் விதையானால் நாளும் தீமை பெருகும். எனவே நல்லொழுக்க விதையை விதைத்து எல்லா இடங்களிலும் பசுமையைப் போர்த்தி இன்புறுவோம்.

நல்லொழுக்க விதையைத் தூவின் அது வளர்ந்து காய்ப்பது வாழ்வியலுக்குத் துணை நிற்கும் கனியாகும். அதுபோல நல்லொழுக்கமுடையோர் வாயிலிருந்து நன்மை தரும் சொற்களே எப்போதும் வெளிவரும். எவ்வளவு முயன்றாலும் தினை விதைத்தவன் தினையை அறுவடை செய்வதுபோல நல்லொழுக்கத்தார் வாயிலிருந்து தீயசொற்கள் வெளியில் வராது நற்சொற்களே வெளியில் வரும் என்பதை உணரலாம்.

உலகில் மக்கள் பயணித்துச்செல்லும் நன்னெறியை அறிந்து அவர்களோடு கலந்து வாழ்தல் வாழ்வின் சிறந்த ஒழுக்கமாகும். கல்வியால் எவ்வளவு சிறந்து விளங்கும் அறிவுடையோ ராயினும் உலக நடைமுறையில் பயணிக்காவிடில் கல்வி கல்லா அறிவிலாரை ஒத்தவர் ஆவார்.



நாம் பிறக்கும்போது நம்முடன் ஒழுக்கம் பிறக்கவில்லை என்பதறிவோம். ஆனால் ஒழுக்கந் தான் நம்முடைய பிறப்பிற்குப் பெருமை சேர்ப்பதாகும். ஒழுக்கம் குன்றுவது இழிவை உண்டாக்கிவிடும் என்கிறார் வள்ளுவர். நல் ஒழுக்கத்தைப் பேணாது இருந்தால் அது பிறவியான வாழ்வியலை தாழ்விற்கு உள்ளாக்கும். ஒழுக்கத்தைப் பேண மறந்து ஒழுகினால் வாழ்வு சீர்மை குன்றிக் கெட்டுவிடும். பெற்றோர், சுற்றுச்சூழல், நண்பர் ஒட்டுறவு, கல்விப் பயிற்சி இவை ஒருவனது ஒழுக்க வளர்ச்சிக்குக் காரணங்களாக அமைகின்றன. இக்கால சாதிப்பிரிவு அடிப்படையில் வள்ளுவர் போலி உயர்வுக்கு இடந்தராமல் ஒழுக்கம் உடையவரே உயர்ந்தவர் என்று தெளிவுபடுத்துகிறார்.

**பொறையுடைமையால் பொறுத்துக்கொண்டு வாழ்தல் துன்பம் தகர்க்கும் உயர்நெறி:**

பொறுத்தார் பூமியாள்வார் என்பது எளிய மக்களின் ஏற்றமிகு பழமொழியாகும். பூமியாள்தல் என்பது பூமியில் மகிழ்வாக வாழ்தல் என்று கொள்ளலாம். பொறையுடமை என்பது பிறர் தமக்குத் தீமை செய்யும்பொழுது தாமும் அவர்களுக்குத் தீங்கு செய்யாது பொறுத்துக் கொள்ளுதலாகும். அறிந்தோ, அறியாமலோ செருக்காலோ ஒருவர் நமக்குத் தீங்கு செய்தபொழுது பொறுத்துக்கொள்வது மட்டுமல்ல அதை மறந்துவிடுவதும் நன்மை வழங்கும் செயல் என்கிறது.

பொறுமை எவ்வாறு நம்மிடையே விளங்கவேண்டும் என்பதற்கான உவமையை நயத்துடன் வழங்கியுள்ளார். நம்முடைய நிலம் நீரில்லாமையால் பயிர்கள் வாடுகின்றன. உடனே அங்கே ஒரு கிணற்றைத் தோண்டுகிறோம். ஆழம் கூடக்கூட நீர்வரத்து அதிகமாகிப் பயிர்களைப் பசுமையாக்கி நம்மை வளப்படுத்திக் கொள்கிறோம். இங்கு நிலத்தைத் தோண்டும்போது அதனைக் கூரிய கருவிகளால் குத்திக் குடைகிறோம். நம்மை யாராவது அவ்வாறு குத்தினால் நம் நிலையை எண்ணிப் பார்க்கையில் மனம் துவண்டுவிடுகிறது. ஆனால் குத்திக்குத்தித் தோண்டிய நிலம் நமக்கு நீரளித்து நம் வாழ்வை வளமாக்குகிறது. அதுபோல உன்னை யார் துன்புறுத்தினாலும் அதனைப் பொறுத்துக்கொண்டு அவர்களுக்கு நன்மை செய்து வாழ்வதுதான் தலைமையான பொறையுடைமையாகும்.

நம்மைத் துன்பப்படுத்துவதற்கென்றே பிறவி எடுத்தவர் போல் சிலர் விளங்குவர். ஆயினும் நாம் அவர் செய்யும் தீங்குகளை தீமைகளைப் பொறுத்துக்கொள்ளல் நமக்கு எப்போது நன்மையை வழங்கிக்கொண்டிருக்கும். அதிலும் பொறுத்துக்கொள்வதைவிட அவர் நமக்குத் துன்பம் செய்ததை மறந்துவிடுதல் பொறுமையிலும் மேன்மையாகும்.

இல்லாமை என்னும் செல்வம் இல்லாத வறுமை என்பது அனைவருக்கும் ஒவ்வொரு காலத்தில் வருவதுண்டு. அப்போது நம்வீட்டிற்கு வருகிறோம் என்று சொல்லுகின்ற போதில் நாம் அவர்களை வரவேற்று உணவளிக்கும் நிலையில் இல்லை என்பதால் தாங்கள் வருகின்ற நாள்களில் பணி நிமித்தமாக வேறிடம் செல்கிறோம் என்று சொல்லி விருந்தைத் தவிர்த்துவிடுவது வறுமையிலும் வறுமை எனும் இன்மையிலும் இன்மையாகும். அறிவில்லாத சூழலில் நமக்குத் துன்பம் செய்வதின் செயலைப் பொறுத்துக் கொள்ளல் வல்லமையுள் வல்லமை எனும் வன்மையுள் வன்மையாக விளங்குகிறது. வாழ்வியலின் இயல்பான நிகழ்வுகளில் நம் நிலை உணர்ந்து வாழும் வகைமையை வழிகாட்டி நெறிப்படுத்துகிறார்.



நிறைவுபெற்ற செல்வம் என்றால் என்னவெனில் மனம் நிறையுமளவிற்குப் பிறருக்கு உதவும் பண்பியல் கூறுகளால் மனம் நிரம்பி இருத்தலாகும். அதனோடு பொருள் செல்வமும் குறைவின்றி அள்ளிக்கொடுக்க உகந்த மனமும் நிரம்பி இருப்பதாகும். இந்த நிறைவுபெற்ற செல்வம் குறைவுபடாது இருக்கவேண்டுமாயின் பொறுக்கும் பண்பில் தலைசிறந்தவராக விளங்குதல் வேண்டும் எனும் நெறி உருவாகிறது.

தீமைக்குத் தீமை கண்ணுக்குக்கண் காலுக்குக்கால் என்று செயல்படும் மனத்தோரை அறிவுசால் சான்றோர் ஒருபோதும் சிறுதுறும்பாகக்கூட மதிக்கமாட்டார். அவர்கள் பொறுத்துக்கொண்டு வாழ்வில் சிறப்போரை மனதில் பொன்னைப் பாதுகாப்பதுபோல் பதிந்து பாதுகாத்துப் போற்றுவர். எனவே பொறை வாழ்வின் நிறையாகிறது.

*நம்மைத் தாக்கியவரை எதிர்நின்று தாக்கி என்னைத் தாக்கியதற்கான பயன் இதுதான் என பெருந்துன்பத்தை விளைவித்து இன்பப்படுவர். இவ்வின்பம் அந்த ஒருநாளைக்கு மட்டுமே இன்பமாக விளங்கும். துன்பம் பெற்றவர் துன்பத்தால் துவண்டு கிடப்பதை அறியும்போது அன்று கொண்ட இன்பம் இருந்த இடம் தெரியாமல் அழிந்துவிடும். ஆனால் துன்பத்தால் துவண்டவர்க்குப் பொறுமையால் உலகம் இருக்கும்வரை புகழ் இருந்துகொண்டே இருக்கும். கலிங்கத்துப் பரணி என்னும் நூலில் துன்பம் கண்ட கலிங்கர்களின் நிலை காலம் காலமாய் இருந்து கொண்டே இருக்கிறது. அதில்*



*வெற்றி வாகை சூடிய முதலாம் குலோத்துங்க சோழன் படைத்தலைவன் கருணாகரத் தொண்டைமானைவிட நம் மனதில் நிலைபெற்று நிற்பதைக் காணலாம்.*

*பொறுத்துக் கொள்வது எனும் பொறையுடைமை தவம் செய்யும் தவசிகளின் சிறப்பை விட மேலானது. பொறுத்துக் கொள்ளல் என்பது அவ்வளவு எளிதான ஒன்று அன்று. விளையாட்டு வேறு; வாழ்க்கை வேறு. விளையாட்டில் பொறுமை இழப்பைத் தரும். வாழ்க்கையில் வளமையைத் தரும். நம் ஒப்பீடுகள் உயர்வானதாக இருப்பின் பொறுமை என்பது பெருமை உடையதாக விளங்கும். இதுவரை உடைமைகளை எளிதில் சுருக்கிவிட இயலாமையால் அடுத்துள்ள உடைமைகளையும் தொகுத்து வழங்கி நம்மை நல்வழிப்படுத்த முயல்வோம். விரைவான வாழ்க்கையில் பொறுமையான வாழ்க்கை என்பது எளிதாக்கிடும் முயற்சி. வாழ்வின் இறுதி என்பது எதையும் உடன் எடுத்துச்செல்ல இயலாததாகும். பிறர்க்கு உதவுதல் அவர்களின் நிலையோடு நாமும் இணங்கிப் போதல் போன்ற பண்புகளால் அனைவரின் மனங்களிலும் நாம் நிலை பெறுவதோடு அடுத்த தலைமுறைகளுக்கான தொடர் நிகழ்வாக விளங்கிடும் என்பதை உணர்ந்து உடைமைகளை ஏற்க வழங்கி மகிழ்வோம்.*

*(தொடரும்)*

# ஆழ்ந்த இறை அனுபவம் (மிஸ்டிஸிஸம்) பற்றிய பல்சமய சொல்லாடல்கள்



**ஆனந்த் அமலதாஸ் சே.ச.,**
*தியான இல்லம்,*
*சென்னை*

*"சிலர் பார்த்தாலும் காண முடிவதில்லை.*

*மற்றவர் கேட்டாலும் கேட்க முடிவதில்லை.*

*ஆனால் சிலருக்கு வாக்கு தானாகவே தன்னை வெளிப்படுத்துகிறது,*

*மணப்பெண் அவள் மணஉடையுடன்*

*தன் மணாளனுக்குத் தன்னைக் கொடுப்பது போல."*

*(ருக்வேதம் 10.71.4)*

*ஆழ்ந்த இறையனுபவம் பற்றிய இலக்கியங்கள் அதிகம் உண்டு. ஏனெனில் அது மனுக்குலத்தின் அனுபவம். அதனால் அது எந்த ஒரு தனிப்பட்ட பண்பாட்டின் வாரிசு அல்ல. இருப்பினும் அதை வெளிக்காட்ட ஒவ்வொரு பண்பாடும் தனக்கான மொழியை, சொல்லாடல்களை உருவாக்குகிறது.*

*இங்கு மொழி என்பது செய்திகளைப் பகிரும் சாதனம் என்ற பொருளில் மட்டும் அல்ல. அது மனித உறவின் முழுமையான உருவங்களின் ஒன்றைச் சுட்டிக்காட்டுகிறது. மனிதன் எதையெல்லாம் தொடுகிறானோ, பார்க்கிறானோ, உணர்கிறானோ, சிந்திக்கிறானோ அவையெல்லாம் மொழியாய் உருவெடுக்கிறது, மொழி வழியில் வெளியாகின்றது.*

*இங்கு நாம் இறை அனுபவம் பற்றிக்கூறும் மொழி பற்றிப் பேசுகிறோம். ஒவ்வொரு சமயமும் இந்த அனுபவத்தைச் சின்னங்கள், உருவகங்கள் வழியாகப் பேசுகிறது. ஒவ்வொரு அனுபவமும் தனித்துவம் கொண்டது. அதனால் அதை மற்றொன்றோடு ஒப்பிட முடியாது. அதோடு, ஒவ்வொரு மொழியும் தனக்கான மொழிவடிவம் கொண்டது. அது தனது குறிப்பிட்ட சூழலில்தான் புரிதல் கொடுக்கும். அதுவும் ஒரு நிலைநாட்டப்பட்ட பண்பாட்டு வரையறைக்குள் சொல்லப்பட்டது. அதனால் எதையும் இங்கு ஒப்பிட்டு மதிப்பீடு செய்ய முயலவில்லை.*

*இருப்பினும் அந்த மொழியை அறியாதவர் எப்படிப் புரிந்து கொள்வது? இறையனுபவத்திற்குத் திறந்த மனமுள்ளவர்தான் மற்றொரு மரபின் இறை*

அனுபவ மொழியைப்புரிந்து கொள்ளமுடியும். அதனால் நம்பிக்கைக் கண்ணோடு அணுக வேண்டும். இசை எனக்கு இனிமையாக ஒலிக்கா விட்டாலும், என்னால் அந்த இசையைக் கேட்க முடியும். இருப்பினும் கேட்டபின் என் சுவையில் மாற்றம் தோன்றாது என்று பொருள் அல்ல. அதன் விளைவாக நான் ஜாஸ் இசையைப் பாராட்ட முடியும். அதே சமயம் கர்நாடக இசையையும் ரசிக்கமுடியும்.

கருத்துக் கோட்பாடுகள் ஒரு குறிப்பிட்ட பண்பாட்டுச் சூழலோடு இணைந்துள்ளவை. ஆனால் சின்னங்கள் வளைந்து கொடுக்கும் தன்மை கொண்டவை. இறை அனுபவ மொழி சின்னங்களால், உவமைகளால் உணர்த்துபவை. அவை குறிப்பிட்ட பண்பாடு தாண்டி எங்கும் பொருந்தும் தன்மை கொண்டவை.

***இந்து சமய மொழி:***



இந்து சமயம் என்பது பல்வேறு மரபுகள் கொண்டது. அதனால் இந்து சமய மொழி என்று ஒன்று உண்டு என்று பொதுவாகச் சொல்ல முடியாது. பல்வேறு இந்து மரபுகளும் முன்வைப்பது மீட்புக்கான (விடுதலைக்கான) பாதைகள். எல்லாப் பாதைகளும் எல்லாப் பயணிகளுக்கும் அல்ல. அதனால் ஒரு குறிப்பிட்ட மரபு சார்ந்த சின்னங்களை மட்டும் இங்குக் குறிப்பிடுவோம்.

***சம்சார:***

இந்த உலகம் பொங்கி வழிந்து பாய்கிறது என்பது முதல் அனுபவம் (வேர்ச்சொல் ச்ரு- ஓடுதல்). அதனால் இந்தத் தொடர்ந்து பாய்வதை நான் தொடமுடியாது. மாறிக்கொண்டே இருக்கும் எதையும் நான் நம்ப முடியாது, அத்தகைய வெளித்தோற்றத்தில் என் நம்பிக்கையை வைக்க முடியாது. இவ்வாறு வழிந்து ஓடுவதும் திரும்பிப் பாய்கின்றது.

இந்தச்சொல் பௌத்தத்திற்கும் சமணத்திற்கும் சொந்தம். ஆனால், இந்த அனுபவம் ஏறக்குறைய எங்கும் பொருந்தும் என்று சொல்லலாம். ஒரு பக்கம் எல்லாம் ஒரு தொடர்ச்சியான நகர்வில் உள்ளது, மாறிக்கொண்டே இருக்கிறது. மறுபக்கம், இந்தப் பாய்ச்சலில் ஒரு குறிப்பிட்ட விதிமுறை இருக்கிறது. இதைத்தான் பிரம சூத்திரம் சொல்லுகிறது – தத் து சமன்வயாத்- ஒருங்கிணைப்பது இதன் கடமை.

இறப்பு உண்டு. ஆனால் வாழ்வுக்குத் திரும்புவதும் உண்டு. தனிப்பட்ட ஒருவர்தான் இறக்கிறார். ஆனால் வாழ்வு இறக்கவில்லை. இதை வேதங்கள் சொல்கின்றன – ந ஜீவோ ம்ரியதே - வாழ்வு சாவதில்லை. ஆனால், இந்த வாழ்வு எனதல்ல. நான் அதில் பங்கெடுக்கிறேன். அதனால்தான் வாழ்வுக்குத் திரும்பி வருவதை மட்டும்தான் நான் வைத்திருக்கிறேன். எனது "நான்" என்ற தனித்துவத்தைத் தாண்டிச்சென்றால், இறப்பு என்னை அச்சுறுத்தாது. ஏனெனில் பொங்கி வழிவதெல்லாம் திரும்பிப் பாயும். என்ன இருந்தாலும் ஒன்று மட்டும் உறுதி: இந்தச் சம்சார நதியில் ஏதோ ஒன்று நிலையான, காணக்கூடிய உருவம் இதில் தாண்டிப்போகச் செய்கிறது. எனக்கு நிலையானதாகத் தெரிவதெல்லாம் மாறிக்கொண்டே இருக்கும் நீரோடை. இங்கே இறக்காமல் இருப்பது ஆன்மா மட்டும். இந்த ஆன்மாதான் பிரமன் என்று கண்டுபிடிக்கும் பொழுது, நான் சாகா நிலையில் பங்கெடுக்கிறேன்.

இங்கே சொல்வது "இறப்பும் உயிர்ப்பும்" அல்ல, வெளித் தோற்றமும் உண்மை நிலையும் பற்றியது. அதனால்தான் சங்கரர் சொல்கிறார்: "உண்மையில்

உருமாறிக் கடந்து செல்வது ஈஸ்வரன் - கடவுள் - மட்டுமே, வேறு யாரும் அல்ல." – (சத்யம், ந ஈஸ்வராத் அன்ய சம்சாரி.) இவ்வாறு, எனது "ஈகோவிற்கு" (அகங்காரத்திற்கு) நான் சாகும்பொழுது, வாழ்வின் பாய்ச்சல் தொடர்கிறது என்ற முரண்பாட்டை உணர்கிறேன்.

**மோக்சா:**

இந்த மாறிக்கொண்டிருக்கும் -நிலையற்ற- உலகத்தோடு என்னைக் கட்டி வைத்திருக்கும் அனைத்திலிருந்தும் என்னை விடுவிக்க வேண்டும். அதாவது, இந்த அண்டச் சக்கரத்திலிருந்து என்னை விடுவித்தால் மட்டுமே நான் மீட்பு (சுதந்திரம்) அடைய முடியும்.



உண்மையிலேயே முழுமையான துறவு என்பது பழைய வன்மங்கள், இழந்து விட்டதை எண்ணி ஏங்குதல், துயரம் - இவற்றிலெல்லாம் எந்த ஒரு மதிப்பீடும் கிடையாது. ஆழ்ந்து அலசிப்பார்த்தால் இதனால் இழப்பு ஏதும் இல்லை, மாறாக எனக்கு நான் சுதந்திரம் கொடுக்கிறேன். அப்பொழுதுதான் நான் விடுதலையின் சூரியனை நோக்கிப் பறந்து செல்ல முடியும்.

வெளித்தோற்றம் உண்மையானது அல்ல, அது ஒரு மாயை, அறியாமை, ஏமாற்றும் சாயல். மரபுவழியில் சொல்வது மாறிக்கொண்டிருப்பதிலிருந்து

*நிலையானதைத் தெளிந்து தேர்ந்து கொள்வது. நித்தியம் எது, அநித்தியம் எது என்று பகுத்தறியும் பண்பு வேண்டும். அதுதான் ஞானம். இதற்குப் பல வழிகள் உண்டு. ஒரு வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்தவழியில் நாம் பக்தியின், ஞானத்தின், செயலின் அனுபவத்தை அடைய முடியும். அதே சமயம் அருளின் - பிரசாதத்தின் -தேவையையும் உணர்கிறோம்.*

*பலர் பல்வேறு வகையில் இதைப் பெயரிடலாம். என்னுடைய வாழ்வு முழுதும் அழிந்து போகவில்லை. அது தெய்வீகத்திலிருந்து பிரிந்தும் இருப்பதில்லை. மற்றவர் "உயிர்ப்பு", "சத்தோரி", என்று அழைப்பது "ஜீவன்முக்தி" அடைந்துள்ள நிலைக்கு ஒப்பிடலாம். எனக்கு இராமானுசரிடம் ஈடுபாடு உண்டு, சங்கரனைப் பாராட்டுகிறேன், காஷ்மீர் அபிநவ குப்தாவின் சிந்தனைக்கு நெருக்கமாக இருக்கிறேன். என்னவாக இருந்தாலும் பாதை கடினமானது. அதில் பயணித்துத்தான் ஆக வேண்டும்.*

***கர்மன்:***

*முக்தி அல்லது மீட்பு ஓர் அனுபவம். ஆனால் "விண்ணகம்" மேலே உள்ளது. நானாக அதை அடைய முடியாது. அருள் - அநுக்ரகம்- வேண்டும். அதை நான் ஏற்கலாம் அல்லது மறுக்கலாம். அந்தச் சுதந்திரமும் உண்டு.*



*கர்மன் என்பது செயல். மீட்படையும் வழிக்குச் செயல்பாடு வேண்டும். அது வெளிப்படையான செயல் மட்டும் அல்ல. "எல்லாம் எல்லாவற்றோடும் தொடர்பு கொண்டுள்ளது" (சர்வம் சர்வாத்மகம்). இந்தச் செயல் ஒரு தனிப்பட்ட செயல் அல்ல. நாம் எல்லோரும் இணைக்கப் பட்டுள்ளோம். அதனால் ஒவ்வொன்றும் மற்றதில் தாக்கம் கொடுக்கிறது. தனிப்பட்ட ஒருவர் தனது செயல்களுக்குப் பொறுப்பாளி. ஏனெனில் அவர் உலகத்திலுள்ள மற்ற அனைத்தோடும் இணைக்கப்பட்டுள்ளார். உலகம் ஒரு கர்மா வலையில் அண்டத்தில் உள்ளவற்றை இணைக்கிறது.*

*மனிதனின் மகத்துவம் சுதந்திரமாகச் செயல்படவும் உலகத்தில் உள்ள மற்றவையில் தாக்கம் கொடுப்பதில் அடங்கி உள்ளது. மனிதன் மட்டும்தான் உலகத்தை மாற்றி அமைக்க முடியும் - இறைவன் துணையோடு - அதை அழிக்கவும் முடியும். பிரதாயச்சித்த கர்மன் என்று உண்டு. அது சரி செய்ய, மன்னிக்க, சமப்படுத்த உதவும். நாம் சமூகத்தில் மேடு பள்ளத்தைச் சமப்படுத்தி, உடன் வாழ்வோரை மன்னித்து வாழாவிட்டால் உலகில் அமைதி நிலவ வாய்ப்பு இல்லை.*

***சுருங்கச் சொன்னால்:***

*இந்து சமயக் கோட்பாட்டின்படி, வாழ்வின் அனுபவத்தை நாம் பார்க்கும் மூன்று கண்ணாடி வில்லைக்குள் அடக்கி விடலாம்: பல்வேறு உயிர் இனங்கள் வாழும் உலகம் போல் உள்ளதனைத்தும் தெரிகிறது; அதை ஒரு தெய்வீக அடிப்படை மெய்ம்மை தாங்கிப் பிடிக்கிறது. இந்து மொழி சம நிலையாக இருப்பதற்குரிய ஆதார மையம் தெய்வீகம்.*

***பௌத்த மொழி:***

*மீண்டும் ஒரு முரண்பாடு. பௌத்த மொழி ஒரு மொழி அல்ல, அது மௌனம். பௌத்தம் பேச முடியாததைப் பேச மறுக்கிறது. இருப்பினும், அவர்கள் வரலாற்றின் 26 நூற்றாண்டுகளாக பௌத்தர்கள் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். பௌத்த மொழி சந்திரனைச் சுட்டிக்காட்டும் விரல்போல ஒரு குறியீட்டு மொழியாக இருக்கிறது. இருப்பினும் விரல் சுட்டிக்காட்டும் திசையைப் பார்த்தால் மட்டும் போதாது. ஏனெனில் அந்தச் சந்திரனும் சுழன்று கொண்டுதான் இருக்கிறது.*



***துக்கம்:***

*உள்ளது எல்லாம் அதிருப்தி அளிக்கிறது. இதுதான் மேன்மையான உண்மை. பொதுவாக இதைத் துயரம் அல்லது வலி என்று மொழி பெயர்ப்பதுண்டு. நாம் சரியான இடத்தில் இல்லை. அதுதான் அந்தத் துயரத்தின் காரணம். நமது நிலையானதை இழந்துவிட்டோம். இதுவும் கொஞ்சம் முரண்பாடுதான். ஏனெனில் நிரந்தரம் என்று ஏதும் இல்லை. பௌத்தம் அடிப்படை அனுபவத்தைப் பதிவு செய்கிறது. அதனால் இது துயரம் இல்லை. அது அதிருப்தி.*

*யார்தான் இதை அனுபவிக்கவில்லை? எப்படி இதைத் தவிர்ப்பது? அது மத்திய வழி. இது இந்த வலியை மறுப்பதில் அல்ல. துயரம் ஒரு பொருள் என்று ஏற்றுக் கொள்வதில் இல்லை. இந்த அதிருப்திக்குக் காரணம் தாகம் (தன்ஹா), ஆசை, பேராவல்.*

*இந்த ஆவலை அழிக்கவேண்டும். வாழ்வதா சாவதா என்று அல்ல. ஆசையை அறவே ஒழிக்க முயலாமலும், இதை வளர்க்காமலும் நடுநிலைப் பாதையைப் பின்பற்றுவது. தியானம் இன்றி இந்தப் பாதையில் பயணிக்க முடியாது. தானாகவே எதுவும் இருப்பதில்லை. எல்லாம் மற்றொன்றைச் சார்ந்துதான் இருக்கிறது (பிரதீத்ய சமுத்பாத). இயல் ஆற்றல் கொண்ட நிலை.*

***எட்டுவழிப் பாதை:***

*1. நேரான, முழுமையான, சரியான, போதுமான கண்ணோட்டம்.*

*2. சரியான சிந்தனை, தூய எண்ணம்; முழுமையான பகிர்வு.*

*3. சரியான வாக்கு, தூய சொல், நேர்மையான உரையாடல்.*

*4. சரியான செயல், இணக்கமான செயல்பாடு, நேர்மையான ஒழுக்கம்.*

*5. நேர்மையான வாழ்வுமுறை, தூய வழியில் வாழ்வமைத்தல். இணக்கமான வாழ்வு.*

*6. சரியான முயற்சி, நேர்மையான செயல்பாடு.*

*7. தூய மனச்சான்று, சரியான தன்னறிவு, சிதறலற்ற நினைவுத்திறன்.*

*8. சரியான தியானம், தூய மகிழ்ச்சி, ஆழ்ந்த சிந்தனை.*

*இது தூய நம்பிக்கையின் பாதை. இது நிர்வாணத்திற்கு இட்டுச் செல்கிறது.*

***நிபான:***

*யாரெல்லாம் சாவிற்கு அஞ்சுகிறார்களோ அவர்கள் தங்கள் அகங்காரத்தோடு ஈடுபட்டுள்ளார்கள். சூனியத்தின் (ஒன்றுமில்லாமையின்) அனுபவம் எல்லாவற்றின் குறிக்கோள். எல்லாவற்றையும் துறந்த பின், எதுவும் தங்கியிருப்பதில்லை.*

***சுருக்கமாக:***

*பௌத்த மரபின்படி வாழ்க்கை அனுபவத்தை மூன்று பார்வையில் சுருக்கி விடலாம்: உள்ளடங்கிய அதிருப்தி, மீட்புக்காக ஆர்வத்தோடு செயல்படுதல்,*

*இருட்டில் குதிக்கும் நம்பிக்கை. இங்கே பாதையே பயணத்தின் இலக்கு ஆகிறது. அங்கிருந்து புத்தரின் ஒளிக்கதிர் பரப்பும் அமைதி பிறக்கிறது.*

***கிறித்தவ மொழி:***

*மேற்கூறிய மொழிகள் பிறரை ஒதுக்கி வைக்கும் உண்மையாக முன்வைக்கவில்லை, பறைசாற்றவில்லை. மாறாக, கிறித்தவச் சொல்லாடல்கள் - அதுவும் கருத்துக் கோட்பாடுகளை உருவாக்கியவர்கள் பார்வையில் - அது கூறுவதுதான் உண்மை என்ற எண்ணப்பதிவு எழுகிறது. இறை அனுபவத்திற்கு விளக்கம் கொடுப்பது வேறு. இறை அனுபவம் கொண்டவர் நம்பிக்கை வேறு. நம்பிக்கை என்பது உள்ளத்தைத் தொடும் ஓர் அனுபவம். அதனால் நம்பிக்கையை விளக்கி உரை எழுத முடியாது. அதை மொழி பெயர்க்கத்தான் முடியும். உள்ளத்தில் நிகழ்வதை யாரும் தீர்ப்பிட முடியாது. அதனால் இந்தப் புரிதலோடு தொடங்குவோம். கிறித்தவ இறை அனுபவ சின்னம் இயேசு கிறிஸ்துவில் மையம் கொண்டது. அது தொடர்பான அனுபவத்தைக் கூறும் மொழியை மூன்று சின்னங்களில் அடையாளம் காட்டலாம்.*

***கடவுள் மனித உருவெடுத்தல் (இன்கார்நேசன்):***

*உள்ளதனைத்தின் ஊற்றும் தொடக்கமும் அண்டத்தைப் படைக்கிறது. அதை வரலாற்றில் வெளிக்காட்டுகிறது, அது ஒரு மனிதனாய் உருவெடுக்கிறது. அதை வரலாறு "இரண்டாம் ஆதாம்" என அழைக்கிறது. அவருடைய பணி தெய்வீகச் செயலைக் காலத்திலும் நிலத்திலும் நிறைவு செய்வது. அதன் வழியாக உள்ளதின் துணிவான செயல்களின் இலக்கை முழுமையடையச் செய்கிறது. இதைச் சிலர் மீட்பு என்றும், தெய்வமயமாக்குதல், மகிமைப்படுத்துதல், என்றும் பல பெயர்களோடு அழைப்பர்.*

*இத்தகைய உள்ளதின் துணிவுச் செயலை, ஒரு "வார்த்தையில்", 2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பெண்ணின் மகனாகப் பிறந்த இயேசுவில் காணத் தொடங்கினார்கள். காலத்திற்கு அப்பாற்பட்ட அமைதியான மறைபொருள் தன்னை வெளிப்படுத்துகிறது என்பதை ஏற்றுக் கொண்டாலன்றி, மரியாளின் மகனான இயேசுவில் கடவுள் உருவெடுத்தார் என நம்ப முடியாது. இந்த நம்பிக்கை பகுத்தறிவின் அடிப்படையில் எழுந்தது என்று பொருள் அல்ல. அது நம்பிக்கைக்கு இடையீட்டாளராகச் செயல்புரிகிறது.*

*கடவுள் மனித உருவெடுத்ததால் மனிதனைத் தெய்வீகமாக்குகிறது, கடவுளையும் மனிதத்தில் பங்கெடுக்க வைக்கிறது. இந்த இணைப்பில்தான் கடவுள் மூவராய் இருப்பதைச் சொல்ல முடிகிறது. அதனால்தான் மகனைப் பார்ப்பவர் தந்தையைப் பார்க்க முடிகிறது. தந்தையைக் கிறிஸ்துவில்*

*பார்க்காதவர், பசியில் வாடுவோரில், ஆடையின்றி சாலையில் கிடப்போரில் கிறிஸ்துவைப் பார்க்க முடியாது.*

***சிலுவை:***

*வாழ்க்கையின் புதிர் விளக்க முடியாத நிலையில் உள்ளது. ஆனால் அதற்கு ஒரு சின்னம் உண்டு: அதுதான் இயேசு கிறிஸ்து. அவரில் புனிதத்தின் முழுமை மட்டுமல்ல, தீமையும் அடங்கி உள்ளது. தீமை புரிதலுக்கு அப்பாற்பட்டது. நன்மையும் அப்படித்தான். தீமை தெளிவற்று மழுங்கலாக இருக்கிறது. அதனால் அதைப்புரிந்து கொள்வது கடினம். வலி அருவருப்பை உண்டுபண்ணுகிறது, அதே சமயம் அது தூய்மையாக்குகிறது. மகிழ்ச்சி மேன்மைப்படுத்துகிறது, அதே சமயம் அது இழிவுக்கும் இட்டுச்செல்கிறது. உள்ளதெல்லாம் புரிதலுக்கு அப்பாற்பட்டது, இருப்பினும் அது நம்முன்னே இருக்கிறது.*



*கிறித்தவ மொழி சிலுவையின் அனுபவத்தை- நன்மை-தீமைபற்றி, மகிழ்வு-துயரம் பற்றி, பாவத்தையும் - மனமாற்றத்தையும் பற்றி - பேசாமல் தப்பிக்க முடியாது. சிலுவையின் அனுபவம் இறப்பு-உயிர்ப்பு, வலியும் நம்பிக்கையும் பற்றியது.*

*கடவுள் மனிதனானது ஒரு மறைபொருள், அண்டம் சார்ந்தது. ஆனால் சிலுவையின் அனுபவம் அதைச் சமப்படுத்துகிறது, அதற்குச் சவால் விடுக்கிறது. இந்த அனுபவம் எல்லோரையும் மனித நிலையின் வலிமையற்ற தன்மையை உணர வைக்கிறது. கையை உயர்த்தி உதவி கேட்டாலும் பதில் ஏதும் மேலிருந்து வருவதில்லை. இயேசுவும் சிலுவையில் கதறியதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ''என் இறைவா! ஏன் என்னைக் கைவிட்டாய்.'' அவரது கடவுள் மௌனம் காக்கின்றார்.*

*யூதர் அல்லாத ஒரு படைத்தளபதி, ''இவர் உண்மையிலேயே கடவுளின் மகன்'' என்று கூறுகின்றான். அப்படியானால் 'கிறித்தவர்கள்' மட்டும் இயேசு கிறிஸ்துவைக் கண்டுபிடிக்க வில்லை.*

***உயிர்ப்பு:***

*உயிர்ப்பின் அனுபவத்தை விளக்குவது எளிதல்ல. இயேசுவின் இறப்பிற்குப்பின் அவர் கல்லறையைத் தேடி வந்த பெண்களுக்கு இறைத் தூதர் கூறியது: ''அவர் உயிர்த்து விட்டார். அவர் இங்கு இல்லை.'' அவரை வெளியே எங்கும் தேட வேண்டியதில்லை. அவர் உங்களுள், உங்கள் மத்தியில் வாழ்கிறார். அவரைப்*

*பார்த்தவர்கள், அவரோடு உரையாடியவர்கள் சான்று பகர்கின்றனர். இதை மூன்று குறிப்பில் சுட்டிக்காட்டலாம்.*

***ஒன்று:***

*உயிர்த்த வாழ்வு தனிப்பட்டவர் வாழ்வு அல்ல. தொடக்கத்திலிருந்தே இருக்கும் வாழ்வில் பங்கு கொள்வது. அதாவது, எனது "நான்" என்ற அகங்காரத்தை இழந்து வாழ்வு என்ற முழுமையில் பங்குகொள்வது. தன்னை இழந்தால்தான் என்றும் நிலைத்திருக்கும் வாழ்வில் பங்கு கொள்ள முடியும். இது ஒரு மாயையோ அல்லது இரண்டாம் வாழ்வோ அல்ல. மறு உடலில் நுழைந்து தொடர்ந்து வாழ்வதல்ல. உயிர்த்த வாழ்வு, தெளிவான விழிப்புணர்வு பெற்ற வாழ்வு, நிறைவுபெற்ற வாழ்வு என்றும் அழைக்கலாம்.*

***இரண்டு:***

*உயிர்த்த வாழ்வு முழு நிறைவு பெற்ற வாழ்வு என்றும் சொல்ல முடியாது. தெய்வீக வாழ்வில் பங்கெடுப்பதால் மனிதனும் கடவுள் என்று பொருள் அல்ல. உயிர்த்தவாழ்வு பெற்றவர்கள் தாங்கள் பாவிகள், மன்னிப்புப் பெற்றவர்கள் என்று அறிவர். உயிர்த்த வாழ்வும் மனித வாழ்வுதான்.*

***மூன்று:***

*உயிர்த்த வாழ்வு அனுபவம் சாவின் அச்சத்தை நீக்குகிறது. இந்த அனுபவம் இந்த உலகில் இங்கேயே நிகழ்கிறது – காலத்தில் காலம் கடந்த நிலையை அனுபவிப்பது. இது தூய ஆவியின் செயல். உயிர்ப்பு என்பது மீண்டும் மீண்டும் புதுப்பிக்கும் செயல். ஒவ்வொரு நாளும் நாம் இறந்து புதுப்பிக்கப்படுகிறோம்.*

***இறுதியாக:***

*ஆழ்ந்த இறை அனுபவம் ஒருங்கிணைந்த மனித அனுபவம் என்று தொடங்கினோம். அதில் உடலும் பொருளும் ஆவியும் இணைந்துள்ளன. மனிதன் தனிப்பட்டவன் அல்ல. அவனது ஒருங்கிணைப்பு உடலோடும் தெய்வீகத்தோடும் உட்கொண்டது. மனிதன் ஒரு வெறும் கருத்துக்கோட்பாடு அல்ல. கடவுளும் அண்டமும் இன்றி மனிதன் இல்லை. உலகம் இன்றி கடவுள் இல்லை. கடவுளும் மனிதனும் இன்றி உலகம் இல்லை. இவை மூன்றையும் தனிமைப்படுத்திச் சிந்திக்கலாம். ஆனால் அவை உண்மையில் ஒன்றிணைந்து உள்ளவை. இந்தக் கண்ணோட்டத்தின் பின்னணியில்தான் ஆழ்ந்த இறை அனுபவத்தைப்பற்றிப் பேசமுடியும்.*

*(துணை நின்ற நூல்: ரெய்மோன் பணிக்கர் எழுதிய "மிஸ்டிஸிஸம்: புல்நெஸ் ஆப் லைப்." மோதிலால், 2019.)*

# தமிழ்ச் சித்தரியலும் கிறிஸ்தியலும் - II

**— பேரா. முனைவர் மோ. மைக்கேல் பாரடே**
**தமிழ்த்துறை, மெட்ராஸ் கிறிஸ்தவ கல்லூரி, சென்னை**



*தமிழ்ச் சித்தர்களின் இலக்கியங்களில் வெளிப்படும் இறைக் கோட்பாடுகளையும் பிற சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனைகளையும், கிறித்தவ நெறியின் மூல நூலான விவிலியத்தின் கோட்பாடுகளோடும் கொள்கைகளோடும் ஒப்பிட்டு ஆயும் இந்த கட்டுரைத் தொடரின் முதற்பகுதியில், கடந்த இதழில், சில பொதுவான அறிமுகச் செய்திகள் வழங்கப்பட்டன. தொடரின் தலைப்பில் 'கிறிஸ்தியல்'' எனக் குறிப்பிடப்பட்டிருந்தாலும், கிறிஸ்து நெறியின் மூலவரான இயேசு பெருமானின் போதனைகட்கு ஆதாரமாகவும் அடிப்படையாகவும் அமைந்த விவிலியக் (Bible) கோட்பாடுகள் அனைத்துமே சித்தர்தம் இலக்கியங்களோடு இங்கு ஒப்பிடப்படுகின்றன என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ஏற்கனவே, சித்தர் இலக்கியங்களுக்கும் கிறித்தவ மறையான விவிலியத்துக்கும் உள்ள பொதுவான ஒற்றுமைக் கூறுகளாகிய உருவ வணக்க மறுப்பு, சாதி மறுப்பு, ஆகம வேத சாத்திர மறுப்பு, பிறவிச் சுழற்சி மறுப்பு, குரு வழியும் குருவாகவும் இறைவனை உணர்தல், பொய்க் குருக்களையும் பொய்ச் சமயங்களையும் கடிந்து இனம் காட்டல், அன்பு நெறியே இறைநெறி என உணர்தல் போன்றன சுட்டப்பட்டன.*

*இனி, கொள்கை ரீதியிலும் கருத்தோட்டங்களாகவும் கவிநயத்தோடும் சித்தர் இலக்கியங்கள் பேசும் பல செய்திகள், விவிலியக் கோட்பாடுகளை எதிரொலிப்பதைத் தனித்தனிச் செய்திகளாக அல்லது தலைப்புகளாகக் கண்டுணரத் தலைப்படுவோம்.*

*இந்தக் கருத்து வரிசையில் முதலாவதாக நான் எடுத்துக் கொள்ள விரும்புகிற கருப்பொருள் யாதெனில், மனித உடலின் தோற்றமும் சிறுமையும் பெருமையும் சார்ந்த செய்திகளாகும். யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை என்றெல்லாம் சமய நூல்கள் பேசுவதை நாம் படித்திருக்கிறோம். ஆனால், மனித உடல் எப்படித் தோன்றியது அல்லது உருவாக்கம் பெற்றது, இவ்வுடலின் சிறுமை எது? பெருமை எது? இதனைப் பேண வேண்டிய பெற்றிகள் எவை என்பனவற்றையெல்லாம் சித்தர் இலக்கியங்களும் விவிலியமும் பேசுகின்ற முறை நமக்குச் சுவை பயப்பதாகவும் அதே நேரம் ஒன்றுபட்டு ஒலிப்பதாகவும்*

*இருப்பது மிக வியப்பூட்டுவதாகவே அமைகிறது. சில சிறு சிறு தலைப்புகளில் அகச்சான்றுகளோடு அச்செய்திகளை இச்சிறு கட்டுரையில் காண்போம்.*

***மனித உடலின் மகத்துவம் அறியாமை:***

*தமிழ்ச் சித்தர் பாடல்கள் பெரும்பாலும் அதிகம் கற்ற பண்டிதர்கள் நாவில் தவழ்வதினும், கல்லாப் பாமரர்கள் நாவிலேயே அதிகம் ஊடாடுவது தமிழ் மரபு எனலாம். அந்த அளவுக்கு "கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும்" அமுத வரிகளாக அவை திகழ்கின்றன. அப்படிப் பலராலும் (பாமரராலும்) அடிக்கடி உச்சரிக்கப்படுகிற ஒரு பாடல்*

*''நந்தவனத்திலோர் ஆண்டி - அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி*
*கொண்டு வந்தான் ஒரு தோண்டி - அதைக்*
*கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி''*

*என்பது. இந்தப்பாடலை இயற்றியவர் கடுவெளிச்சித்தர் என்பதுகூட பலரும் அறியாததெனினும் அனைவரும் இப்பாடலையும் அதன் உட்கருத்தையும் அறிவர். மனிதனாகிய ஆண்டி, இறைவனாகிய குயவனிடம் வேண்டி,*



*பத்துமாதம் கருத்தாங்கி, ஓர் மனித உடலைக் குழந்தை வடிவில் பெறுகிறான். ஆனால் பெற்ற உடலைச் சரியாகப் பேணிக் காக்காது, கண்டபடி அவ்வுடலைப் பயன்படுத்தி, அதைக் கெடுத்துச் சிதைத்து விடுகிறான் என்பது பாடற்கருத்தெனப் பாமரரும் அறிவர். இங்கே கவனிக்க வேண்டியது, மனித உடல் ஒரு தோண்டி அல்லது மட்குடம், மண் பாத்திரமாக உருவகிக்கப்படுவதாகும். இவ்வாறு உடலை மண்ணினால் செய்யப்பட்ட ஒரு*

*பாண்டமாகக் குறிப்பது விவிலியத்தின் முதல் நூலிலும், பிறநூற்களிலும் நாம் காண்கின்ற ஒன்றாகும்.*

***இறைவன் உருவாக்கிய மட்குடம்:***

*மனித உடலின் உருவாக்கத்தைப் பற்றி மிக நயமாகப் பாடிய சித்தர் பாம்பாட்டிச் சித்தர். அவர் இரு பாடல்களில் மிக நுட்பமான வேறுபாடுகளைப் புலப்படுத்தி, தம் சித்திரிப்பைச் செப்புகிறார். ஒரு பாடலில் கடவுளைக் (கடுவெளிச்சித்தர் போலவே) குயவனாக்கி, அவன் மனித உடலை மண்ணினால் உருண்டையாகப் பிசைந்து ஒரு மட்பாண்டம் போல் உருவாக்குவதாகப் பாடுகிறார்.*

*"ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே*
*உதிரப் புனலினிலே உண்டை சேர்த்தே*
*வாய்த்த குயவனார் அவர் பண்ணும் பாண்டம்*
*வறையோட்டுக்கும் ஆகாதென்று ஆடுபாம்பே"*

*என்பது அப்பாடல்.*



*விவிலியத்தின் முதல் நூலிலும், "ஆண்டவராகிய கடவுள் நிலத்தின் மண்ணினால் மனிதனை உருவாக்கி, அவன் நாசிகளில் உயிர் மூச்சை ஊத, மனிதன் உயிர் உள்ளவன் ஆனான்" (தொடக்க நூல் 2:7) என்று குறிப்பிட்டுள்ளது.*

*பாம்பாட்டிச் சித்தர் தம் இன்னொரு பாடலில் ஆண், பெண் உறவால் மனித உயிர் தோன்றுவதைப் பாடும்போதும், மனித உடலை மட்பாண்டமாகவே உருவகிப்பது சுவை பயக்கிறது.*

*"இருவர் மண் சேர்த்திட ஒருவர் பண்ண*
*ஈரைந்து மாதமாய் வைத்த சூளை*
*அருமையாய் இருப்பினும் அந்தச்சூளை*
*அரைக்காசுக்கு ஆகாதென்று ஆடு பாம்பே"*

*என்பது அப்பாடல்.*

*வேறொரு பாடலில், இறைவன் மனித உடலை மண்ணால் உருவாக்கி, அதற்குள் சீவன் (உயிர்) ஏற்றி, நம்மை இயக்குவதாகவும் அவன் இயக்கத்தை நிறுத்தும்போது மனித உடல் உயிரற்ற சடலமாய் மண்ணில் விழுந்து விடுவதாகவும் பாடுவது, முற்சுட்டப்பட்ட விவிலிய வாசகத்தின் மறுபதிப்பு போலவே ஒலிக்கிறது.*

*"மரப்பாவை போலவொரு மண்ணுரு செய்து*
*வளமான சீவன் என்னும் சூத்திரம் மாட்டித்*
*திரைக்குள் இருந்தசைப்போன் தீர்ந்தபொழுதே*
*தேகம் விழும் என்று தெளிந்து ஆடு பாம்பே!"*

*விவிலியத்தில் இன்னோரிடத்தில் உயிரினங்களைப் பற்றி பேசும்போது, "நீர் அவற்றின் மூச்சை நிறுத்திவிட்டால், அவை மாண்டு மறுபடியும் புழுதிக்கே திரும்பும். உமது ஆவியை நீர் அனுப்ப, அவை படைக்கப் பெறுகின்றன" எனக் கூறப்பட்டுள்ளமை (திருப்பாடல் 104:29, 30) இங்கு நினைவு கூரத்தக்கது. விவிலியத்தின் பிற இடங்களிலும் மனித உடல் மட்பாண்டமாகக் குறிக்கப்படுவது இங்கு ஒப்பு நோக்கப்படத்தக்கது. புனித பவுலடியார் "இறைப் பேரருளாகிய செல்வத்தை மட்பாண்டங்களாகிய நாங்கள் கொண்டிருக்கிறோம்" (II கொரிந்தியர் 4:7) என்று எழுதுகிறார். "உங்கள் உடலாகிய (மட்) பாண்டம்" என்று இன்னோரிடத்திலும் (ஐ தெசலோனிக்கர் 4:5) குறிப்பிடப்பட்டுள்ளது.*

***மனித உடலின் நிலையாமையும் நீர்மையும்:***

*இந்த மனித உடலின் நிலையாமை பற்றி பட்டினத்தார், பாம்பாட்டியார், கடுவெளியார் உள்ளிட்ட சித்தர்கள் வித்தாரமாகப் பாடியிருப்பதைப் பலரும் அறிவோம். குறிப்பாக பட்டினத்தாரது "ஊற்றைச் சடலம் உப்பிருந்த பாண்டம்" முதலிய பாடல்கள் பலராலும் பேசப்படுபவை. கடுவெளிச் சித்தரின் ஒரு பாடல், மிக நயமாக யாக்கை நிலையாமையைச் சுட்டி, அதன் வழி அறம் போதிப்பதைக் காணலாம்.*

*"நீர் மேல்குமிழியிக் காயம் - இது*
*நில்லாது போய்விடும் நீயறி மாயம்*
*பார் மீதில் மெத்தவும் நேயம் - சற்றும்*
*பற்றா திருந்திடப் பண்ணும் உபாயம்"*

*என்கிறார். இப்படி மனித உடலின் நிலையாமையைப் பாடுகிற சித்தர்கள், அதே நேரத்தில் மனித உடலின் மாண்பையும், அதன் மறுபக்கமாகப் பாடுவதுதான்*

*வியப்பளிக்கிறது. உடலைப் பழித்த சித்தர்கள்தான், உடலைக் கல்போல் நிறுத்த ''காயகற்பம்'' கண்டுபிடித்தனர். காயசித்தர்கள் என்போர் தனிப்பிரிவாகவே அமைந்து, இந்த காயத்தை (உடலை) நன்கு பேணி, அதன் வழி நல்லறங்கள் பல ஆற்ற வேண்டும் என்றும் போதித்தனர். தமிழ்ச் சித்தர் இயக்கத்தின் முன்னோடியாகிய திருமூலர், மனித உடலின் மாண்புணர்த்திப் பாடிய பாடல்களை அனைவரும் அறிவர்.*

*''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே''*

*இன்னொரு பாடலில், இதற்கும் ஒரு படிமேல் சென்று, நம் உடம்புக்குள்தான் இறைவனே கோயில் கொண்டிருக்கிறான் என்று நாம் உணர வேண்டும் என்று வலியுறுத்துகிறார்.*

*''உடம்பினை முன்னம் இழுக்கு என்று இருந்தேன்*
*உடம்பினுக்குள்ளே உறு பொருள் கண்டேன்*
*உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று*
*உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே''*

*இப்படி, தெள்ளத்தெளிவாக மனித உடலை இறைவனின் ஆலயம் என்று கூறிய திருமூலர், பலரும் நன்கறிந்த இன்னொரு பாடலில்,*

*''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்''*

*என்று உள்ளம், உடல் இரண்டையுமே இறைவனின் ஆலயம் என்று குறிக்கிறார். வழக்கமாக மனித உள்ளத்தைக் கடவுளின் கோயில் என்று அனைவரும் அழைப்பதுண்டு. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும் கடவுளை ''உள்ளத்திற் காண்பாய் எனில் கோயில் உள்ளேயும் காண்பாயடி'' என்று பாடியுள்ளார். ஆனால், மனித உடலைக் கோயில் என்று சுட்டுவதுதான் புதுமையானது. திருமூலருக்கு முன்பாக, இந்தக் கருத்தை வேறெவரும் கூறியுள்ளனரா? வேறெந்த நூலிலும் காணக் கிடைக்கிறதா என்று*



*எண்ணிப் பார்க்கும்போது, விவிலியத்தின் புதிய ஏற்பாட்டுப் பகுதிகள் முன்வருகின்றன.*

*விவிலியம் பேசும் மனித உடலின் நிலையாமையும் நீர்மையும்: விவிலிய மறையிலும் மனித உடலின் அழியும் தன்மை பற்றிப் பல இடங்களில் பேசப்படுகிறது. ஆனால், அழியப் போகும் உடலில் அழிவில்லாத ஆன்மா வைக்கப்பட்டிருப்பதால், இறைவன் அருளிய கொடையாகிய இவ்வுடலை நன்கு பேணிக் காக்க வேண்டும் என அறிவுறுத்தப்படுகிறது. ''வயிற்றுக்கென்றே உணவு, உணவுக்கென்றே வயிறு. இவை இரண்டையுமே கடவுள் அழித்து விடுவார். உடல் பரத்தைமைக்கு அல்ல, ஆண்டவருக்கே உரியது. உங்கள் உடல்கள் கிறிஸ்துவின் உறுப்புகள் என்று தெரியாதா'' (I கொரிந்தியர் 6:13, 15) என்ற விவிலிய வாசகங்கள் உடலைத் தூய்மையாகப் பேண வேண்டிய இன்றியமையாமையைத் தெளிவுறுத்துகின்றன. ஆனால், இதற்கும் மேலே ஒருபடி போய், புனித பவுலடியாரும் திருமூலரைப் போலவே, மனித உடல் இறைவனின் ஆலயம் என்ற கருத்தைத் தம் திருமுகங்களில் இரு இடங்களில் வலியுறுத்துகிறார்.*



*''உங்கள் உடல் நீங்கள் கடவுளிடமிருந்து பெற்றுக் கொண்ட தூய ஆவி தங்கும் கோயில் என்று தெரியாதா?'' (I கொரிந்தியர் 6:19).*

*''நீங்கள் கடவுளுடைய கோவில் என்றும் கடவுளின் ஆவியார் உங்களில் குடியிருக்கிறார் என்றும் உங்களுக்குத் தெரியாதா? ஒருவர் கடவுளின் கோவிலை அழித்தால் கடவுள் அவரை அழித்துவிடுவார். ஏனெனில், கடவுளின் கோயில் தூயது. நீங்களே அக்கோவில்'' (I கொரிந்தியர் 3:16, 17).*

*இவ்வாறாக, சித்தர் இலக்கியங்களும் விவிலிய மறைநூலும் ஒத்திசைக்கும் பல்வேறு சத்தியத் தத்துவ முத்துகளைத் தொடர்ந்து இவ்வாய்வில் அறிந்து பயனுறுவோம்.*

*...தொடரும்*

# "மாற்றம் என்பது மாறா விதியா?"



**முனைவர் சிவ. இளங்கோ,**

*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*

*மனித வர்க்கம், பரிணாம வளர்ச்சி எனும் அறிவியலை அடிப்படையாகக் கொண்டது. அதன் சமூகப் பரிணாமம் என்பது இனக்குழுக்கள், பேரரசு, சர்வாதிகாரம், மக்களாட்சி ஆகிய வளர்ச்சி நிலைகளில் இயங்கிக் கொண்டு வருகிறது. விலங்கினங்களிலும் சமூக வாழ்க்கை முறைகள் உண்டு. அவை இன்றளவும் மாறாமல் நீடித்து வருகின்றன. ஆனால் மனித இனத்தின் சமூக வாழ்க்கை முறைகள் காலந்தோறும் மாறிக் கொண்டே வருகின்றன. "மாற்றம் ஒன்றே மாறாதது" என்ற சொற்றொடர் இதற்குத்தான் பொருந்தும். மனித இனத்தின் அதிக வளர்ச்சியினால், விலங்குகளின் வாழ்விடங்கள் குறைவு பட்டாலும், அவற்றின் சமூக வாழ்க்கை முறைகள் பெரிதாக மாறிவிடவில்லை. மாறாக அங்கு மாற்றங்கள் 'திணிக்கப்பட்ட' ஒன்றாக மாறிப் போயிருக்கின்றன.*

*இந்த 'திணிக்கப்பட்ட' மாற்றங்கள் மனித சமூக வாழ்க்கையிலும் நிறையவே ஊடுருவி இருக்கின்றன. இனக்குழுக்கள் காலத்தில் தலைவன் எவ்வளவு முக்கியமோ அதே அளவுக்குச் சண்டைகளும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருந்தன. பெண்களையும், ஆடு, மாடுகளையும் கவர்தலே இனக்குழுக்களின் சண்டைக்கு முதல் காரணமாக இருந்திருக்கிறது. இதற்காக வரலாற்றுக் காலத்திற்கு முந்தைய கற்கால மனிதர்கள் கொடூரமாகச் சண்டையிட்டுக் கொண்டதை, ஜெர்மனியின் 'தால்ஹீம் மரணக் குழி'களில் கிடைத்துள்ள கற்கால மனிதர்களின் காயமடைந்த எலும்புக்கூடுகள் நிரூபிக்கின்றன. சூடான் நாட்டில், 'ஜிபல் சஹாபா' எனும் பகுதியில், 13,400 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த இனக்குழுச் சண்டைகளில் காயமடைந்த எலும்புக்கூடுகள் கிடைத்துள்ளன. பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக கிழக்கு ஆப்பிரிக்காவில் 'நடாரக்' என்னும் பெருங்குளப் பகுதியில் நடந்த கொடூர வன்முறைச் சம்பவங்கள் நிறைந்த சண்டையும் வரலாற்றிற்குச் சான்றுகளை அளித்திருக்கிறது.*

*பேரரசு நிலவிய காலங்களில் தற்காப்புக்காக மட்டுமே போர்கள் நிகழ்ந்திருந்தால், பிற சமூகத் திணிப்புகள் இருந்திருக்காது. உயர் தகுதி,*



*உடைமைகளைக் கைப்பற்றல் ஆகியவற்றிற்காக, மெசபடோமியாவில், சுமேரியர்களும், எலாமைட்களும் (தற்போதைய ஈரானில் வாழ்ந்தவர்கள்) இன்றைக்கு 4700 ஆண்டுகளுக்கு முன் போரிட்டுக் கொண்டதாக வரலாறு கூறுகிறது. இக்காரணங்களுக்காக அன்றி 'மாற்ற'த்திற்காகப் போராடியது தான் உலகத்தின் முதல் சமயப் போர். 'தேவன்' என்ற கருத்தியல், அது 'உண்மையற்றதாக' இருந்தாலும், மக்களை ஈர்த்தது. அதிகார மையம் தன்னிடமிருந்து பிரித்துத் தரப்படுவதைத் தொடக்கக் காலப் பேரரசு மன்னர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இயற்கையின் சீற்றத்தைக் கண்டு அஞ்சிய சில மன்னர்களால் 'தேவன்'களுக்கும் கோயில்கள் கிடைத்தன. அதிகாரப் பகிர்வு, 'இல்லாத தேவன்' என்ற ஒன்றிற்கு மாற்றப்பட்டதால், தேவன் கருத்தியலை ஏற்பதன் மூலமாக அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொள்ளும் நிலைக்கு மன்னர்கள் தள்ளப்பட்டனர். இந்நிலைக்குக் காரணமாக இருந்த இடைத்தரகர்களின் அதிகார ஆட்டம் சொல்லி முடியாது. மதகுருக்கள் என்னும் இடைத்தரகர்களுக்குக் கட்டுப்பட்ட மன்னர்களால், உலகத்தில் மதம் இல்லாத அரசியல் என்பது அருங்காட்சியகத்தில் தேட வேண்டிய பொருளாகி விட்டது.*

*மன்னர் ஆட்சிக் காலம் முடிந்து மக்களாட்சிக் காலம் தொடங்கியது. பிரான்சில் தொடங்கிய அரசியல் புரட்சியும் (பிரெஞ்சுப் புரட்சி - கி.பி. 1789), பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஜெர்மனியில் தொடங்கிய தத்துவப் புரட்சியும் (மார்க்சியம்), அதே காலத்தில் இங்கிலாந்தில் தொடங்கிய தொழிற்புரட்சியும் உலக நாடுகளில் மறுமலர்ச்சிச் சிந்தனைகள் மலர வைத்தன. இதனுடைய நீட்சி, பல உலக நாடுகளை மக்களாட்சி நாடுகளாக மாற்றியது. மாறுதலை நோக்கிய இந்தப் பரிணாம வளர்ச்சியில் மாறுதல்கள் புதியனவாக, புத்துலகச் சிந்தனையாக மாறி இருக்க வேண்டும். அப்படியான மாற்றங்களும் நிகழ்ந்தன. ஆனால் பழமையைப் பட்டை தீட்டும் மாறுதல்களும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என்பதுதான் இருபத்தோராம் நூற்றாண்டின் உலக நிகழ்வுகள்.*

*தெற்காசிய நாடுகளைச் சாதி வெறியும், மதவெறியும் பாழ்படுத்திக் கொண்டிருக்கின்றன. இங்கிருந்து மேற்குலகம் பிழைக்கச் சென்றவர்கள் நிலையாகக் காலூன்றிய பின்னர், அங்கும் சாதி, மத வெறிகளைப் பற்ற வைத்துக் கொண்டிருக்கின்றனர். மேற்குலகமும் இனவெறியில் இருந்து முழுமையாக*

விடுபட்டதாகவும் தெரியவில்லை. அண்மையில் (மே, 2022) அமெரிக்கப் பள்ளியில் நடந்த துப்பாக்கிச் சூட்டில் மாணவர்களும், ஆசிரியர்களும் ஆக இருபத்தொருவர் கொல்லப்பட்ட நிகழ்வானது, முழுமையான இனவெறியை அடிப்படையாகக் கொண்டது. வெள்ளை இனக் காவலதிகாரி தன் முழங்காலால் கறுப்பினத்தவரின் கழுத்தை நெறிக்க, "மூச்சு விட முடியவில்லை" என்று முனகிக் கொண்டே உயிர் விட்ட இனவெறி நிகழ்வையும் மறக்க முடியவில்லை. ஆக, இதெல்லாம் எந்த வகையான மாற்றம்? ஒருவேளை மாற்றமே நிகழவில்லையா? 'மாற்றம் ஒன்றே மாறாதது" என்பது உண்மையற்ற தன்மையைக் கொண்டதோ?

ஆப்பிரிக்க நாடுகளில் இருந்து கடத்தி வரப்பட்ட கறுப்பர் ஒருவரை அடிமையாக வாங்கிய இங்கிலாந்தின் வெள்ளை இனத்தவர், அந்தக் கறுப்பரை அடித்துத் துன்புறுத்தி அதில் இன்பம் காண்பவர். இந்த நிலையிலும் அந்தக் கறுப்பு அடிமை, ஒரு நாயை அன்புடன் வளர்த்து வந்தார். மாற்றம் என்பதை என்னவென்று அறியாத அந்த நாயும் தன் எஜமானரான கறுப்பர் மீது நன்றியுடன் குலவிக் கொண்டிருந்தது. இதைப் பார்த்த அந்த வெள்ளைக்காரருக்கு இரத்தம் கொதித்தது. "இவனே அடிமை! இந்த அடிமைக்கு ஓர் அடிமையா?" என்று பொங்கி விட்டார். அந்த நாயை வளர்த்த அந்தக் கறுப்பராலேயே அதைத் தடியால் அடித்து, அருகில் உள்ள குளத்தில் எறிந்து விடுமாறு ஆணையிட்டார். அடிமையான கறுப்பர், தனக்கு ஆதரவாக இருந்து, அன்போடு வளர்த்து வந்த அந்த நாயை அடிக்கத் தயங்கினார். அதைத் தொடர்ந்து அவருக்கு விழுந்த சவுக்கடி, அவரை அந்த நாயை அடித்துக் குளத்தில் போட வைத்தது. மரண வலியில் குளத்தில் மூழ்கும் போது, அந்த நாய் தன் 'எஜமானனை'ப் பார்த்த அந்த கடைசிப் பார்வையை அந்த கறுப்பு 'அடிமை'யால் மறக்கவே முடியவில்லை. ஆழ்மனதின் அந்த வலியோடு அவன் உண்ணாமல், உறங்காமல் இறந்து போனான்.



வாஸ்கோடகாமா, ஆப்பிரிக்காவைச் சுற்றி இந்தியா வந்து சேர்ந்தார். திரும்பும் வழியில், மீண்டும் ஆப்பிரிக்கா சென்று கண்களில் கண்ட பூர்வகுடி கறுப்பின மக்களை எல்லாம் பிடித்துச் சென்று ஐரோப்பாவின் அடிமை வியாபாரத்திற்கு அடி கோலினார். அதாவது, சுதந்திரமான பூர்வ குடிமக்களின் வாழ்வில் 'மாற்ற'த்தைக் கொண்டு வந்தார். அப்படி ஒருமுறை ஓர் இளம் கறுப்பினப் பெண்ணைப் பிடித்தனர். அந்த இளம்பெண்ணின் பின்னழகு அபாரமான அளவுடையது. வியக்கத்தகும் வடிவம்

கொண்டது. அப்பெண்ணைச் சிறைப்படுத்தி இங்கிலாந்து கொண்டு வந்தனர். அவரை காட்சிப் பொருளாக்கி, இரவுக் காட்சிகள் நடத்திப் பெருமளவில் சம்பாதித்தனர். இங்கிலாந்தின் பல நிறுவனங்கள், போட்டிப் போட்டு அப்பெண்ணை விலைக்கு வாங்கிக் காட்சிகள் நடத்திப் பெரும் பணக்காரர்கள் ஆனார்கள். தன் எஜமானன் என்று தன்னிடம் முன்னிறுத்திக் கொண்டவர்களை எல்லாம் பணக்காரர்கள் ஆக்கிய அந்த கறுப்பின இளம்பெண், "இதெல்லாம் எதற்காக நடக்கிறது" என்று தெரியாமலேயே, மதுவாலும், பாலியல் நோய்களாலும் தன்னுடைய இருபத்தி ஆறாவது வயதில் இறந்து போனார். அப்பெண் இறந்த பின்னரும் விடாத இங்கிலாந்தின் 'மனித நேயத்தினர்', அப்பெண்ணின் உடலைப் 'பார்மாலின்' திரவத்தில் ஊறவைத்துக் "காட்சிப் பிணமாக" மாற்றிப் பணம் சம்பாதித்தனர். வரலாற்றின் வடுக்கள் இதைப் போன்று ஏராளம் உள்ளன. இவையும் மாற்றத்தின் வரையறைக்குள் அடங்குவதா?



எங்கிருந்து தோன்றுகின்றன இன, மத, சாதி, வெறிகள் எல்லாம்? இனம், நிறம், மதம், சாதியை வைத்து, "தான் உயர்ந்தவன்" என்று காட்டிக் கொள்ளும் ஆதிக்க வெறியிலிருந்து தோன்றுகின்றன. ஒவ்வொரு சாதிக்கும் அடுத்தடுத்த சாதி, கீழ்சாதி என்கிற ஆணவம். கடைசி சாதிக்கு, அந்தச் சாதி ஆணின் மனைவியே அடிமை. இது சமூகம் சார்ந்தது மட்டுமல்லாமல், மனதின் அடி ஆழத்தில் புதைந்து கிடக்கும் அதிகார வெறி. இந்த அதிகார வெறிதான் சமூகக் கலவரங்களுக்கு எல்லாம் அடிப்படை. "தான் எல்லோருக்கும் மேல்" என்று காட்டிக் கொள்ளும் அதிகாரம் தான் அது. விலங்கினங்களுக்குள் தலைமைப் போட்டி இருக்கும். நீ என்னை விடக் கீழானவன் என்ற அகங்காரப் போட்டி இருக்காது. மனித இனம், இனக்குழுக்கள் காலத்திற்கு முன்பு அப்படித்தான் இருந்தது. மனிதர்கள், விலங்குகள் என்று பிரித்தறிய முடியாவிடினும் அக்காலத்தில் எல்லோரும் மனிதர்கள் தான். இனக்குழுக்கள் ஆனபிறகு

*தலைவன் மிக முக்கியமானவன் ஆனான். இனத்தின் பாதுகாப்பு அவனைப் பொறுத்தது என்பதால் தலைவனுக்குச் சலுகைகள் அதிகம். ஒவ்வோர் இனக்குழுவிலும் இதே நிலை தான். ஆனால் இனக் குழுக்களுக்குள் போட்டி ஏற்பட்டு, தொடர் சண்டைகளாகி, நிரந்தர எதிரிகளாகி, சண்டையில் அடிமைப்படுத்தப்பட்ட இனக் குழுவினர் அடுத்தநிலை மாந்தர். மனித வர்க்கத்தின் ஆண்டான், அடிமை என்னும் பிரிவினை அப்போதுதான் தொடக்கம். அந்த ஆதிக்க மனப்பான்மை தான் இன்றுவரை ஆதிக்க வெறியாக இன, மத, சாதி வெறியாகப் பல்கிப் பெருகி இருக்கிறது. இவை எல்லாமே மாற்றம் தான். மாற்றத்தின் விதை என்ன? அன்பை அழித்திடும் அதிகாரமா?*




*பதினைந்தாம் நூற்றாண்டுக் காலத்தில் ஐரோப்பிய நாடுகளான போர்ச்சுகலும், ஸ்பெயினும் வலுவான கப்பற் படைகளைக் கொண்டிருந்தன. போர்கள் இல்லாத காலத்தில் புதிய நாடுகளைத் தேடுவதிலும், அங்கிருந்து முத்து, வைரம், பட்டு, பருத்தி, மசாலாப் பொருட்கள் இவற்றைத் தேடிக் கொணர்வதிலும் இவ்விரு நாட்டினரும் கவனம் செலுத்தி வந்தனர். கிழக்காசிய நாடுகளில் மேற்சொன்ன பொருள்கள் கிடைக்கும் என்பதை முன்னோர் வழிச் செய்திகளாக இவர்கள் அறிந்திருந்தனர். இதனால் கிழக்கு நோக்கிச் செல்வது ஒரு நோக்கம். மசாலாப் பொருட்களின் மூலமும், எங்கோ ஒரு மூலையில் இருக்கும் இந்தியாவைக் கண்டுபிடிப்பதும் இன்னொரு நோக்கம். அதேநேரம் அங்கு வாழும் மனிதர்கள் காட்டுமிராண்டிகள் என்ற அச்சமும் அவர்களுக்குள் இருந்தது. என்றாலும் நாடு பிடித்தல், வணிகம் என்ற ஆசையால் போர்ச்சுகல், ஸ்பெயின் ஆகிய இரு நாடுகளுக்கும் இடையே சண்டை மூளும் நிலை ஏற்பட்டது. அப்படி நடந்தால் இருநாட்டுக் கப்பற்படையும் சேதமடைந்து விடும் என்ற எண்ணம் சண்டை மூளாமல் காத்து வந்தது. இரு நாடுகளுமே கத்தோலிக்கக் கிறித்துவ நாடுகள் ஆனதால், இதற்கு நடுவர் ஆயமாக இருக்க ரோமன் கத்தோலிக்கத் தலைமை மதகுருவான போப் ஆறாம் அலெக்சாண்டர் (Pope Alexander VI) சம்மதித்தார். கி. பி. 1493 ஆம் ஆண்டு, மே மாதத்தில் ஒரு 'நல்ல' நாளில், பைபிளின் கருத்துப்படி தட்டையாக இருந்த இவ்வுலகத்தை, இவ்விரு நாட்டினருக்கும் போப் பகிர்ந்து அளித்தார். அதாவது தட்டையாகத் தயாரிக்கப்பட்டு இருந்த உலக வரைபடத்தில் அசோரஸ் (Azores) என்னும் தீவை மையமாகக் கொண்டு உலகத்தை இரு பகுதிகளாக அதாவது மேற்கு, கிழக்கு என்று பிரித்தார். இந்தக் கோட்டிற்கு மேலும், கீழும்*

*வடதுருவமும், தென்துருவமும் இருந்தன. வாடிகன் நகரில், 4.5.1493 அன்று வரையப்பட்ட இந்த ஒப்பந்தத்திற்குப் பேப்பல் புல் (Papal Bull) என்று பெயரிடப்பட்டது.*



*அதன்படி மேற்குத் திசைக் கடலில் பயணம் செய்ய ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்த கொலம்பஸ் என்ற மாலுமிக்கும், கிழக்குத் திசைகளில் பயணம் செய்யப் போர்ச்சுகல் நாட்டைச் சேர்ந்த வாஸ்கோடகாமா என்னும் மாலுமிக்கும் அனுமதி அளிக்கப்பட்ட பட்டது. அதன்படி மேற்குத் திசை நோக்கிக் கடலில் சென்ற கொலம்பஸ், பசுபிக் கடலில் பயணித்து, வட அமெரிக்காவின் தெற்குக் கடல் பகுதியில் உள்ள கரீபியன் கடல் பகுதிகளை அடைந்து, அங்கிருந்த ஒரு தீவை இந்தியா என்று (தவறாக) அறிவித்தார். பின்னாட்களில் அது இந்தியா அல்ல என்று தெரிந்ததும் கொலம்பஸ் கண்டுபிடித்த தீவுகள், மேற்கிந்தியத் தீவுகள் (வெஸ்ட் இண்டீஸ்) என்று அழைக்கப்பட்டன.*

*இப்போட்டியில் கிழக்குத் திசை நோக்கிச் சென்ற வாஸ்கோடகாமா, இந்தியாவின் சேர மண்டலக் கடற்கரையான கோழிக்கோடுக் கடற்கரையை, 20.5.1498 அன்று வந்தடைந்தார். இந்தியாவின் காலனி ஆதிக்கத்தின் தொடக்கமாக அது அமைந்தது. 'மாறுதல்' என்பவை இப்படித்தான் நிகழ்கின்றன. உலகமே தன்னுடையதைப் போல் நினைத்துக் கொண்டு மேற்கு, கிழக்கு என்று பதினைந்தாம் நூற்றாண்டில் பிரித்துக் கொடுத்த, கத்தோலிக்கத் தலைமையகம் செய்ததைப் போல, இப்போது செய்ய முடியுமா? நினைத்துப் பார்க்கக் கூட முடியாது. மாற்றங்கள் பின்னோக்கித் திரும்ப மாட்டா என்பதற்கு இவை போன்றவை எடுத்துக்காட்டுகள்.*

*இனக்குழுக்கள், பேரரசு, மக்களாட்சிக் காலம் வரை மாறிக் கொண்டே வந்த மனித சமுதாயம் இன, மத, சாதி வெறிகளுக்குள் சிக்கிச் சீரழியும் செயல்கள் மாற்றத்திற்கு உட்பட்டவையா? மாறாத நிலைக்கு உட்பட்டவையா? இக்கேள்வியை யாரை நோக்கிக் கேட்டாலும் உடனேயே 'மாற்றத்திற்கு உட்பட்டவை' என்பதே 'மாறாத' பதிலாக இருக்கும். ஆனாலும் அவற்றை மாறாத நிலையிலேயே பன்னெடுங்காலமாக வைத்திருக்கும் "பின் அரசியல்" என்னவாக இருக்கும்? சாதி, சமயங்கள் இல்லாமல் மனித சமுதாயம் பன்னெடுங்காலமாக வாழ்ந்து வந்திருக்கிறது. விலங்குகள் தோன்றிய காலந்தொட்டு அதனதன் வாழ்க்கை முறைகளில் மாற்றங்கள் இல்லாமல் அப்படியே வாழ்ந்து கொண்டு வருகின்றன. இடையில் மனித குலத்தில் மட்டும் ஏற்பட்ட மாற்றங்களுக்குப் 'பகுத்தறிவு' என்பதே காரணம் என்பது ஏற்கப்பட்ட ஒன்று. அதையே 'ஆறறிவு' என்று அறிவியல் கூறுகிறது. இந்த ஆறாவது அறிவான பகுத்தறிவைக் கொண்டு, ஒன்றிலிருந்து ஐந்து வரையிலான அறிவு கொண்ட பிற உயிரினங்களை விடத் தங்களைச் சிந்தனையுள்ள உயிரினங்களாக உயர்த்திக் கொள்வது மாற்றமா? அல்லது, பிற உயிரினங்களிடம் இல்லாத இன, மத, சாதிவெறியுடன் ஒருவரை ஒருவர் கொன்று வாழ்ந்து, பிற உயிரினங்களை விட, அறிவில் தம்மைத் தாழ்த்திக் கொள்வது தான் மாற்றமா? அந்த மாற்றம் தான் மாறாத விதியா?*

*உண்மையில் உலகினில் மாறாத விதிகள் என்று எதுவும் உண்டா? என்று கேள்வி எழுந்தால், உலகினில் என்ன, பிரபஞ்சத்திலேயே மாறாத விதிகள் உண்டு என்பது தான் சரியான பதிலாக இருக்கும். ஏன், பிரபஞ்சமே மாறாத விதிதான் என்பதே முழுமையான விடை. மாறாத விதியின் கதாநாயகனே பிரபஞ்சத்தின் 'ஈர்ப்பு விசை' தான். பிரபஞ்ச ஈர்ப்பு விசையுடன் ஒழுங்குமுறை மாறாத அமைப்பினால் தான் பேரண்டமும், அதில் கோடிக்கணக்கான உடுக்களும் (நட்சத்திரங்கள்), அவை ஒவ்வொன்றிற்கும் ஆன கோடிக்கணக்கான துணைக்கோள்களும், ஓர் அச்சு, அட்சரம் பிசகாமல் அப்படியே சுற்றிச் சுழன்று இயங்கிக் கொண்டிருக்கின்றன. 1400 கோடி ஆண்டுகளாக, இந்தப் பேரண்டம் உருவான காலம் தொட்டு, அதே ஒழுங்கமைவில் மாறாமல் இன்று வரை இயங்கிக் கொண்டிருக்கின்றன. இன்னும் பல ஆயிரம் கோடி ஆண்டுகளுக்கு மேலும் அப்படியேதான் இயங்கும். இதுவே "மாறா விதி". "கிழக்கே உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தாலும் நாங்கள் மாற மாட்டோம்" என்று கூறும் வீர வசனங்கள் மனித குலத்திற்கே பொதுவானவை. மாறாதது என்று ஒன்றைக் கூறி, அதைப் போல் நாங்கள் மாற மாட்டோம் என்று கூறும் அதே மனிதகுலம் தான் "மாற்றம் என்பதே மாறாத விதி" என்று அறிவியல் அவதானிகள் போல் கூறிக் கொள்வது, உற்ற 'ஐந்தறிவு'க்குள் அடங்குவது தானே?*

*மாற்றம் என்பது பிரபஞ்சத்தில் நிகழாதது. தேவையில்லாதது. ஒரே ஒரு சிறிய மாற்றம் ஏற்பட்டாலும் பிரபஞ்சமே சிதைந்து விடும். அப்படி மாறாத ஒன்று தான் பிரபஞ்ச விதியாகும். விதிகளுக்கு உட்பட்டவை பிரபஞ்சமே தவிர அதில் தோன்றும் அல்லது தோன்றாத உயிரினங்களுக்கு அல்ல. அப்படி ஏதோ ஒரு கோளில் உயிரினங்கள் தோன்றுவது சாத்தியப் பட்டுவிட்டால் (பூமிக் கோளத்தைப் போல்) அவற்றிற்கு 'ஒருங்கு' அல்லது 'ஒழுங்கு' விதிகள் கிடையாது. அதாவது விதி என்பது உயிரினங்களுக்குக் கிடையாது. விதிக்கப்பட்டவை (பேரண்டம்) அவற்றின் பாதையில் எவ்வித மாற்றமுமின்றிச் செல்லும். சென்று கொண்டே இருக்கும்.*



*விதிக்கப்படாத உயிரினங்கள் 'மாற்றத்திலேயே' சென்று கொண்டிருக்கும். "மாற்றம் ஒன்றே மாறாதது" என்று சொல்லிக் கொண்டே, "எல்லாமே விதிப்படிதான் நடக்கும்" என்றும் சொல்லும் முரண்பாட்டைப் புரிந்து கொள்வதில் மனித வர்க்கத்திற்கு நிறைய முரண்பாடுகள் உண்டு. அவற்றைப் புரியவைக்க சமய, மதக் கோட்பாடுகளால் இயலவில்லை. சில பழமையான சமயங்கள் (சாங்கியம், உலகாயதம், எண்ணியம்) இவற்றைப் பற்றிக் கூறி இருந்தாலும், எல்லாவற்றையும் தவறாகப் புரிந்து கொள்ளும் 'விதிக்கப்படாத' கண்களுக்கு, 'அருள்' புலப்படுவதைப் போலப் 'பொருள்' புலப்படுவதில்லை. ஆதிக்க வெறி என்ற கண்ணுக்குத் தெரியாத 'ஈர்ப்பு விசை'யால் இயங்கிக் கொண்டிருக்கும் வரை, மனித சமுதாயத்திற்குப் பரிணாம அடிப்படையிலான மாற்றங்கள் இல்லை. "மாற்றம் என்பதே மாறாத விதி" என்னும் கோட்பாட்டைக் கூறிக்கொண்டே அதைச் செயலாக்கும் நிகழ்வுகளும் நடந்து விடப் போவதில்லை.*

# இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறைகள்

**முனைவர் வ.தனலட்சுமி,** இணைப் பேராசிரியர்,
சுப்பிரமணிய பாரதி தமிழியற் புலம்,
புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.
*dhanagiri@pondiuni.ac.in*



இயந்திர மொழிபெயர்ப்பின் தற்போதைய பயன்பாடு பெரும்பாலும் தகவல் தொடர்பாகவே இருக்கின்றது. ஏனென்றால், இன்றைக்கு நாம் இணையத்தால் இணைக்கப்பட்ட தகவல் தொழில்நுட்ப யுகத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். நாம் உலகெங்கெங்கும் நடைபெறும் நிகழ்வுகளையும் ஆய்வுகளையும் உடனுக்குடன் தெரிந்துகொள்ள இணையதளங்களை முதன்மையாக நம்பியிருக்கின்றோம். ஆனால் இணையதளங்களின் பயன்பாட்டு மொழியாகப் பெரும்பான்மை ஆங்கிலமும் ஐரோப்பிய மொழிகளுமே இருக்கின்றன. 2022-இல் ஒரு கோடி வலைத்தளங்களை ஆய்வு செய்த W3டெக் (W3tech) என்னும் நிறுவனம் அந்த வலைத்தளங்களில் பயன்படுத்தப்படும் மொழி குறித்து ஒரு ஆய்வறிக்கையை வெளியிட்டது. அதன்படி 62 சதவீதத்துடன் முதல் இடத்தில் ஆங்கிலமும் இரண்டாம் இடத்தில் 5.7 சதவீதத்துடன் இரஷ்ய மொழியும் மூன்றாம் இடத்தில் 3.8 சதவீதத்துடன் ஸ்பானிஷ் மொழியும் வலைத்தளங்களின் பயன்பாட்டு மொழியாக இடம்பெற்றுள்ளன. இவ்வாறாக இருக்கையில் நாம் நம் மொழியில் செய்திகளைத் தெரிந்துகொள்ள அதனை நம் மொழிக்கு மொழிபெயர்க்க வேண்டியுள்ளது.

இந்தியாவில் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட மொழிகள் பேசப்படுகின்றன. இதில் 10% மக்களுக்கு மட்டுமே ஆங்கிலத்தில் பேசவும் எழுதவும் தெரியும். ஆதலால் ஆங்கிலத்திலும் பிற மொழிகளிலும் உள்ள செய்திகளை விரைவாகவும் குறைந்த செலவிலும் மொழிபெயர்க்க இயந்திர மொழிபெயர்ப்பு அவசியமாகின்றது.

மனித மொழிபெயர்ப்பு அதிக நேரம் எடுக்கும், குறிப்பாக குறிப்பிட்ட சொல்லுக்கான பொருளை அகராதியில் தேடவேண்டும் அவற்றைச் சரியான தொடரமைப்பில் அமைக்க வேண்டும். இதனைச் செய்ய அதிக நேரம் எடுக்கும். ஆனால் மனித மொழிபெயர்ப்பைவிட இயந்திர மொழிபெயர்ப்பு மிக விரைவானது. மொழிபெயர்ப்பு மென்பொருள் முழு ஆவணங்களையும் நொடிகளில் மொழிபெயர்க்க உதவுகிறது. ஆதலால் இன்று அரசாங்க ஆவணங்களை மொழிபெயர்க்கவும் சுற்றுலா, திரைப்படம், இலக்கியம்,

இராணுவம், சுகாதாரம், நிதி, சட்டம், மின்வணிகம் போன்ற துறை சார்ந்த மொழிபெயர்ப்புக்கும் இயந்திர மொழிபெயர்ப்பின் தேவை அதிகரித்துள்ளது. இதனால் தான் குகூள் மொழிபெயர்ப்பு (Google Translate) மட்டுமே ஒரு நாளைக்குக் கோடிக்கணக்கான சொற்களை 100-க்கும் மேற்பட்ட மொழிகளுக்கிடையில் மொழிபெயர்க்கிறது. இக்கட்டுரையில் இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறைகள் குறித்து விரிவாகக் காண்போம்.




இயந்திர மொழிபெயர்ப்பு – அணுகுமுறைகள்

இயந்திர மொழிபெயர்ப்புக் கருவியை பொதுவாக விதிசார் அணுகுமுறையிலும் தரவுசார் அணுகுமுறையிலும் உருவாக்குவார்கள். ஆரம்பக் கால இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறையாக விதிசார் அணுகுமுறை திகழ்கிறது. 1980-க்குப்பின் தரவுசார் அணுகுமுறையில் இயந்திர மொழிபெயர்ப்பு மேற்கொள்ளப்பட்டது. கீழ்க்காணும் படம் இதனை விளக்குவதாக அமைகிறது.

இயந்திர மொழிபெயர்ப்பு – அணுகுமுறைகள்

*I. விதிசார் அணுகுமுறை - Rule based Approach*

1. நேரடி – சொல்லுக்குச் சொல் - *Direct Approach*
2. மாற்றிலக்கண விதிசார் முறை - *Transfer Approach*
3. இடைநிலை அணுகுமுறை - *Interlingua Approach*

*II. தரவுசார் அணுகுமுறை - Corpus based Approach*

1. எடுத்துக்காட்டு இ.மொ அணுகுமுறை – *Example based MT Approach - EBMT*
2. புள்ளியியல் இ.மொ அணுகுமுறை – *Statistical MT Approach -SMT*
3. நரம்பியல் இ.மொ அணுகுமுறை - *Neural MT Approach – NMT*

**விதிசார் இயந்திர மொழிபெயர்ப்பு (Rule based Approach):**

*விதிசார் இயந்திர மொழிபெயர்ப்பினை மூன்று அணுகுமுறைகள் வழியாகச் செயல்படுத்தலாம். நேரடி அணுகுமுறை, மாற்றிலக்கண விதிசார் அணுகுமுறை மற்றும் இடைமொழி (Interlingua-இண்டர்லிங்குவா) அணுகுமுறை. ஒவ்வொரு அணுகுமுறைக்கும் தேவையான பகுப்பாய்வின் ஆழம் நாம் நேரடி அணுகுமுறையிலிருந்து இடைநிலைமொழி அணுகுமுறைக்குச் செல்லும்போது அதிகரிக்கிறது, அதே நேரத்தில் நாம் நேரடி அணுகுமுறையிலிருந்து இடைநிலைமொழி அணுகுமுறைக்குச் செல்லும்போது இலக்கணமாற்றத்தின் அளவு குறைகிறது. இதனை வாகோயிஸ் முக்கோணம் சிறப்பாகப் பின்வருமாறு விளக்குகிறது.*

**வாகோயிஸ் முக்கோணம்:**

*பெர்னார்ட் வாகோயிஸ், 1968-ஆம் ஆண்டில் அவர் காலகட்டத்தில் இருந்த இயந்திர மொழிபெயர்ப்பு அணுகுமுறைகளை ஆய்வு செய்து அவற்றை ஒரு முக்கோண வடிவில் வெளிப்படுத்தினார் . இதுவே வாகோயிஸ் முக்கோணம் என்று அழைக்கப்படுகிறது. இது இயந்திர மொழிபெயர்ப்பிற்கான பாரம்பரிய அணுகுமுறைகளையும் அவற்றின் பரிணாமத்தையும் வெளிப்படுத்தி விவரிக்கிறது.*




*வாகோயிஸ் முக்கோணம்*

*விதிசார் இயந்திர மொழிபெயர்ப்பு:*

*விதிசார் இயந்திர மொழிபெயர்ப்பில் இலக்கணம் மற்றும் மொழியியல் அறிவைக் கொண்டு இலக்கண விதிகள் எழுதப்படுகின்றன. மொழிபெயர்ப்பின் பல்வேறு நிலைகளில் இவ்விலக்கண விதிகள் முக்கிய பங்கு வகிக்கின்றன. தொடரியல் பகுப்பாய்வு, சொற்பொருள் விளக்கம், மற்றும் மொழிச் சூழல்*

செயலாக்கக் கருவிகள் பயன்படுகின்றன.மேலும், இவ்வகையான மொழிபெயர்ப்பைச் செயலாக்கம் செய்ய இலக்கண விதிகள் *(grammatical rules)*, இருமொழி அகராதி *(bilingual dictionary)* மற்றும் நிரலாக்கம் *(programs to process the rules)* ஆகியன மிக முக்கியமானவை.

விதிசார் அணுகுமுறையை மூன்று வகையாக பிரிக்கலாம். அவை,

- நேரடி – சொல்லுக்குச் சொல் - *Direct Approach*
- மாற்றிலக்கண விதிசார் முறை - *Transfer Approach*
- இடைநிலை அணுகுமுறை - *Interlingua Approach*

இவ்வகையான மொழிபெயர்ப்பு குறித்து விரிவாகக் காண்போம்.

*I. விதிசார் அணுகுமுறை - Rule based Approach:*

*I. 1. நேரடி மொழிபெயர்ப்பு – Direct Approach:*

மூல மொழியில் உள்ள சொல்லைப் பிரித்து பகுப்பாய்வு செய்து, ஒவ்வொரு சொல்லையும் படிப்படியாக மொழிபெயர்க்கிறது. நேரடி மொழிபெயர்ப்பு ஒரு பெரிய இருமொழி அகராதி தேவைப்படுத்துகிறது. இலக்கு மொழிக்கேற்ற தொடரியல் மாற்றம் செய்யப்பட்டு பகுபத உருவாக்கி கொண்டு இலக்கு மொழியில் மொழிபெயர்ப்பை வழங்குகிறது.




*Direct – நேரடி –சொல்லுக்குச் சொல் (தமிழ்- ஆங்கிலம்)*

*I.2. மாற்றிலக்கண விதிசார் முறை - Transfer Approach*

இதில் மொழிபெயர்ப்பு விதிகளின் தரவுகள் பயன்படுத்தப்படுகிறது. மூலத்திலிருந்து இலக்கு மொழிக்கு விதிகள் ஒன்றோடு பொருந்தும் போது

*அகராதியைப் பயன்படுத்தி மாற்றிலக்கண விதிகளின் (Transfer Rules) அடிப்படையில் மொழிபெயர்க்கப்படுகிறது.*




*மாற்றிலக்கண விதிசார் முறை* - Transfer Approach

*எடுத்துக்காட்டு:*

*I took the book - NP – VP (V-N) -> NP – VP (N - V) -> [ S V O -> S O V மாற்றிலக்கணம்] -> நான் புத்தகத்தை எடுத்தேன்*

*I.3. இடைமொழி இயந்திர மொழிபெயர்ப்பு - Interlingua Approach*

*இடைமொழி இயந்திர மொழிபெயர்ப்பு என்பது பல மொழிகளின் மொழிபெயர்ப்புக்கு இடைமொழியைப் பயன்படுத்தும் ஒரு முறையாகும். இம்முறையில் மூலமொழியில் உள்ள சொற்றொடர்கள் இடைநிலை மொழி வழி இலக்கு மொழிக்கு மாற்றம் செய்யப்படுகின்றது. மூல மொழியை இடைமொழிக்குப் பகுப்பாய்வு செய்கிறோம். பின்னர் இந்த இடைமொழியிலிருந்து இலக்கு மொழியை உருவாக்குகிறோம். இங்கு, ஒவ்வொரு சொல்லின் தன்மையைப் பற்றிய தகவல்களை இடைமொழி அகராதியில் சேமிக்க வேண்டும்.*

*II. தரவுசார் அணுகுமுறை - Corpus based Approach:*

*II. 1. எடுத்துக்காட்டு இ.மொ அணுகுமுறை – Example based MT Approach - EBMT*

*II. 2. புள்ளியியல் இ.மொ அணுகுமுறை – Statistical MT Approach -SMT*

*II. 3. நரம்பியல் இ.மொ அணுகுமுறை - Neural MT Approach – NMT*

*எடுத்துக்காட்டு இ.மொ அணுகுமுறை – Example based MT Approach – EBMT*

*1984 இல் மாகோடோ நாகோவால், எடுத்துக்காட்டு அடிப்படையிலான இயந்திர மொழிபெயர்ப்பு (EBMT) அணுகுமுறை முன்மொழியப்பட்டது. இது ஒப்புமை அடிப்படையில் மொழிபெயர்ப்பைச் செய்கின்றது. இந்த அணுகுமுறையில், பயன்படுத்தப்படும் தரவுகள் ஏற்கனவே மொழிபெயர்க்கப்பட்ட தரவுகளை அடிப்படையாக் கொண்டது. மொழிபெயர்க்கப்பட வேண்டிய ஒரு புதிய வாக்கியத்தைக் கொடுத்தால் ஏற்கனவே உள்ள தரவிலிருந்து ஒரே மாதிரியான வாக்கியக் கூறுகளைக் கொண்ட வாக்கியங்கள் தேர்ந்தெடுத்துக் கொடுக்கும்.*

***புள்ளியியல் அணுகுமுறை – Statistical machine translation Approach (SMT):***

*புள்ளியியல் இயந்திர மொழிபெயர்ப்பு [Statistical machine translation (SMT)] இயற்கை மொழியின் மொழிபெயர்ப்பை இயந்திரக் கற்றல் (machine learning) வழியாக மேற்கொள்கிறது. மனிதனால் உருவாக்கப்பட்ட மொழிபெயர்ப்புத் தரவுகளைக் (parallel corpus) கொண்டு தானாகவே மொழிபெயர்க்கும் நுட்பத்தை நிரல் நெறிமுறை (algorithm) வழியாகக் கற்றுக்கொள்கிறது. இந்த நிரல் நெறிமுறை மூல மொழியிலிருந்து இலக்கு மொழிக்கு மொழிபெயர்ப்பு செய்ய புள்ளிவிவர மாதிரிகளை (statistical language Models) பயிற்றுவிக்க பயன்படுகிறது. பயிற்றுவித்த இந்த மாதிரிகளை வைத்து மூல மொழியை இலக்கு மொழிக்கு மொழிபெயர்க்கலாம். சிறந்த மொழிபெயர்ப்பைச் சாத்தியப்படுத்த பெரிய அளவிலான இருமொழித் தரவு (parallel corpus) தேவைப்படுகிறது.*

*புள்ளிவிவர இயந்திர மொழிபெயர்ப்பில் மிக முக்கியமான கூறுகளாக மொழிபெயர்ப்பு மாதிரியும் (translation model) மொழி மாதிரியும் (language model) மொழிபெயர்ப்பு குறிவிலக்கியும் (Translation Decoder) திகழ்கின்றன.*

***மொழி மாதிரி (language model):***

*மொழி மாதிரியானது இலக்கு மொழியின் தரவிலிருந்து கட்டமைக்கப்படும். இலக்கு மொழியின் மொழிக் கட்டமைப்பை கற்றுக்கொள்ள இது துணைசெய்கிறது. அதன்மூலமாக இலக்கு மொழியின் மொழி ஓட்டத்தை இயல்பானதாய் கட்டமைக்க உதவுகிறது.*

***மொழிபெயர்ப்பு மாதிரி (translation model)***

*மொழிபெயர்ப்பு மாதிரியை உருவாக்க இணையான தரவுகளைக் ( parallel corpus) கொண்டு பயிற்சியளிக்கப்படுகிறது. மொழிபெயர்ப்பு மாதிரியின் நோக்கம் குறிப்பிட்ட மூலமொழியிலிருந்து இலக்கு மொழிக்கான மொழிபெயர்ப்புகளைக் கணிப்பதாகும். இது மொழிபெயர்ப்பின் பொருளைப் பாதுகாக்கப் பயன்படுத்தப்படுகிறது.*

**மொழிபெயர்ப்பு குறிவிலக்கி *(Translation Decoder)***

*இது மொழிபெயர்ப்பு மாதிரி மற்றும் மொழி மாதிரியைப் பயன்படுத்தி மூல மொழியிலிருந்து இலக்கு மொழிக்கு மொழிபெயர்க்கப்பட்ட வாக்கியத்தைக் கண்டறியப் பயன்படுகிறது.*




*புள்ளியியல் அணுகுமுறை - Statistical Approach*

**நரம்பியல் அணுகுமுறை - *Neural Machine Translation Approach (NMT)***

*நரம்பியல் அணுகுமுறை மனித மூளை எவ்வாறு கற்கிறது என்பதைப் பிரதிபலிக்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. காலத்தால் தரவுகள் அதிகரிக்க அதிகரிக்க அதிகத் திறனைப் பெறுகின்றன.*

*நரம்பியல் அணுகுமுறை இயந்திர மொழிபெயர்ப்பு, சொல்லின் நோக்கத்தையும் பொருளையும் புரிந்துகொள்ளும் திறன் கொண்டவை. மொழிபெயர்க்க வேண்டிய ஒவ்வொரு வார்த்தைக்கும் அதன் உறவுகளுக்குமிடையே திசையன்களை (vectors) உருவாக்க பயிற்சி தரவைப் பயன்படுத்துகின்றன, அவை சொல் உட்பொதிப்புகள் (word embedding) என்று அழைக்கப்படுகின்றன. இது ஒரே நேரத்தில், ஒரே மாதிரியான பொருளைக் கொண்ட சொற்கள் ஒன்றாகவும், ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் கொண்ட சொற்கள் வெவ்வேறு கொத்துக்களில் தோன்றும் தன்மையைத் தோற்றுவிக்கிறது*

***நரம்பியல் அணுகுமுறையில் வரிசை மாதிரி (Sequence model):***

*நரம்பியல் இயந்திர மொழிபெயர்ப்பு வரிசை-க்கு-வரிசை செயல்பாடாகத் திகழ்கிறது. ஒரு உள்ளீட்டு வரிசை கொடுத்தல் இது ஒரு வெளியீட்டு வரிசையைக் கணித்து உருவாக்குகிறது. சொற்களின் வரிசையின் நிகழ்தகவைக் கணக்கிடுவதன் மூலம் வரிசை மாதிரி (Sequence model) ஒரு வாக்கிய வரிசையை ஏற்படுத்துகிறது.*

***நரம்பியல் அணுகுமுறையில் குறியாக்கி /குறிவிலக்கி (encoder/decoder)கட்டமைப்பு:***

*நரம்பியல் இயந்திர மொழிபெயர்ப்பு கட்டமைப்பு குறியாக்கி, குறிவிலக்கி என்னும் இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது. குறியாக்கி மூலமொழியில் வரிசையாக அமைந்த சொற்களையும் அவற்றின் உறவுகளையும் பகுப்பாய்வு செய்கிறது. இதன் விளைவாக வாக்கியத்தை சூழல் திசையனாக (context vector) மாற்றியமைக்கிறது. சூழல் திசையன் மூலமொழியில் வரிசையாக சொற்களால் அமைந்த வாக்கியங்களை ஒரு நிலையான-நீளமான திசையனாக சுருக்கியுரைக்கிறது. குறிவிலக்கி அந்த வரிசையில் அமைந்த திசையன்களை எடுத்து முன்னர் உருவாக்கப்பட்ட சொற்களின் அடிப்படையில் மொழிபெயர்ப்பை உருவாக்குகிறது.*




குறியாக்கி /குறிவிலக்கி (encoder/decoder) கட்டமைப்பு

*தற்போது நடைபெறும் இயந்திர மொழிபெயர்ப்புத் திட்டங்கள் அனைத்தும் பெரும்பாலும் நரம்பியல் அணுகுமுறையிலேயே உருவாக்கப்படுகின்றன.*

*முடிவுரை:*

*மொழிபெயர்ப்பு என்பது மொழித்துறை சார்ந்த பணி என்ற நிலையிலிருந்து வளர்ந்து இன்று பலதுறைகள் இணைந்து பணியாற்றும் துறையாக உள்ளது. உலக அளவில் பல்வேறு நிறுவனங்கள் இணையம்வழியாகவும் மென்பொருளாகவும் மொழிபெயர்ப்பு சேவை வழங்குகின்றன. குறிப்பாக, கூகிள், மைக்கிரோசாப்ட், சிஸ்ட்ரன் போன்ற நிறுவனங்கள் இன்று இயந்திர மொழிபெயர்ப்புத்துறையில் தங்களது ஆதிக்கத்தைச் செலுத்தி வருகின்றனர். இயந்திர மொழிபெயர்ப்பு, அதன் பின்னணி, சிக்கல், தொழில் நுட்ப அணுமுறை இவற்றை அறிந்துகொண்டால் நாமமும் இயந்திர மொழிபெயர்ப்பிற்குப் பங்களிக்கலாம்.*

# எம்ஜிஆர் காதல் பாடலில் அரசுத் திட்டங்கள்

## *(சைதையரின் எம்ஜிஆர் படப்பாடல்கள் நுண் ஆய்விருக்கையின் உரைப்பொழிவு)*

***--முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி,***
*எழுத்தாளர், மொழிபெயர்ப்பாளர், பதிப்பாளர்.*



*எம்ஜிஆர் நடித்த நூறாவது படமான ஒளிவிளக்கு படத்தில் அப்போது முதலமைச்சராய் இருந்த அண்ணா அறிமுகம் செய்த அரசின் சிறப்புத் திட்டங்கள் பல இடம் பெற்றன.*

***படமும் பாட்டும்:***

*1968 செப்டம்பர் மாதம் 20 ஆம் தேதி வெளியான வெற்றிப்படம் ஒளிவிளக்கு எம்ஜிஆரின் 100ஆவது படமாகும். இப்படத்தை எம்ஜிஆருக்கு முதல் கதாநாயகன் வாய்ப்பளித்த எஸ் எஸ் வாசன் தயாரித்தார். சாணக்கியா இயக்கினார். இசைத்தட்டின் இரண்டு பக்கமும் பாடும் நாங்க புதுசா கட்டிக்கிட்ட ஜோடிதானுங்க என்ற பாடல் 3.13 நிமிடம் இசைக்கும் மிக நீண்ட பாடல் ஆகும். வாலி பாடல் எழுத எம் எஸ் விஸ்வநாதன் இசை அமைத்தார். இப்பாடலுக்கு படத்தில் எம்ஜிஆரும் ஜெயலலிதாவும் குறவர் போல மாறுவேடம் பூண்டு காவலரிடம் இருந்து தப்பிக்க வேண்டி அவர்கள் முன்பு பாடி ஆடுவர். இந்நடனக் காட்சி, கதையின்படி நரிக்குறவர்கள் கூட்டத்தில் கலந்து மறைந்து வாழ்வதாகக் காட்டப்பட்டாலும் உண்மையில் நரிக்குறவர்களின் பேரன்பைப் பெறுவதற்கான பாடலாக அமைந்தது. பின்னர் நவரத்தினம் படத்தில் எம்ஜிஆர் நரிக்குறவர் வீட்டுப் பெண்ணைக் காதலித்து திருமணம் செய்வதாக இருந்த கதை அம்சமும் எம்ஜிஆர் அண்ணா திமுகவை ஆரம்பித்த பிறகு நரிக்குறவர்களின் வாக்குகளையும் அவர் நடிகராக இருந்த காலத்திலிருந்து அவர்கள் கொடுத்து வந்த தொடர் ஆதரவையும் உறுதி செய்தது*

***கதையும் கருத்தும்:***

*ஒளிவிளக்கு படம் வெளிவந்த 1967 ஆம் ஆண்டு திமுக வெற்றி பெற்று ஆட்சிக்கு வந்து ஓராண்டு ஆகியிருந்த காலம் ஆகும். அண்ணா முதலமைச்சராக இருந்த சமயத்தில் இப்படம் வெளிவந்தது. இப்படத்தின் கதை ஹிந்தியில் வெளிவந்த ஃபூல் அவுர் பத்தர் படக்கதை ஆகும். பூவும் பாறையும் என்பது பூப்போன்ற இளம் விதவையையும் பாறை போல் ஈரம் அற்று இறுகிப்போன இதயம் கொண்ட ஒரு திருடனையும் குறித்தது. அவள் சாகட்டும் என்று தனியாக வீட்டில் விட்டு விட்டுப் போன அவளது நிலையைக் கண்ட ஒரு திருடனின் கல்*



மனதுக்குள் ஈரம் கசிந்ததைக் காட்டுகின்ற கதை அமைப்பைக் கொண்ட இப்படத்தில் இந்திப் படத்தைப் போல திருடன் அந்த இளம் விதவையைத் திருமணம் செய்யவில்லை. மாறாக திருடனும் அந்த இளம் விதவையும் அதியமான் ஔவையார் போல நல்ல நண்பர்களாக இருந்தனர். இது இப்படத்தின் சிறப்பியல்பாகும். ஆண் பெண் நட்புக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாக அமைந்த படம். திருடன் முரடன் ஒருவனைக் கொல்லத் துணிந்தபோது விதவைப்பெண் அவனை அடித்துத் திருத்துகிறாள். அவன் தீ விபத்தில் சிக்கி உயிருக்குப் போராடிய வேளையில் அவனுக்காக இறைவனிடம் மனம் உருகி வேண்டுகிறாள்.

**பாட்டு இடம்பெறும் சூழல்:**

ஒளிவிளக்கு படத்தில் ஹோட்டலில் நடனமாடும் ஒரு பெண் திருடனை ஒரு தலையாகக் காதலிக்கிறாள். அவள் தன்னுடைய காதலை உறுதி செய்து கொள்வதற்காக அவனை வழியில் பார்த்துப் பேசப்போகும் போது அவன் தன்னை போலீஸ் துரத்தி வருவதாகச் சொல்லி அவளை இழுத்துக் கொண்டு குறவர் குடிசைப் பக்கம் போய் ஒதுங்கி குறவர் வேஷத்தில் இருக்கிறான். அப்போது போலீஸ் அங்கு வந்து உள்ளே யார்? என்று விசாரிக்கும் போது இந்தக் குடிசையில் இருப்பவர்கள் புதிதாகத் திருமணம் செய்து கொண்ட இளம் ஜோடி என்று குறவர் கூட்டத் தலைவன் சொல்கிறான். இவ்வாறு சொன்னதும் இந்த இளம் ஜோடி வெளியே வந்து போலீசார் முன்னிலையில் ஒரு குறவன் குறத்தி ஆட்டம் ஆடுகின்றனர்.

**மாறுவேடப் பாடல் காட்சி:**

மாறுவேடத்துக்கு எம்ஜிஆர் ஏன் குறவன் குறத்தி வேடத்தைத் தெரிவு செய்தார் என்றால் இதற்கு முன்பு எம்ஜிஆர் குறவன் வேடத்தில் ராஜா தேசிங்கு படத்தில் பத்மினியோடு சேர்ந்து ஒரு பாடல் காட்சியில் நடித்திருந்தார். 'கொக்கு பிடிப்போம் குருவி பிடிப்போம், காக்கா பிடிக்க மாட்டோம்' என்ற அந்தப் பாடல் ரசிகர் மத்தியில் பேராதரவைப் பெற்றது. அதற்கு முன்பு மதுரை வீரன் படத்தில் கள்ளர் குகைக்குள் போய் அவர்களின் உண்மைகளை ரகசியங்களை அறிந்து வருவதற்காகக் கள்ளரைப் போல் வேடமிட்டு எம்ஜிஆரும் பத்மினியும் ஆடிய 'ஏச்சுப் பிழைக்கும் தொழிலே சரிதானா எண்ணிப் பாருங்க' என்ற பாடல் காட்சியும் ரசிகர்களின் பேராதவரைப் பெற்றிருந்தது. இவ்வாறு எம் ஜி ஆர்

*மாறுவேடம் போட்டு ஆடும் பாடல் காட்சிகள் மிகுந்த வரவேற்பைப் பெற்ற காரணத்தினால் அவரது நூறாவது படத்திலும் நரிக்குறவரைப் போல அவர் மாறுவேடமிட்டு தன் ஜோடியான ஜெயலலிதாவுடன் ஆடுவதாக ஒரு பாடல் காட்சி வைத்திருந்தார். இப்பாடல்களில் இவருடன் ஆடிய பத்மினி, ஜெயலலிதா போன்றோர் நாட்டியத்தில் கை தேர்ந்தவர்கள்.*

***பாடலின் பாடு பொருள்:***

*நாங்க புதுசா கட்டிக்கிட்ட ஜோடிதானுங்க எனத் தொடங்கும் பாட்டை வாலி எழுதினார். இதன் பாடல் வரிகள் அந்தக் காலத்தின் அரசுத் திட்டங்களை வரிசையாக எடுத்துச் சொல்லி இத்தகைய பொற்காலத்தில் நாங்கள் வசிப்பதால் எங்களுக்கு எந்தத் துன்பமும் கிடையாது, நாங்கள் மன மகிழ்ச்சியோடு குதூகலத்துடன் வாழ்கின்றோம், என்று நாட்டு மக்கள் சொல்வதாக மக்களின் பிரதிநிதித்துவக் கருத்தை வெளிப்படுத்துவதாக இப்பாட்டு வரிகள் அமைந்தன. எம்ஜிஆர் தன்னுடைய படத்தில் வரும் பாடல்களை அவர் படித்துப் பார்த்து என்னென்ன கருத்துக்கள் வேண்டும் என்னென்ன கருத்துக்கள் வேண்டாம் என்று அவரே முடிவு செய்வதால் பாடல் எழுதப்பட்டது வேறு ஒருவரால் என்றாலும் கூட கருத்துக்கள் பெரும்பாலும் இவருடையவையாக இருப்பது மரபு.*

***அரசுத் திட்டங்கள்:***

*இனி இப்பாடலில் வரும் கருத்துக்களை, அரசுத் திட்டங்களை வரிசையாகக் காணலாம்*

***1. சீர்திருத்தத் திருமணம்:***

*இப்பாட்டின் முதல் பல்லவியிலேயே ...*

*நாங்க புதுசா கட்டிக்கிட்ட ஜோடிதானுங்க*
*நல்ல பாட்டுப் படிக்கும் வானம்பாடி தானுங்க என்று தொடங்கி பிறகு*

*கண்ணாலே ரகசியம் பேசிக்கிட்டோம்*
*நாங்க ரெண்டு பேரும் காதல் வலை வீசிக்கிட்டோம்*
*சிக்கனமா கல்யாணம் முடிச்சுக்கிட்டோம் - அதைச்*
*சீர்திருத்த முறையில நடத்திப்புட்டோம்*



File name

*என்ற வரிகள் அண்ணா சீர்திருத்தத் திருமணத்தைச் சட்டப்பூர்வமாக்கியதை*

மக்களுக்குக் கொண்டு செல்கின்றன. ஐயரை வைத்துத் திருமணம் செய்வதுதான் இந்துத் திருமண முறை என்ற நிலையை மாற்றி ஐயர் இல்லாமல் ஊர்ப் பெரியவர், குடும்பப் பெரியவர் என வேறு பெரியவர்கள், சான்றோர்கள், அறிஞர்கள், தலைவர்கள் ஆகியோரைக் கொண்டும் அவர்கள் தலைமையிலும் திருமணம் செய்யலாம், இதனைச் சீர்திருத்தத் திருமணம் என்று அழைத்து இதனை சட்டப்பூர்வமானதாக மாற்றினார் அன்றைய தமிழக முதல்வர் அண்ணா. உண்மையில் இந்துத் திருமணத்திற்குச் சாட்சி எதுவும் தேவையில்லை. சூரியன் சந்திரனைச் சாட்சியாக வைத்துக் கூட திருமணம் செய்யலாம். ஆனால் கிறிஸ்தவ, முஸ்லிம் திருமணங்களுக்கு மதப் பெரியவர்கள் மற்றும் அவர்களது சபையின் அனுமதி பெற வேண்டும். மதங்களுக்கு இடையிலே திருமணம் செய்யும்போது சிறப்புத் திருமணச் சட்டத்தின்படி திருமணத்தைப் பதிவு செய்ய வேண்டும். இவ்வாறு இருந்த வேளையில் மதங்களுக்கு இடையிலே திருமணம் செய்தாலும் ஒரே மதத்துக்குள் திருமணம் செய்தாலும் சீர்திருத்த முறையில் திருமணம் செய்தால் அது சட்டப்படி செல்லும் என்ற நிலையை அண்ணாவின் அரசு அறிமுகப்படுத்தியது. இதனைத் தனது பாடல் மூலம் மக்களிடம் கொண்டு சேர்த்தார் எம்ஜிஆர்.

எம்ஜிஆருடைய பாடல்கள் அண்ணாவின் கொள்கை பரப்பும் பாடல்களாகவே இருந்த காரணத்தினால் அண்ணா எம்ஜிஆரை மிகவும் மதித்தார். ஒருமுறை அண்ணாவின் காரில் கருப்பு சிவப்பு கொடி பறப்பதைப் பார்த்த சில பெண்கள் 'நீங்கள் எம்ஜிஆர் கட்சியா?' என்று கேட்டபோது அண்ணா 'ஆமாம்' என்று கூறினார். அப்போது அவருடன் இருந்த சி.வி. ராஜகோபால் என்பவர் 'அண்ணா இது உங்கள் கட்சி. அதில் எம் ஜி ஆர் ஒரு உறுப்பினர்' என்றார் அதற்குப் பதில் அளித்த அண்ணா 'அப்படி இல்லை நாம் மேடையில் பேசினால் அதிகபட்சம் 3,000 பேர் கேட்பார்கள் ஆனால் எம்ஜிஆர் தன் படங்கள் மூலமாக ஒரே நேரத்தில் மூன்று லட்சம் பேருக்கு நம்முடைய கருத்துக்களைக் கொண்டு சேர்க்கின்றார். அதனால் மக்கள், எம்ஜிஆர் என்றால் திமுக; திமுக என்றால் எம் ஜி ஆர் என்று புரிந்து கொண்டுள்ளனர். இதில் நாம் மகிழ்ச்சி அடைய வேண்டுமே தவிர பொறாமைப் படுவதற்கோ வருத்தப்படுவதற்கோ கோபப்படுவதற்கோ எதுவுமில்லை' என்றார்.

***2. குடும்ப நலத்திட்டம்:***

அடுத்த சரணத்தில் ...
'பெத்தாலும் ஒன்று, இரண்டு பெத்துப் போடுவோம் - அதுக்கு
ஒத்துமையா ரெண்டு பேரும் பாடுபடுவோம்

என்ற வரிகள் இடம்பெற்றுள்ளன. இதுவும் அன்றைய அரசின் குடும்ப நலத் திட்டத்தை மக்களிடையே கொண்டு சேர்த்த வரிகளாகும். குழந்தைகள்

இறைவன் கொடுக்கும் பரிசு என்ற ஒரு மூடநம்பிக்கையின் அடிப்படையில் ஒவ்வொரு குடும்பத்திலும் 7, 8, 10, 12, 16 என்று குழந்தைகள் இருந்து வந்த காலத்தில்

நாம் இருவர் நமக்கு இருவர்
ஆசைக்கு ஒன்று ஆஸ்திக்கு ஒன்று

என்று ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பெற்றெடுத்தால் போதுமானது என்ற குடும்ப நலத்திட்டத்தை அண்ணாவின் ஆட்சி வலியுறுத்தியது. இக்கருத்தைப் பரப்ப பிரச்சாரங்களும் மேற்கொண்டன. குழந்தைகள் எண்ணிக்கை குறைக்கப்படும்போது அளவான குடும்பம் வளமான வாழ்க்கை என்ற பிரச்சாரம் தீவிரமாகத் தமிழ்நாட்டில் நடைபெற்றது. இதனால் பெண்களின் உடல்நலம் பாதுகாக்கப்பட்டது. ஒன்றுக்குப் பிறகு இப்போது வேண்டாம் இரண்டுக்குப் பிறகு எப்போதும் வேண்டாம் என்ற வாசகம் இரண்டு குழந்தைகள் பெற்ற பிறகு பெண்கள் வேலைக்குச் செல்லவும் வருமானத்தைப் பெருக்கவும் சுயசார்பு உடையவர்களாகத் திகழவும் உதவியதது. அதற்கு முற்பட்ட காலத்தில் அவர்கள் குடும்பத்தில் பிள்ளை பெறும் இயந்திரங்களாகவே இருந்து 50 வயதிலும் அவர்கள் பிள்ளை பெற்றுக் கொண்டுதான் இருந்தனர். ஒரே வீட்டில் மருமகள் மாமியார் திருமணம் செய்து கொடுத்த மகள் (இவள் பிரசவத்திற்கு வந்திருப்பாள்) என வீட்டில் இரண்டு மூன்று தொட்டில்கள் இருப்பது சகஜமாக இருந்தது. இக்காலத்தில் திமுக அரசின் குடும்ப நலத்திட்டம் நாட்டுக்கு மிகவும் நன்மை தரும் திட்டமாக அமைந்தது. அதனை எம்ஜிஆர் தனது படங்களின் பாடல்களில் சிறப்பித்துக் குறிப்பிட்டு மக்களிடையே இக்கருத்தைப் பரப்பினார். மக்களும் எம்.ஜி.ஆரின் வார்த்தைகளை நம்பினர். மக்கள் அவரை நம்பிக்கை நட்சத்திரமாகக் கொண்டிருந்ததனால் அவர் பேச்சைக் கேட்டால் வாழ்வில் சுபிட்சம் ஏற்படும் என்ற நம்பிக்கை காரணமாக அவரின் பாடல் கருத்தை ஏற்றுக் கொண்டனர்.

***3. படியரிசித் திட்டம்:***

அடுத்த சரணம் ...

படியரிசி கிடைக்கிற காலத்திலே நாங்க
படி ஏறி பிச்சை எடுக்கப் போவதில்லை

என்ற வரிகள் இடம் பெற்றன. 1967க்கு முந்தைய காங்கிரஸ் ஆட்சியின்போது கடுமையான அரிசிப் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது சிலர் வயல் எலியைப் பிடித்துச் சமைத்துச் சாப்பிட்டதாகச் செய்திகள் வந்தன. அதற்குக் காங்கிரஸ் கட்சி அமைச்சர்கள் எலிக்கறி சாப்பிடுவது கிராமங்களில் சகஜம் தான் என்ற பதிலைக் கூறியதும் 'இது பொறுப்பற்ற பேச்சு' என்று மக்கள் கொந்தளித்தனர்.

*இவ்வேளையில் அண்ணா 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ஒரு ரூபாய்க்கு மூன்று படி அரிசி வழங்குவோம்' என்று 1967இல் தேர்தல் பிரச்சாரத்தில் பேசினார். அதை மக்கள் நம்பி வாக்களித்தனர். ஆனால் ஆட்சிக்கு வந்ததும் அரசின் பொருளாதார நிலை வேறாக இருந்த காரணத்தினால்*

*'மூன்று படி லட்சியம் ஒரு படி நிச்சயம்'*

*என்று தெரிவித்தார். இதன்படி ஒரு சில இடங்களில் மட்டும் ரூபாய்க்குப் படி அரிசி வழங்கப்பட்டது. இந்தத் திட்டத்தை அண்ணாவால் நடைமுறைப்படுத்த முடியவில்லை என்றாலும் எம்ஜிஆர் இதனைத் தன்னுடைய பாடலில் வைத்து குறவர்கள் ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி கிடைக்கும் இக்காலத்தில் எங்கும் போய் பிச்சை எடுக்கத் தேவையில்லை என்று பாடி மகிழ்வதாக அமைத்தார்.*



*கே எஸ் கோபாலகிருஷ்ணன் குறத்தி மகன் படத்தைத் தான் தயாரித்து இயக்குவதற்குக் காரணமாக இருந்த ஒரு சம்பவத்தைத் தன் பேட்டியில் குறிப்பிட்டார். ஒரு திருமண மண்டபத்தின் பின் வாசலில் சாப்பிட்ட எச்சிலைகளைக் கொண்டு வந்து கொட்டும் போது அங்கு நாய்களும் குறவர்களும் போட்டிப் போட்டுக் கொண்ட அந்த இலையில் இருப்பதை வழித்துத் தின்றதைப் பார்த்து அவர்களில் ஒருவன் நன்றாகப் படித்து வாழ்க்கையில் முன்னேறி வருவதாக ஒரு படம் எடுக்க வேண்டும் என்று தான் ஆசைப்பட்டதாகக் கூறினார். இந்நிலையிலிருந்த குறவர் சமுதாயம் ரூபாய்க்குப் படி அரிசி கிடைத்ததால் அவர்கள் விலை அரிசி வாங்கிச் சமைத்துச் சாப்பிட்டனர் என்று கூறும்போது அவர்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருந்தது என்பதை அறிய முடிகிறது. பின்னர் எம்ஜிஆர் அண்ணா திமுக கட்சியைத் தொடங்கி ஆட்சிக்கு வந்ததும் அவருடைய ஆட்சியின் மிகப்பெரிய வெற்றிக்குக் காரணமாக இன்றும் கொண்டாடப்படுவது அரிசி பருப்பு மண்ணெண்ணெய் போன்ற அத்தியாவசிய பொருட்கள் விலை அதிகரிக்காமல் ஒரே அளவில் இருந்து வந்ததை இன்றும் மக்கள் போற்றுகின்றனர். எனவே எம்ஜிஆர் ஆட்சியில் ஏழை மக்களும் நடுத்தர மக்களும் விலைவாசி உயர்வு என்ற துன்பத்திற்கு ஆளாகாமல் விலை அரிசி வாங்கி நிம்மதியாகச் சாப்பிட்டு வந்தனர். அண்ணா காலத்தில் செயல்படுத்த முடியாவிட்டாலும் கூட எம்ஜிஆர் தன்னுடைய ஆட்சிக்காலத்தில் குறைந்த விலையில் அரிசி விற்க ஏற்பாடு செய்தார்.*

***4. சட்டம், சமத்துவம்:***

*இன்னொரு சரணத்தில் ...*

*'சர்க்காரு ஏழை பக்கம் இருக்கையிலே - நாங்க*
*சட்டதிட்டம் மீறி இங்கு நடப்பதில்லை*
*எல்லாரும் ஒன்றாக இருக்கையிலே- நாங்கள்*
*எதையும் எப்போதுமே மறப்பதில்லை*

*என்ற வரிகள் அண்ணா முதலமைச்சர் ஆக இருந்த காலத்தில் அவரது அரசு ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும் அரசாக இருந்ததை இப்பாடல் வரிகள் சுட்டிக் காட்டுகின்றன. அனைவரும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு வாழ்க்கை நடத்தினர் என்பதும் மனிதர்களுக்குள் ஏற்றத்தாழ்வு சாதியப் பாகுபாடு இல்லை என்பதும் சுட்டப்படுகிறது. இதனால் சாதி ஆணவம் ஒழிக்கப்பட்டது சட்ட மீறல்கள் தடுக்கப்பட்டன என்ற கருத்து மக்களிடையே போய்ச் சேர இப்பாட்டு உதவிற்று. தமிழகம் அமைதிப் பூங்காவாகத் திகழ்கிறது என்ற கருத்தை இப்பாடல் வரிகளின் மூலமாக எம்ஜிஆர் மக்களிடம் பரப்பினார்.*

***5. குடிசை மாற்று வாரியம்:***

*அடுத்த சரணத்தில் ...*

*குடிசை எல்லாம் வீடாகும் நேரத்திலே - நாங்கள்*
*தெருவோரம் குடியேறத் தேவையில்லை*

*என்ற வரி இடம் பெறுகின்றன. அப்போது குடிசை மாற்று வாரியம் மூலமாக பிளாட்பார வாசிகளுக்கு வீடுகள் கட்டித் தரப்பட்டன. அரசு பல அடுக்கு மாடி வீடுகளைக் கட்டி குடிசைகளில் இருப்பவர்களையும் தெருவோரவாசிகளையும் அங்குக் குடியமர்த்தியது எனவே குடிசை மாற்று வாரியம் குறவர்களுக்கும் வீடுகளை வழங்கியதால் அவர்கள் தெருவில் கூடாரம் அமைத்து அல்லது ஊருக்குப் புறத்தே கூடாரம் அமைத்துத் தங்கி இருக்கும் தேவை ஏற்படவில்லை. அவர்கள் அனைவரும் நன்கு கட்டப்பட்ட மச்சு வீடுகளிலும் கான்கிரீட் கட்டிடத்திலும் தங்கி இருந்தனர். அண்ணாவின் ஆட்சியில் மனிதனின் அடிப்படைத் தேவையான உணவு உடை உறையுள் ஆகிய மூன்றில் குறவர்களின் உணவுப் பஞ்சமும் தீர்ந்தது. உறையுள் தேவையும் தீர்த்து வைக்கப்பட்டது. ஏழை மக்கள் பலருக்கும் இதே சிறப்பு கிடைத்ததனால் எம்ஜிஆரின் இந்தப் பாடலை அவருடைய ரசிகர்களும் மற்றவர்களும் ரசித்துக் கேட்டனர். இவற்றின் உண்மையை உணர்ந்து போற்றினர்.*

*நரிக்குறவர்கள் எம் ஜி ஆர் இருந்தவரை அவரை மிகவும் ஆதரித்தனர். அவருடைய வீட்டுக்கும் ஸ்டுடியோவுக்கும் அடிக்கடி கூட்டம் கூட்டமாகப்*

*போய் அவரைப் பார்த்தனர். சத்யா ஸ்டுடியோவில் டெலிபோன் ஆப்பரேட்டராக இருந்த பெண் ஒருவர் 'எம்ஜிஆரைப் பார்க்க அடிக்கடி நரிக்குறவர்கள் வருவார்கள்' என்று தன் பேட்டியில் குறிப்பிட்டிருந்தார். ஒரு முறை ஒரு நரிக்குறவர் வெற்றிலை போட்ட வாயுடன் எம்ஜிஆர் கன்னத்தில் முத்தம் கொடுத்து விட்டார். எம்ஜிஆர் சிரித்தபடி என்ன இது என்று கேட்டபோது அவர் 'உங்களுக்கு முத்தம் கொடுப்பேன் என்று என் நண்பர்களிடம் நான் சவால் விட்டு வந்தேன்' என்றார் இது போன்ற சவாலை வேறு யாரிடமும் விடாதே என்று எம்.ஜி.ஆர் வேடிக்கையாகச் சொல்லிச் சிரித்து அவர்களைச் சாப்பிட்டு விட்டுப் போகும்படி சொன்னார்.*



*எம்ஜிஆர் மத்திய அரசை எதிர்த்து உண்ணாவிரதம் இருந்தபோது அவருடைய உண்ணாவிரதத்திற்கு ஆதரவளிக்க வந்த நரிக்குறவர்கள் கருப்பு சிவப்பு வெள்ளை பாசிகளை மணியாகக் கோர்த்து எம்ஜிஆருக்கு அன்புப் பரிசாக வழங்கினர். எம்ஜிஆரும் அதனை தன்னுடைய கையில் சட்டைக்கும் மேல் சிரித்தபடியே கட்டிக் கொண்டார். அவரும் நரிக்குறவர்கள் மீது மிகுந்த பாசத்துடன் இருந்தார் நரிக்குறவர்களும் எம் ஜி ஆரிடம் மிகுந்த அன்பு செலுத்தினர்.*

***6. நரிக்குறவர்களின் சிறப்பு:***

*இப்பாடல் அரசின் சிறப்பை மட்டுமே விளக்கும் கொள்கைப் பிரச்சாரப் பாடலாக இல்லாமல் நரிக்குறவர்களின் சிறப்பை விளக்கும் பாடலாகவும் அமைந்தது இதன் இன்னொரு சிறப்பாகும்.*

*நரிக்கொம்பு வித்தாலும் விற்போமுங்க -ஆனால்*
*நரி போல வஞ்சனைகள் செய்ய மாட்டோம்*

*பாசிமணி ஊசி எல்லாம் விற்போ முங்க -ஆனால்*
*காசுக்காக மானத்தையே விற்க மாட்டோம்*

*என்ற சரணம் நரிக்குறவர்கள் மானஸ்தர்கள் என்பதை உறுதி செய்கிறது. குறவர் குலப் பெண்கள் இருட்டுவதற்குள் அவர்கள் தங்கி இருக்கும் பகுதிக்குத் திரும்பி வந்து விட வேண்டும். அவ்வாறு வராவிட்டால் அந்தப் பெண்ணை அவர்கள் கூட்டத்திலிருந்து விலக்கி வைத்து விடுவார்கள். மேலும் நரிக்குறவர் பெண்களும் ஆண்களும் தனித்தனியாக எங்கும் போவது கிடையாது. அவர்கள் மூன்று பேர் அல்லது நான்கு பேர் கொண்ட குழுவாகவே போய் வருவது உண்டு.*

*எனவே இவ்வரிகள் அவர்களின் தன்மானத்தைப் போற்றுகின்றன. இதுவும் அவர்களுக்கு மகிழ்ச்சியை அளித்தது.*

***நரிக்குறவர்களின் செய்தொழில் சிறப்பு:***

*குறவர் நரிக்கொம்பு விற்பதும் ஊசிமணி பாசிமணி விற்பதும் இப்பாடலில் குறிப்பிடப்பட்டது. இவர்கள் நேர்மையானவர்கள் நரி போல் வஞ்சனை இல்லாதவர்கள், மானத்தோடு வாழ்பவர்கள் என்று நரிக்குறவர்களின் சிறப்பும் இப்பாடலில் சுட்டிக் காட்டப்பட்டது. தமது செய்தொழில் நேர்மையும் குல மணமும் பற்றிய வரிகள் அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் சிறப்பையும் கௌரவத்தையும் அளித்தது. இதனாலும் நரிக்குறவர்கள் எம்ஜிஆரை மிகவும் நேசித்தனர்.*

*காசுக்காக மானத்தை விற்கும் சில படித்தவர்களும் பணக்காரர்களும் இருக்கும் இந்நாட்டில் இக்காலத்தில் எளிய படிக்காத குலத்தொழில் ஒன்றை மட்டுமே செய்து வரும் நரிக்குறவர்கள் காசுக்காக மானத்தையே விற்க மாட்டோம் என்று சொல்வது அவர்களின் குலச்சிறப்பைக் காட்டுவதாக அமைந்தது.*

*இவ்வாறு இந்தப் பாடலில் நரிக்குறவர்களின் சிறப்பும் அண்ணா ஆட்சியில் அவர் கொண்டு வந்த சிறப்புத் திட்டங்களும் மக்களுக்கு அண்ணா செய்த நன்மையை அவர்களுக்கு நினைவூட்டும் வகையிலும் திட்டமிடப்பட்ட நோக்கத்துடன் வாலியிடம் எழுதி வாங்கப்பப்பட்டது. இது ஒரு ஜோடி பாடலாக இருந்தாலும் கூட கதையில் எம்ஜிஆர் ஜெயலலிதாவைக் காதலிக்காத காரணத்தினாலும் ஜெயலலிதா மட்டுமே எம் ஜி ஆரைக் காதலித்து வந்ததாலும் இப்பாடலின் பாடுபொருள் காதலாக இல்லாமல் எம்ஜிஆருக்கு அடைக்கலம் தந்த குறவர்களின் சிறப்பையும் ஆட்சியின் சிறப்பையும் சொல்வதாக அமைக்கப்பட்டதன் நுட்பம் தெளிவாகப் புலனாகின்றது.*

*எம்ஜிஆர் படங்களில் அவர் தன்னுடைய பாடலை இரண்டு வயதுக் குழந்தை பாட வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதச் சொல்லிய காரணத்தினால் பல்லவி மிகவும் எளிமையானதாக அமையும். அதற்கு அடுத்து வரும் சரணங்களும் குறிப்பிட்ட நோக்கத்துடன் நல்ல செய்திகளை நல்ல கருத்துக்களை மக்களிடம் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற எண்ணத்தில் கவனமாக அமைக்கப்படும் சிறப்பாக எழுதப்பட்டு சீர் செய்யப்பட்ட பாடலாக ஒவ்வொரு பாடலும் அமைக்கப்படும். அவ்வகையில் இப்பாடலும் விளங்குவதால் 1968 முதல் இன்று வரை 55 ஆண்டுகளாக இப்பாடல் மக்கள் செல்வாக்கு பெற்ற பாடலாக விளங்கி வருகின்றது.*

படம் - ஒளிவிளக்கு
பாடல் - வாலி
இசை - எம் எஸ் விஸ்வநாதன்
நடிப்பு - எம்ஜிஆர், ஜெயலலிதா
வெளியீடு - 20.9. சூஅ

நாங்க புதுசா
நாங்க புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

நாங்க புதுசா
நாங்க புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

ஆ
புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

ஏ சிங்கி
ஏ சிங்கா
ஏ சிங்கி
ஏ சிங்கா



கண்ணாலே
ரகசியம் பேசிக்கிட்டோம்
நாங்க ரெண்டு பேரும்
காதல் வலை வீசிப்புட்டோம்

சிக்கனமா
கண்ணாலம் முடிச்சிக்கிட்டோம்
அதை சீர்திருத்த முறையில
நடத்திப்புட்டோம்

பெத்தாலும்
ஒன்னு ரெண்டு

பெத்துபோடுவோம்
அதுக்கு ஒத்துமையா
ரெண்டு பேரும்
பாடுபடுவோம்

ஊதாரி
புள்ளைங்களை
பெக்க மாட்டோம்
அது ஊரு வம்பை
வாங்கும் படி வைக்க
மாட்டோம்

நாங்க புதுசா
நாங்க
புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

ஊரு விட்டு
ஊரு மாறி போவோமுங்க
ஆனா உங்களாட்டம் பேரு
கெட்டு போகமாட்டோம்

எல்லாருக்கும்
நல்லவரா இருப்போமுங்க
எங்க கொள்கையில
எந்நாளும் மாற
மாட்டோம்

நரிக் கொம்பு
வித்தாலும் விப்போமுங்க
ஆனா நரி போல வஞ்சனைகள்
செய்யமாட்டோம்

பாசி மணி ஊசி
எல்லாம் விப்போமுங்க
ஆனா காசுக்காக
மானத்தையே விக்க
மாட்டோம்

நாங்க
புதுசா நாங்க



புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

படி அரிசி
கிடைக்கிற காலத்துல
நாங்க படியேறி பிச்சை
கேட்க போவதில்லே

குடிசையெல்லாம்
வீடாகும் நேரத்திலே
நாங்க தெருவோரம்
குடியேற தேவையில்லே



சர்க்காரு ஏழை
பக்கம் இருக்கையிலே
நாங்க சட்டதிட்டம் மீறி
இங்கு நடப்பதில்லே

எல்லாரும்
ஒன்னாக நினைக்கையிலே
நாங்க எதையும் எப்பவும்
இங்கு மறைப்பதில்லே

நாங்க புதுசா
நாங்க புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

ஆ
புதுசா கட்டிக்கிட்ட
ஜோடிதானுங்க நல்ல
பாட்டு படிக்கும் வானம்
பாடிதானுங்க

ஏ சிங்கி
ஏ சிங்கா
ஏ சிங்கி
ஏ சிங்கா

## சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai 625 018.
Mob: +91 7010997639

| | நூல்கள் | விலை (Rs.) |
|---|---|---|
| 1. | திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்) | 200 |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | உன்னோடு உரையாடுதல் | 100 |
| 2. | காதல் மொழி | 200 |
| 3. | பார்வையில் பூத்த நிலா | 100 |
| 4. | தேனடையும் வரலாறு | 100 |
| 5. | நுண்கலை மருத்துவன் | 200 |
| 6. | தொடரும் புழுதிக்கால்கள் | 100 |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். | 200 |
| 2. | எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம் | 200 |
| 3. | சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்) | 200 |
| 4. | வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட | 200 |
| 5. | மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர். | 200 |
| 6. | எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி | 200 |
| 7. | எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி | 200 |
| 8. | ஒளி விளக்கு எம்.ஜி.ஆர். | 200 |
| 9. | வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I | 200 |
| 10. | நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I] | 200 |
| 11. | பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II] | 200 |
| 12. | இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். | 200 |
| 13. | முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன் | 200 |
| 14. | இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர். | 200 |
| 15. | எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு | 200 |
| 16. | படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு | 200 |
| 17. | Unique Fandom of MGR | 200 |
| 18. | எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம் | 200 |

19. எம்ஜிஆர் படத்தில்சண்டைக்காட்சிகளின்சுவாரஸ்யங்கள்–I 200
20. எங்க வீட்டுப்பிள்ளை 200
21. எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும் 200

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

1. தலைமை பொறுப்பேற்கலாம் 120
2. இணையத் தமிழ் 150
3. ஊடகச் சட்டங்கள் 250
4. ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ் 200
5. கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்) 200
6. மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்) 200

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

1. பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு 200
2. பெண் தெய்வ வழிபாடு 200
3. தேவேந்திரன் 200
4. மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை) 200
5. இரு நிலத்தில் திருமுருகன் 200
6. முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்) 200
7. வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும் 200
8. யானைக்கடவுள் 200
9. பெண் பூப்பின் புனித வழிபாடு 200

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

1. பாடுபொருளும் பாசப்பொருளும் 250
2. “பூ மர நிழலி”ன் களமும் காலமும் 200
3. “2020 தைமாதத்தில் இன்று” கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு 100
4. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் **கவிதையில் காதல்** 100
5. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள் 200

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு

**முனைவர் செ. இராஜேஸ்வரி**

1. எட்டுத்திக் கும் செல்வீர் 200
2. அவன் கடவுளுக்கு நிகரானவன் 200
3. செக்கச் சிவந்த ரோஜா 200
4. கலீல் ஜிப்ரா னின் “மணலும் நுரையும்” 200
5. கலீல் ஜிப்ரானின் “பாடல்கள் 14” 200

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

1. Kurunthokai 200
2. Agananooru 200
3. Purananooru 200

| | | |
|---|---|---|
| *4.* | Naaladiyaar | *200* |
| *5.* | Aasaarakkovai | *200* |
| *6.* | Thiru Kutraala Kuravanji | *200* |

**தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை**

| | | |
|---|---|---|
| *1.* | குறுந்தொகைக் கவிதைகள் | *200* |

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்)* | *200* |
| *2.* | *கவிதை மொழிபெயர்ப்பு* | *200* |
| *3.* | *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)* | *200* |
| *4.* | *மொழிபெயர்ப்பில் பெயரும் பொருளும்* | *200* |

**தமிழ் இலக்கண நூல்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழில் வேற்றுமை உருபுகள்* | *200* |

**சிறு கதை, கவிதை**

| | | |
|---|---|---|
| *1.* | *அமராவதியின் காதல் - சத்யப்பிரபா* | *200* |
| ***2.*** | *ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா* | *200* |

**மாத இதழ்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழணங்கு மாத இதழ்* | *200* |
| *2.* | *Love Thamizh* | *500* |

**பேராசிரியர் முனைவர் தே. ஞானசேகரனின் நூல்கள்**
**ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

## Moonstone Publication, Madurai

| | | |
|---|---|---|
| *1.* | Emerging Mallarism | *200* |
| *2.* | Festival of lord Indra | *200* |
| *3.* | Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) | *200* |
| *4.* | Re reading of Pallu literature | *200* |
| *5.* | Mallariyan Literature | *200* |
| *6.* | Frontyard without My Dad (Poem) | *200* |

## Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari

## [Moonstone Publication]

| | | |
|---|---|---|
| *1.* | Therapist of the Finest Art | *200* |
| *2.* | Following Dusty Feet | *200* |

## Other Books

| | | |
|---|---|---|
| *1.* | Concepts of Constitution - Dr.S. Kalai Arasu | *300* |
| *2.* | Aranyani By Vijeni (English Novel Part I & Part II) | *200* |

**தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்:** *இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226*